# ஆழ்வார் பாசுரங்களில் உருக்காட்சி

***Alwar Pasurangalil Urukkatchi (Tamil)***




ஆசிரியர் :

**Dr. K.R. ரேவதி**

*தலைமை ஆசிரியை,*

*சரஸ்வதி வித்யா மந்திர், திருவாரூர்.*





**லக்ஷ்மி பதிப்பகம்**

***2/402, கூட்டுறவு நகர், மன்னை சாலை,***

***விளமல் - திருவாரூர் - 613 701.***

முதல் பதிப்பு : **2004**
*1000 பிரதிகள்*
உரிமை : **ஆசிரியர்க்கு**
விலை : **ரூ. 60/-**

This book is published with the financial assistance of
Thirumala Tirupathi Devasthanams under their
"Aid to Authors Scheme" for the religious publication.

லக்ஷ்மி பதிப்பகம்
*2/402, கூட்டுறவு நகர், மன்னை சாலை,*
*விளமல் (அஞ்சல்) - 613 701, திருவாரூர்.*
☎ (04366) 226806



*முன் அட்டை :*

*ஸ்ரீ பூமாதேவி ஸமேத ஸ்ரீ உப்பிலியப்பன்,*
*(தன் ஒப்பார் இல்லப்பன் ஒப்பிலியப்பன்)*
*ஒப்பிலியப்பன் கோயில்.*

*பின் அட்டை :*

*ஸ்ரீ அரவிந்தவல்லி ஸமேத தாமோதர நாராயண பெருமாள்,*
*திருக்கண்ணங்குடி.*

*அச்சிட்டோர் :*

**ஸ்ரீ மூகாம்பிகா ஆப்செட்,**
*81, ரயில்வே ஸ்டேஷன் ரோடு, திருவாரூர் - 610 001.* ☎ 222009

ஸ்ரீ




# ஸ்ரீ வேங்கடார்ய குருகுலம்

அருள்மாரி அருளிச்செயல் ஆய்வகம்

Dr. **A.V. ரங்காச்சாரி,** M.A., Ph.D., B.Lit.,

151, மேலவீதி, சிதம்பரம் - 608 002.


ஸ்ரீமதே ராமாநு ஜாய நம :

---

## அணிந்துரை

ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல்வாழி, ஆழ்வார்கள் எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள், எம்பெருமானுடைய அருளினால் அஞ்ஞானம் நீங்கப் பெற்றவர் என்பதால் இவர்களுடைய ஞானம் ஆழ்ந்துமறைந்து கிடக்கும். எல்லாப்பொருள்களையும் ஆழ்ந்தறியும் ஆற்றல் பெற்றவர்கள். இதனால் ஆழ்வார்கள் எனப்பட்டனர்.

ஆழ்ச்சி அறிவின் மேலது. அறிவிக்கு ஆட்சியாவது பரம்பொருளை உள்ளபடி உணருகை. இதனால் ஆழ்வார்கள் எம்பெருமானுடைய கல்யாண குணங்களில் ஆழங்காற்பட்டனர். அதன் பயனாக வேதத்தாலும் அளவிட்டறிய முடியாத எம்பெருமான் குணங்களை அவனருளால் அறிந்து அனுபவித்தனர். ஆக, ஆழ்வார் - ஆழ்ந்த அறிவினையுடையார் என்னும் பொருளில் "ஆழ்" பகுதியாக வைத்து, அறிவை தொகுத்து பொருளினது ஆழ்ச்சி அறிவின் வாயிலாய், அறிவுடையார் மேலதாக "ஆர்" விகுதி கூடி ஆழ்வார் என வந்தது.

வேதத்தை கடலாக உருவகம் செய்வர். ஸ்ரீமந்நாதமுனிகள் "திராவிட வேத ஸாகரம்" என்று திருவாய் மொழியினை உருவகம் செய்துள்ளார். அதற்கேற்றபடி அதில் மூழ்கி அறியும் அறிவு ஆழ்ந்த அறிவு ஆகும். இதனை நுண் மாண் நுழை புலம் என்பர் திருவள்ளுவர். எனவே தெரிய இயலாத வேதக்கடலுள் ஆழ்ந்து கிடக்கும் அர்த்தங்களை எடுத்து உலகிற்கு வழங்கப்பட்டதே ஆழ்வார்களின் அருளிச் செயலாகும்.

அவ்வருளிச் செயலில் ஆழ்வார்கள் மனத்தாலும், உணர்வாலும் மனம் காணும் உருவகத்தாலும் தம் அனுபவங்களை வெளியிட்டுள்ளனர். இவைகளை புலங்களினடிப்படையில் 1. காட்சிப்புல உருக்காட்சி 2. கேள்விப்புல உருக்காட்சி 3. முகர்வுப்புல உருக்காட்சி 4. நுகர்வுப்புல உருக்காட்சி 5. ஊற்றுப்புல உருக்காட்சி 6. மனஉணர்வு உருக்காட்சி என்று பகுக்கப்பெற்றுள்ளது. இந்த ஆறுபுலன்கள் அடிப்படையில் ஆழ்வார்கள் பாசுரங்களில் அமைந்துள்ள உருக்காட்சிகளை முனைவர் அவர்கள் வெகு அழகாக ஆய்வு செய்து, இந்நூலினை தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கியுள்ளார்கள்.

இந்நூலாசிரியை உருக்காட்சிக் கோட்பாடுகளை திறனாய்வு நோக்கில் நன்குவிளக்கி, இலக்கியப் படைப்பின் இன்றியமையாத உறுப்பாகவும் உணர்த்துமுறை உத்தியாகவும் உருக்காட்சிக் கோட்பாடுகள் விளங்கும் பாங்கைத் தெரிவிக்கிறார் (இயல் 2) ஆழ்வார் பாசுரங்களில் உள்ள காட்சிப்புல உருக்காட்சி அனுபவங்களை ஞாயிறு, கண்கள், உருவம், இறைத்தன்மை, பிறை, நிலவு, மேகம், கடல், மலை, அருவி, வித்து, கொழுந்து, மலர்கள், மழை, ஒளி ஆகிய தலைப்புகளில் காட்டியுள்ளார்.

கேள்விப்புல உருக்காட்சிகளை காலைப்பொழுது, சதங்கை, கிண்கிணி, சங்கிலி, பறவைகளின் ஒலி, சங்கொலி தயிர்கடையும் ஓசை ஆகிய ஒலி நோக்கிலும் முகர்வுப்புல உருக்காட்சிகளை மல்லிகை, துழாய்மணம், கற்பூரம், கமலப்பூமணம் போன்றவற்றாலும் நுகர்வுப்புல உருக்காட்சிகளை கரும்பின் சாறு, நஞ்சு, தேன், பால், நெய், அமுது ஆகியவற்றாலும் ஊற்றுப்புல உருக்காட்சிகளை குளிர்ச்சி, தன்மை, மென்மை, வெப்பம், நடுக்கம் ஆகியவகைகளிலும் மனஉணர்வு உருக்காட்சிகளை இறைவனிடம் பக்தனுக்கு உள்ள உறவுகளாக தாய்சேய் உறவு கணவன் - மனைவி உறவு, வேந்தன் - குடிமக்கள் உறவு, கொடிமரம் - பறவை உறவு, கதிரவன் - தாமரை உறவு, மழை - பயிர் உறவு ஆகிய நோக்கிலும் அதன்பின் துக்க உணர்வு, இறைவனை அடையும் யோகம், இறைஅனுபவம் ஆகியவற்றை ஐம்புலன்களின் அடிப்படையில் ஆழ்வார்கள் படைத்துள்ளதை விவரித்து, மனஉணர்வை வெளிப்படுத்தும் உருக்காட்சிகளே ஆழ்வார்களின் பக்தி நெறிக்கு ஏற்ப அமைந்துள்ளதாக அறிவிக்கிறார்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் உள்ள புராண உருக்காட்சிகளை தசாவதார அனுபவங்களைக் கொண்டு காட்டி புராண உருக்காட்சிகளே மிகுந்து காணப்படுவதாகவும், அதற்குக் காரணம் ஆழ்வார்கள் காலத்தில் பௌத்தம், சமணம் ஆகியவை மேலோங்கி இருந்ததால், அறக்கோட்பாடுகளை வலியுறுத்தி மக்களின் மன ஈடுபாட்டை இறைவன்பால் வளர்க்க வேண்டிய நிலை இருந்தது என்று நிறைவு செய்கிறார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் காணப்படும் உருக்காட்சிகளை ஆய்வு செய்துள்ள இந்நூல் மிகவும் வரவேற்கத்தக்கதாகும். புதிய கோணத்தில் ஆய்வு செய்து சீரிய முடிவுகளைத் தெரிவிக்கும் இந்நூலை கற்றோர்கள் தாம் உகப்பர். கல்விதன்னில் ஆசையுள்ளோர் பெற்றோம் என உகந்து பின்பு கற்பர். புதிய உத்திகளைக் கையாண்டு நூல்படைத்த ஆராய்ச்சி அறிஞர் திருமதி ரேவதி அவர்களுக்கு தமிழ் கூறும் நல்லுறவு மிகவும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. இந்நூலாசிரியை, இதைப்போன்ற அருளிச்செயலில் பல ஆய்வு நூல்களை அளிக்க ஆழ்வார்கள் திருவடிகளை ப்ராத்திக்கிறேன்.

பொலிக, பொலிக, பொலிக.

**அ.வே. அரங்காச்சாரி**

# பொருளடக்கம்

# என்னுரை :

**ப**க்தி இலக்கியங்களில் பழமையும் சிறப்பும் வாய்ந்தவை சைவ, வைணவ இலக்கியங்கள். வைணவ இலக்கியத்தில் நாலாயிர திவ்வியபிரபந்தம் முதன்மை வாய்ந்தது. இது வைணவர்களுக்கு வேதமாக விளங்குகிறது.

செய்யதமிழ் மாலைகள் எனச் சிறப்பிக்கப்பெற்ற இனிய எளிய தமிழில் அமைந்த இப்பாசுரங்கள், பன்னிரு ஆழ்வார்களால் அருளிச் செய்யப்பெற்றவை. ஆழ்வார்களால் தமிழ் பக்தி இலக்கியம் புதிய பரிமாணங்களைக் கண்டது. புதிய இலக்கிய வகைகளையும் உள்வாங்கிக் கொண்டது. இவ்விலக்கியத்தில் ஆழ்வார்களின் இறையனுபவங்கள் கற்பனை நயத்தோடு படைக்கப்பெற்றுள்ளன. ஆழ்வார்கள் தாம்பெற்ற இறையனுபவங்களை உற்றது உற்றபடி மற்றவர்க்கு உணர்த்தக் கையாண்ட உத்திகள் பல. அவற்றுள் உணர்த்துமுறை உத்திகளில் ஒன்று உருக்காட்சி.

மனிதன் எதையும் முதலில் புலன்களைக் கொண்டே அறிகிறான். எனவே ஐம்புலன்களடிப்படையிலும், மனவுணர்வைக் கருத்துப்புலமாகக் கொண்டு ஆறுவகை உணர்வுகளால் ஆழ்வார்கள் தம் அனுபவங்களை வெளிப்படுத்தியுள்ளனர். இவை தவிர புராணங்களைக் கொண்டும் தங்கள் பக்தியுணர்வை வெளிப்படுத்தியுள்ளனர். இந்த உணர்வுகளை உருக்காட்சிக் கோட்பாட்டின் வழி அறிய முற்படுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

நாலாயிர திவ்வியபிரபந்தம் ஸ்ரீமந்நாராயணனைப் பாட்டுடைத் தலைவனாகவும் பக்தியைப் பொருண்மை யாகவும் கொண்டது. இந்நூல் பல்வேறு இலக்கிய வகைகளைக் கொண்டிருந்தாலும் பக்தி இலக்கியம் என்ற அடிப்படையில் ஐம்புல உருக்காட்சிகள், மனவுணர்வு உருக்காட்சிகள் மற்றும் புராண உருக்காட்சிகள் ஆகிய உருக்காட்சிகள் ஆழ்வார்களால் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

ஆழ்வார்கள் பயன்படுத்தியுள்ள உருக்காட்சிகள் பின்னிணைப்பில் கொடுக்கப்பெற்றுள்ளது.

இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட ஆய்வேட்டின் ஒரு பகுதியாகும். இந்நூலை வெளியிடுவதற்கு வேண்டிய பொருளுதவி புரிந்த திருமலை திருப்தி தேவஸ்த்தான அதிகாரிகளுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வேட்டின் ஒரு பகுதியை நூலாக வெளியிட வேண்டும் என்று பேரவாவுடன் தூண்டுதலாக இருந்து துணைபுரிந்தவர்கள். Dr. A.V. ரங்காச்சாரியார் ஸ்வாமி அவர்கள் எந்தெந்த பகுதிகளையெல்லாம் நூலில் சேர்க்க வேண்டும் என்று நூல் வடிவாக்கம் செய்து கொடுத்து உதவியதும் அவர்களே. நூலுக்கு அணிந்துரையும் அளித்துள்ளார்கள் மற்றும் என் நெறியாளர் முனைவர் மு.வள்ளியம்மை அவர்கள். அவர்கள்தான் இந்த ஆய்வேடு நூலாக வெளிவரவேண்டும் என்று என் மனதில் ஆசையை விதைத்தது, அதற்கான உதவிகளையும் செய்தது. எனக்கு நெறியாளராக இருந்து ஆய்வேடு சிறந்து விளங்க தடையின்றி புரிந்த உதவிகளும் மறக்க இயலாதது. எனவே இவர்கள் இருவருக்கும் என் நன்றி உரித்தானது. இந்நூலின் பெருமை இவ்விருவரையுமே சாரும்.

**கி.ரா. ரேவதி**

# இயல் - 1

## ஆழ்வார் அருளிச்செயல்களும் உருக்காட்சிகளும்

**ப**க்தி இலக்கியங்களில் பழமையும் சிறப்பும் வாய்ந்தவை சைவ, வைணவ இலக்கியங்கள், வைணவ இலக்கியத்தில் நாலாயிர திவ்விய பிரபந்தம் முதன்மை வாய்ந்தது. இது வைணவர்களுக்கு வேதமாக விளங்குகிறது.

'செய்ய தமிழ் மாலைகள்' எனச் சிறப்பிக்கப்பெற்ற இனிய எளிய தமிழில் அமைந்த இப்பாசுரங்கள் பன்னிரு ஆழ்வார்களால் அருளிச் செய்யப்பட்டவை. ஆழ்வார்களால் தமிழ் பக்தி இலக்கியம் புதிய பரிமானங்களைக் கண்டது. புதிய இலக்கிய வகைகளையும் உள்வாங்கிக் கொண்டது. இவ்விலக்கியத்தில் ஆழ்வார்களின் இறை அனுபவங்கள் கற்பனை நயத்தோடு படைக்கப்பட்டுள்ளன. ஆழ்வார்கள் தான் பெற்ற இறை அனுபவங்களை உற்றது உற்றபடி மற்றவர்களுக்கு உணர்த்த கையாண்ட உத்திகள் பல. அவற்றுள் உணர்த்துமுறை உத்திகளில் ஒன்று 'உருக்காட்சி.'

மனிதன் எதையும் முதலில் புலன்களைக் கொண்டே அறிகிறான். எனவே ஐம்புலங்கள் அடிப்படையிலும் மன உணர்வை கருத்துப்புலமாகக் கொண்டு ஆறு வகை உணர்வுகளால் ஆழ்வார்கள் தம் அனுபவங்களை வெளிப்படுத்தியுள்ளனர். இவை தவிர புராணங்களை கொண்டும் தாங்கள் பக்தியுணர்வை வெளிப்படுத்தி உள்ளனர். இந்த உணர்வுகளை உருக்காட்சிக் கோட்பாட்டின் வழி அறிய முற்படுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

நாலாயிர திவ்விய பிரபந்தம் ஸ்ரீமந்நாராயணனை பாட்டுடைத் தலைவனாகவும் பக்தியை பொருண்மையாகவும் கொண்டது. இந்நூல் பல்வேறு இலக்கிய வகைகளை கொண்டிருந்தாலும் பக்தி இலக்கியம் என்ற அடிப்படையில்

ஐம்புல உருக்காட்சிகள் மனவுணர்வு உருக்காட்சிகள் மற்றும் புராண உருக்காட்சிகள் ஆகிய உருக்காட்சிகள் ஆழ்வார்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியம் கால மாறுபாட்டிற்கேற்ப பல்வேறு வளர்ச்சியையும் மாறுதல்களையும் சந்தித்து வந்துள்ளது. அறிஞர்கள், இலக்கியத்தைக் கால அடிப்படையில், சங்க காலம், சங்கம் மருவிய காலம், பல்லவர் காலம் சோழர் காலம், நாயக்கர் காலம், ஐரோப்பியர் காலம், இக்காலம் என்றெல்லாம் வகைப்படுத்தி இலக்கிய வரலாறு கண்டனர். தமிழ் இலக்கிய வரலாற்றை நோக்கும் போது அந்தந்த காலத்தில் சிறப்புற்றிருந்த கருத்துக்கள் அந்தந்த கால இலக்கியங்களில் பாடு பொருளாய் அமைந்தன என்பதையும் கண்டுணரலாம். கடந்த இரண்டாயிரம் ஆண்டுகால தமிழ் இலக்கிய வரலாற்றில் இயற்கை நெறிகாலம், அறநெறி காலம், சமய நெறிகாலம், தத்துவ நெறிகாலம், அறிவியல் நெறிகாலம் என்ற ஐந்து காலப்பிரிவுகள் உள்ளதென்பாரும் உளர்.

சமணமும் பௌத்தமும் செல்வாக்குப் பெற்று அறநூற்கருத்துக்கள் வேரூன்றிவிட்டபின், சங்க காலக் கருத்துக்கள் முற்றிலும் திரும்பியும் வராமல் அழிந்தும் விடாமல் பக்தி காலத்திற்கு சிறிது மடைமாற்றம் செய்யப்பட்டன. அதுபோலவே சங்கப்பாடல்களில் காணப்பட்ட உருக்காட்சி என்னும் உத்தியும் பக்திப்பாடல்களில் பெருவளம் பெற்றுவிட்டது. "பல்லவர் காலத்தில் சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமயங்களும் மறுமலர்ச்சி பெற்றன." பக்தி ஒரு இலக்கியமாக மக்களிடையே செல்வாக்கு பெறத்தொடங்கியது. பக்தி இயக்கத்தின் செல்வாக்கு தமிழ்க் கவிஞரை மூன்று வழிகளில் ஆட்கொண்டது. 1. இறைவழிபாட்டினைத் தூண்டும் தோத்திரப் பாடல்களைப் பாடியது ஒரு வகை. 2. அடியார்களின் வாழ்க்கைச் சம்பவங்களை வியந்து பாடியது ஒரு வகை. 3. பக்தி நலங்கனிந்த பெரிய புராணம், கம்பராமாயணம் என்ற காவியங்களை இயற்றியது ஒரு வகை. தோத்திரப்பாடல்கள் என்ற வகையில் ஊனுருகி ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களின் தொகுதியே நாலாயிரத்திவ்யப்பிரபந்தம் ஆகும். "பக்திப்பாடல்கள் என்ற நூல்வகையில்

இதனைபோன்ற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிகமிகச் சிலவற்றைத்தான் காணுதல் கூடும்.'' இறைவனின் மங்கல குணங்களில் ஆழங்காற்பட்டவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார் என்பதற்கு பகவத் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் என்று உறுப்புப் பொருள் கூறப்படுவதுண்டு. இவர்கள் அருளிச் செய்ய திவ்வியப் பிரபந்த பாசுரங்கள் ஏறத்தாழ நானூறு ஆண்டுகள் இடைப்பட்ட காலத்தில் தோன்றியவை என்று இலக்கிய வரலாறு கூறுகிறது.

## ஆழ்வார் அனுபவர்கள்

ஆழ்வார்கள் இறைவனைக் கண்டு அனுபவித்து அவ்வனுபவம் உள்ளடங்காமையால் பாசுரங்களாக வெளிப்படுத்தினர் என்று அவர்களது வரலாறு கூறுகிறது. ''இதனால்தான் ஆழ்வார்களது வரலாறு 'அனுபவங்கள்' என்றும் அவர்களால் பாடப்பட்ட பாசுரங்கள் 'அருளிச்செயல்கள்' என்றும் கூறுவது வைணவ மரபாக உள்ளது.'' ஆழ்வார்கள் புறவாழ்வின் தாக்கங்களிலிருந்து விடுபட்டு இறை அருளே குறிக்கோளாக வாழ்ந்தவர்கள். புறக்கண்களை மூடி, புலன்களை உள்முகமாக திருப்பி அகக்கண்களால் இறைவன் திருஉருவைக் கண்டு இன்புற்றவர்கள். அன்புக்கு ஆட்படும் இறைவன் பக்தர்களின் விருப்பத்திற்கேற்ப கோலம் கொள்கிறான் என்று திருமால் அவதார மகிமை பேசப்படுகிறது. இதையே ''கண்டதே காட்சி கொண்டதே கோலம்'' என்பார். இத்தொடர் ஆழ்வார் அனுபவங்களாலே பெறப்பட்டது என்பர்.

## ஆழ்வார் அனுபவங்களும் உருக்காட்சியும்

பன்னிரு ஆழ்வார்களும் தாங்கள் அனுபவித்த அனுபவங்களை ஐம்புலன்கள் வழியே அறிந்தபடி பாசுரங்களில் வடித்துள்ளனர். இப்பாசுரங்களில் உருக்காட்சி ஆளுகை மிகுந்துள்ளது. சொல்லாண்மை சில நிலையில் உணர்ச்சி வெளியீட்டிற்குத் துணையாவது போல உருக்காட்சி அனுபவங்களின் வாயிலாக, ஒரு மனஅனுபவத்தையும் உருவாக்கும். புலன்கள் செயற்படா நிலையில் அனுமான உணர்விலும் மன அனுபவத்தை உருவாக்கும். இப்படி

உருவாக்கப்படும் அனுபவங்களே உருக்காட்சி. இதைச் சிலர் படிமம் என்ற சொல்லாலும் குறிப்பிடுவர். தொண்டரடிப் பொறியாழ்வார் தமது பிரபந்தத்தைத் தொடங்கும் போதே "காவலிற் புலனை வைத்து என்று தொடங்குகிறார். செவி, வாய், கண் முதலிய புலன்களைச் சிறையில் வைத்து" நமன்தமர் தலைகள் மீதே தாம் நர்த்தனம் செய்வதாகக் களித்துப் பேசுகிறார். இவருடைய வாழ்வில் இவர் சில காலம் இந்திரியங்களுக்கு வசப்பட்டிருந்ததாகவும் அதன் பலனாகச் சிறையிருந்ததாகவும் சொல்லப்படுகிறது. அப்படித் தம்மைக் காவலில் வைக்கக் காரணமாயிருந்த தமது புலன்களைத் தாம் காவலில் வைத்ததாகப் பாடுகிறார்.

> "காவலிற் புலனை வைத்துக் கவிதன்னைக் கடக்கப் பாய்ந்து
> நாவலிட்டுழீதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே" 25

என்ற பாசுர வரிகள் தொண்டரடிப் பொடியாழ்வாரின் வாழ்வியல் அனுபவங்களிலிருந்து முகிழ்த்த மனவுணர்வு உருக்காட்சியாக அமைந்துள்ளது.

இறைவன், தன் அருளை இவ்வுலகிற்கு வழங்க முடிவுசெய்தபோது அதற்குத் தென்திசையிலுள்ள நம்மாழ்வாரைத் தேர்ந்தெடுத்ததாகக் கூறுவர். இதனை இவ்வாழ்வார் தாமும் அறிந்து, தமது முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் காட்சிப்புல உருக்காட்சியாக,

> "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம்
> நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்"[26]

என்ற பாசுரவரிகளில் உணர்த்துகிறார். மேலும், இவ்வாழ்வாருக்கு அளவு கடந்த அதியங்கள் அமைந்தன. ஒப்பற்ற இறைவனைத் தம்முடைய இதயத்தில் அடக்கிக் கொண்டதை மனவுணர்வு உருக்காட்சியாகப் படைக்கிறார். தன்னைக் காட்டிலும் பெரியதொரு பொருள் இல்லாதபடி தானே மிகப் பெரிதாகவுள்ள பொருளல்லவா பரம்பொருள். என் செவிவழியாகப் புகுந்து, என்னுள்ளே அடங்கி நிற்கிறாய் நீ. உன்னை எனக்குள் அடக்கிக் கொண்டுள்ள நானன்றோ பெரியவன் என்ற கருத்தை,

> "புவியுமிருவிசும்பும் நின்கைத்த, நீ என் செவியின் வழி புகுந்து

என்னுள்ளாய், அவிவின்றியான் பெரியன், நீ பெரியை
யென்பதனை யாரறிவார்? ஊன் பருகு நேமியாய் உள்ளு"[27]

என்று மன உருக்காட்சியாகப் படைக்கிறார்.

பேயாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனி" கண்டேன் என்று முதற்பாசுரத்தில் எம்பெருமானுடைய அழகிய திருவுருவத்தைத் தாம் காணப் பெற்றதாகக் கூறி, அத்திருவுருவில் திருவடிகளே தமக்குக் குறிக்கோள் என்பதை முதலிலும் நடுவிலுமாகிய பாசுரங்களில் குறிப்பிட்டுச் சொல்கிறார். இன்றே சுழல்கண்டேன் என்று முதலிலும், பைம்பொன் முடியானடியிணைக்கே பூரித்தென்னெஞ்சே புரி முயன்று தொழுநெஞ்சே... தண்ணலங்கல் மாலையாண் தாள் காரியான் சுழலே தெருந்தன்மேல் கண்டாய் தெளி "வாழும் வகையறிந்தேன் - எங்கள் பெருமானடி சேரப் பெற்று" என்று நாற்பது முதல் அறுபதுவரையிலுள்ள பாசுரங்களில் கூறி, இறுதியில் திட்டத்துக் கோள் முதலை துஞ்சக் குறித்தெளிந்த சக்கரத்தான் தாள் முதலே நங்கட்குச் சார்வு என்று நிறைவு செய்துள்ளார்.

"பூதத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று
தொடங்கி விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே
என்றனளவன்றால் யானுடைய அன்பு"[28]

என்று முடிவுப் பாசுரத்தில் தமது அன்பு மிகுதியைக் குறிப்பிடுகிறார். பொய்கையாழ்வார் "பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சியழுதேன்" என்று தனது மனவுணர்வைக் கூறி உருக்காட்சி படைக்கின்றனர்.

இம்மூவரின் மனவுணர்வையும் அனுபவித்த திருமங்கை யாழ்வார் தமது பெரிய திருமொழியில் திருக்கோவலூர்ப் பதிகத்தில் நான்காவது பாசுரத்தில்,

"ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூறுமடியவர் கட்கு ஆர முதமானான்றன்னை"[29] என்ற வரிக்கு அடியவர் என்றது திருவடிகளையே குறிக்கோளாகக் கொண்டு சிக்கெனப் பற்றியவரான பேயாழ்வாரை என்றும், அன்பு கூறுமடியவர் என்றது பூதத்தாழ்வாரை என்றும், அரும்பிக் கண்ணீர் சோரும் மடியவர் என்றது பொய்கையாழ்வாரை என்றும் குறிப்பதாகக்

கூறுவர்.

இவ்வாறு ஆழ்வார்களது இறையனுபவங்கள் பாசுரங்களில் உருக்காட்சிகளாக மலர்ந்துள்ளதைப் போல, அவர்களது வாழ்வியல் அனுபவங்களும் உருக்காட்சிகளாக வெளிப்பட்டுள்ளமை தெளிவாகிறது.

திருமங்கையாழ்வார் தமது வாழ்க்கையனுபவங்களை சிறந்த மனவுணர்வு உருக்காட்சியாக பாசுரங்களில் வடித்துள்ளார். இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு அவனுக்குத் தொண்டு செய்யும் தன்மையடைந்தமையையும் பாடியுள்ளார். முந்நாட்களில் இன்பத்தில் நாட்டங்கொண்டு நின்றதை,

''வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்தயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர்தம் மொடு
அவர் தருங் கலவியே கருதி''

என்ற பாசுர வரிகளிலும் பின்னர் இறைவனது அருளைத் தேடிப் பெற்றமையை,

''ஒடினே னோடியுய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் திரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்'' [30]

என்ற பாசுர வரிகளிலும் மனவுணர்வு உருக்காட்சியாகப் படைத்துக் காட்டுகிறார்.

பெண்களிடம் மயங்கி உழன்றதை நினைத்து வருந்தியும், பின் அதிலிருந்து எம்பெருமான் திருவருளால் மீண்டு உய்வு பெற்றதுமான அவரது மனவுணர்வு.

சிலம்படியுருவிற் கருநெடுங் கண்ணார்
திறத்தனாயறத்தை மறந்து
புலம்படித்துண்ணும் போகமே பெருக்கிப்
போக்கினேன் பொழுதினை வாளா
அலம்புரி தடக்கையாயனே மாயா
வானவர்க்கரசனே வானோர்

நலம் புரிந்திறைஞ்சுன் திருவடியடைந்தேன்

என்ற பாசுர வரிகளில் மனவுணர்வு உருக்காட்சியாய் வெளிப்பட்டுள்ளது. இவ்வாறு ஆழ்வார்களது வாழ்வியல் அனுபவங்கள் பாசுரங்களில் உருக்காட்சிகளாய் வெளிப்பட்டுள்ளமையை உணர முடிகிறது.

# இயல் - 2

## உருக்காட்சிக் கோட்பாடுகள்

ஒரு இலக்கியப் படைப்பு உள்ளடக்கம் (Content) உருவம் (Form) ஆகியவற்றைக் கொண்டு விளங்குவதைக் காண்கிறோம். உருவம் என்பது கவிஞன் பாட்டை வனையும் முறை யாப்பு என்பதும், நடை என்பதும், வடிவம் என்பதும் இதனைத் தான். கவிதை தனக்குள் அடக்கியிருக்கும் கருத்தே உள்ளடக்கம். இதனைப் பாவிகம் எனலாம், விஷயம் எனலாம், பொருள் எனலாம், கரு எனலாம், உள்ளத்தில் பொங்கி வழியும் அனுபவத்தை உணர்ந்த அளவில் நினைந்த பொருளில் கவிஞன் வெளிப்படுத்தக் கையாளும் இலாவகமே, பாவமே, உத்தியே உணர்த்துமுறை.[1] உருக்காட்சிக் கோட்பாடு உணர்த்து முறை உத்தியைச் சார்ந்தது. இவ்வுத்தி உலக இலக்கியங்கள் அனைத்திற்கும் பொதுவானது. ஆங்கிலத்தில் இக்கோட்பாடு பற்றிய பல நூல்கள் உள்ளன. தமிழிலும் இக்கோட்பாடு வளர்ந்து வருகிறது.

இவ்வியல் இலக்கியம் பற்றியும் அதில் இடம் பெறும் உருக்காட்சியின் தன்மை, வகை ஆகியவை பற்றியும் உணர்த்தத் தலைப்படுகிறது. இலக்கண ஆசிரியர்கள் பெருங்கவிஞர்கள், மேனாட்டறிஞர்கள், தமிழறிஞர்கள் ஆகியோருடைய கருத்துக்கள் கவிஞனுக்கு தான் சொல்ல நினைந்ததை அல்லது தனது அனுபவத்தை உணர்த்துவதற்கு உருக்காட்சி உத்தி எவ்வாறு உதவுகிறது என்பதைப் பற்றியறிய உதவுகின்றன.

### 1. இலக்கியம்

இலக்கியம் என்பது நுண்கலைகளில் ஒன்று. அறிவும்

மனவுணர்வும் இணைந்து தொழிற்பட்டு மக்களுக்கு இன்பத்தை விளைவிக்கும் சிறந்த கலைகள் நுண்கலைகள் எனப்படும். இலக்கியம் என்பது அழகுணர்ச்சி ததும்ப எழுதியவற்றையே குறிக்கும். இலக்கியம் மொழியின் அழகிய செயற்பாடு. இது மக்களின் வாழ்வோடு தொடர்புடையது. ''வாழ்ந்து காட்டும் வாழ்க்கையைச் சொற்களால் கூறுவதே இலக்கியம்''[2] என்றாலும் மனித வாழ்க்கையை உள்ளது உள்ளபடி கூறினால் அதில் சுவையோ பயனோ இல்லாது போய்விடும். எனவே ''வாழ்க்கையை சுவைபட அமையுமாறு விழுமிய மொழியின் வாயிலாக எடுத்துக் கூறுவது இலக்கியம்''[3] எனலாம். இலக்கியம் என்பது வாழ்க்கையைப் பற்றிய ஒரு ஆராய்ச்சி என்றும் கூறலாம். எப்படி வாழ்ந்தால் என்ன விளைவு ஏற்படும் என்பதையெல்லாம் நுணுகி ஆராய்ந்து, அவ்வாறு ஆராய்ந்ததை மனதுக்கு இன்பம் அளிக்கும் வகையிலும் அறிவுக்குப் பயன்தரத்தக்க அளவிலும் இலக்கியவாதி படைத்தளிக்கிறான். ''உயர்ந்த கருத்துக்கள் ஓசையின்பம், ஆழ்ந்து அகன்ற நோக்கு, உணர்ச்சி, கற்பனை, சிறந்தவடிவம், உயிர்த்துடிப்பு, உண்மை இவற்றைப் பெற்று வாழ்க்கையை ஆய்வது எதுவோ அதுவே இலக்கியம் ஆகும்.''[4] வாழ்க்கையிலிருந்து தோன்றும் இலக்கியம் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதையே நோக்கமாகக் கொண்டது. இலக்கு நோக்கி இயங்குவதாலேயே இலக்கியம் எனப்படுகிறது. அதன் குறிக்கோளும் நோக்கமும் பலவகைப்பட்டதாக இருக்கலாம். ஆனால் விளையும் பலன் மக்களின் உள்ள மேம்பாடாக, இன்பத்தையளித்து ஊக்குவிப்பதாக இருக்க வேண்டும். அதனால் இலக்கியத்தின் நோக்கமும் பயனும் ஒன்றையொன்று தழுவிய நிலையிலேயே உள்ளது எனலாம்.

இலக்கியம், கவிதை, செய்யுள் என்று பலவகையாகக் குறிப்பிடப்பட்டாலும் அனைத்தும் செய்யுள் என்பதன் மறு பெயரே - யாப்பு பற்றிய இலக்கணம் கூறும் தொல்காப்பியர்,

> ''நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
> வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே''[5]

என்று செய்யுள் என்ற சொல்லைத் தமது நூற்பாவில்

ஆள்கிறார். எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்றெல்லாம் செய்யுள் உறுப்புக்களைக் கொண்டு செய்யுள் அமையும் விதம் பற்றி இலக்கணம் வகுத்துள்ளார். ஆங்கில அகராதி ஒன்று கவிதைக்குப் பொருள் கூறுங்கால்,

> "கவிஞனுடைய உயர்ந்த எண்ணத்தை வெளியிடும் கலைநலம் வாய்ந்த பாடலே கவிதை" 6

என்ற விளக்குகிறது. இலக்கியம் என்பதற்குப் பொருள் கூற முனைவதும் அதன் தன்மையை வரையறை செய்வதும் காலம் காலமாக இருந்து வருவதே. காலத்துக்குக் காலம் இலக்கியங்கள் வளர்ச்சி பெற்று வருவதால் அதற்கான இலக்கணங்களும் வளர்ந்து வருகின்றன. இலக்கியத் தோற்றத்துக்கான மூலகாரணத்தை ஆராய்ந்தால் "நிகழ்ச்சி அதில்தோயும் அவன் அறிவு, அதனைப் பெருக்கும் அவனது கற்பனை, என்ற மூன்றும் தாம் இலக்கியம் தோன்ற வழி வகுக்கின்றன" 7 என்று அறியலாம். இலக்கியத்தின் தோற்றுவாய் பற்றிய ஆராய்ச்சிகளை அறிஞர்கள் மேற்கொள்கின்றனர். மெதுவாகக் கலைகளின் தோற்றத்திற்கான காரணம் மனித முயற்சி என்றாலும் அதை நான்காகப் பகுத்துணர்ந்து திறனாய்வாளர்களின் வழிநின்று பார்த்தால்,

1. தன்னுணர்ச்சியை வெளியிடும் விருப்பம்
2. பிறருடைய வாழ்விலும் செயலிலும் நமக்கு உள்ள அக்கறை
3. உண்மையுலகில் உள்ள ஆர்வமும் அதை ஒட்டிக் கற்பனையுலகினைப் படைப்பதில் உள்ள ஆர்வம்
4. ஒலி, கோடு, வண்ணம், சொல் முதலியவற்றுக்கு அழகிய வடிவம் தந்து அமைப்பதில் உள்ள ஆசை [8]

இவற்றுள் முதலிரண்டுமே உணர்ச்சி, கருத்து என்னும் உறுப்புக்களாக இலக்கியத்தில் அமைவன. மூன்றாவது, கற்பனை என்னும் உறுப்பாக அமைவது. நான்காவது, இலக்கியத்திற்கு வடிவம் என்னும் உறுப்பாக அமைவது. இவ்வாறு, கலைகளின் தோற்றம் பற்றிய முடிவுகள்

கூறப்பட்டாலும் இலக்கியம் வாழ்வின் ஒரு பகுதியாக விளங்குகிறது. அது வாழ்க்கையின் போக்குகளுக்கேற்ப மாறக்கூடியதாயும், வாழ்க்கையின் மாற்றங்களுக்குக் காரணமாயும் அமைகிறது. இலக்கியம் என்பதை இன்ப இலக்கியம், பயன் இலக்கியம் என்று இருவகையாகப் பகுத்தால் இலக்கியத்தின் நோக்கத்தை அறியலாம். இன்ப இலக்கியம் இன்பம் பயப்பதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டிருக்கும். பயன் இலக்கியமோ அறக்கருத்துக்களை நல்கி மக்களை நல்வழிப்படுத்துதலை நோக்கமாகக் கொண்டிருக்கும். ஒரு இலக்கியத்தைப் படித்து முடித்தபின்பு ஏதோ ஒன்றனைப் பறிகொடுத்து விட்டதைப் போன்றும் அல்லது நம்மோடு அதிலுள்ள நிகழ்ச்சி சேர்ந்து கொண்டதைப் போன்றும் தோற்றமளிக்கின்ற ஓர் உணர்வு நம்முள் எழ வேண்டும். அந்த உணர்வைத் தோற்றுவிப்பது இலக்கியமாகும். [9] பயனை நோக்கமாகக் கொண்ட இலக்கியங்கள் காலத்தைக் கடந்து நிலைத்து நிற்கும் தன்மை வாய்ந்தவை. இவ்வாறு நிலைபெறுவதற்குப் பொருண்மை மிக அடிப்படையானது. சிறந்த, உயர்ந்த பொருண்மை இருந்தால்தான் எந்த நோக்கத்திற்காக இலக்கியம் படைக்கப்படுகிறதோ அந்த நோக்கம் வெற்றிபெறும். [10] விளைவுக்கு எவ்வாறு விதை நன்றாக இருக்கவேண்டுமோ அதுபோலவே சிறந்த பொருண்மையை அமைத்துக்கொள்ளுதல் இலக்கியத்தின் வெற்றிக்கு வழிவகுக்கும். இருப்பினும் கவிதை என்பது எண்ணங்களின் வடிகால் என்று கொள்வதற்கும் இடமுண்டு. தன் உணர்ச்சியை வெளிப்படுத்த வேண்டுமென்ற மனிதனின் விருப்பமே கலையின் தோற்றத்திற்கான அடிப்படைக் காரணங்களில் முதன்மையானது. கலையின் தோற்றமும் வளர்ச்சியும் பயில்வோனிடம் நிறைவுபெறுகிறது. ஆசிரியனின் நோக்கமும், கற்போனின் பயனும் நாணயத்தின் இரு பக்கங்களாக இலக்கியத்தில் பொருந்தி அதன் இயல்புக் கூறாக அமைகின்றன. [11] படைப்போனின் நோக்கம், பயில்வோனிடம் நிறைவேறும் போது அவ்விலக்கியம் பயனுடையதாகிறது. பொதுவாக எல்லா இலக்கிய ஆக்கங்களும் ஏதேனும் ஒரு நோக்கத்துடனேயே படைக்கப் படுகின்றன.

இப்படைப்பாசிரியரின் நோக்கத்திற்கேற்பவும் இலக்கிய இயல்பு மாறுபட்டு அமைகின்றது. அறமுணர்த்தலும், அறிவுறுத்தலும், சீர்திருத்த நோக்கமும் பல படைப்புகளில் அடிநாதமாக அமைகிறது. இன்புறுத்தலும், வழிப்படுத்தலும், கருத்தை உணர்த்தலும், உணர்வைத் தூண்டலும், அறிவைப்பெருக்கலும் இலக்கியப் பொதுப்பயன்களாகும்.

இலக்கியம், பொருள் எளிமையும் கருத்துத்தெளிவும் கொண்டு கல்வியின் முழுமையும் புலப்படும் தெளிந்த நீரோடையாகவும் அமைவதுண்டு. கற்குந்தோறும் புது ஆக்கங்கள் காட்டி, இயல்புப் பன்மையளிப்பதும் உண்டு. இருவேறு இலக்கிய வகையின் இயல்பாக இது அமைவதோடு ஒரே இலக்கியத்தைப் பல வகையாக அணுகும் வாய்ப்பும் கற்போருக்கு அமைகின்றது.

### 1.1 கவிதையின் வடிவம்

மனிதனோ, மிருகமோ எந்த உயிரினமாக இருப்பினும் உறுப்புகள் ஒழுங்காக ஒருங்கிணைக்கப் பட்டிருந்தால்தான் அது உருவம் அல்லது வடிவம் எனப்படும். அதுபோலத்தான் கவிதையும், செய்யுள் உறுப்புகள் முப்பத்தியாறு என்று தொல்காப்பியர் செய்யுளுக்கு உறுப்புக்கள் கூறுவதிலிருந்தே கவிதைக்கு வடிவம் உண்டு என்று தீர்மானிக்கலாம். வடிவம் இல்லாமல் கவிதை இல்லை.

*"Poetry Cannot exist without form"* [12]

என்பது உண்மை என்ற போதிலும் உறுப்புக்கள் ஒழுங்கு பட அமைந்து வடிவத்தைக் கொடுப்பது போலவே அவ்வுடலுக்கு உயிர்போல் விளங்குவது பொருள். கவிதைக்குப் பொருளே உயிர்நாடி, பொருளற்ற கவிதை உயிரற்ற உடல் போன்றது. இக்கருத்தை,

"எழுத்து முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்" [13]

என்று தொல்காப்பியரும்,

"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல

சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்'' [14]

என்ற நன்னூலாரும் குறிப்பிடுவர். இந்நூற்பாக்களிலிருந்து செய்யுள் உறுப்புக்கள் ஒன்று சேர்ந்து கவிதைக்கு வடிவத்தைக் கொடுக்கிறது. பொருளானது கவிதைக்கு உயிருட்டுகிறது என்றாலும் கவிஞனது உணர்ச்சியே கவிதைக்கு அழகூட்டுகிறது என்பதை உணர முடிகிறது. உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய மூன்றும் கூடி ஒவ்வொரு கலைக்கும் இன்றியமையாத உறுப்புகள் என்று துணியலாம்.

### 1.2 அனுபவம்

கவிஞன் அடையும் அனுபவங்கள்தான் கவிதைக்கான வித்து. அனுபவம் என்ற விதையிலிருந்து விளையும் கவிதை படிப்பவர் மனதில் எளிதில் இடம் பிடித்து விடுகிறது. புலவரின் அனுபவம் என்பது எளிதில் வரையறுக்கத்தக்கதன்று. ஏனெனில், அந்த அனுபவத்தில் புலவரின் மனம் ஒரு பொருளை மனத்தில் கொண்டதும் உண்டு. அந்தப்பொருளில் அவர் மனம் கொடுத்ததும் உண்டு. கொண்டதும் கொடுத்ததுமாகிய இரண்டும் பல்வேறு வகையில் அமையலாம். [15]

கவிதையில் கையாளப்படும் பாடுபொருள் அதில் ஊடாடி நிற்கும் அனுபவம் படிப்போனுக்கு வாழ்வில் நடந்தாக இருக்கலாம். அல்லது தான் கண்ட மற்றொருவனது அனுபவமாக இருக்கலாம். அல்லது தனது இளமைப் பருவத்தில் இயற்கையின்பால் மனம் ஈடுபட்டு மகிழ்ந்த அனுபவமாக இருக்கலாம். உலக வாழ்வில், வாழ்க்கையின் வேகத்தில் இயந்திரத்தைப் போல வாழ வேண்டிய சூழ்நிலையில் தள்ளப்பட்டவனையும் இந்தக் கவிதை இலக்கியமானது மீட்டுருவாக்கம் செய்கிறது. கவிஞன் தன் ரசனை மிகுந்த கண்களையும் மனத்தையும் படிப்பவனுக்கு அளித்து உலகின் அழகை சில நிமிடங்களில் சுவைக்கச் செய்கிறான். உலக அனுபவங்களைப் படிப்பவனுக்கு ஊட்டுகிறான். அனுபவங்கள் ஐம்புலன்களை அடிப்படையாகக் கொண்டவை. அவ்வனுபவங்கள் வாயிலாக

வரும் அறிவினைப் புலனுணர்வு அல்லது புலன்காட்சி (Perception) என்பர். புலன்காட்சி கவிஞனின் உள்ளத்தில் எண்ணற்ற கருத்தியல் வடிவங்களைப் (Images) படைத்துத் தொகுத்து வைக்கிறது. அதனால் பின்னர்ப் புலன்கள் வாயிலாக அன்றிக் கருத்தளவிலும் ஒரு பொருளை எண்ணி அனுபவிக்கக் கூடிய ஆற்றல் மனிதனுக்கு உண்டாகிறது. அந்த ஆற்றலின் வளர்ந்த நிலையே கற்பனைத் திறனாகிறது [16] எனவே அனுபவம் என்ற விதையிலிருந்து பல்கும் கிளைகளாகக் கற்பனை, உணர்ச்சி, ஒத்துணர்வு ஆகியவை விளங்குகின்றன என்று கொள்ளலாம்.

### 1.3 கற்பனை

கவிதையாக இருந்தாலும் பெருங்காவியமாக இருந்தாலும் நாடகம், புதினம், சிறுகதை என்ற எதுவாக இருந்தாலும் கற்பனைப் பண்பு அனைத்திற்கும் இன்றியமையாத ஒன்று. இலக்கியங்கள் அனைத்தும் உணர்ச்சிகளின் நிலைக்களன்களாக இருக்கின்றன. இலக்கியத்தை உணர்ச்சியும் கற்பனையும் சிறப்படையச் செய்கின்றன. கதிரவனைக் காணும் நம் மனத்தில் கனவிலும் தோன்ற முடியாத கற்பனைகள் கவிஞன் மனத்தில் தோன்றுகின்றன. அந்த எண்ணங்கள் வெறும் நினைவுக் கோவைகள் அல்ல. அவை அவன் மனதில் ஆழ்ந்த அடித்தளத்திலிருந்து தோன்றி உணர்ச்சிப் பெருக்கைக் கிளப்பிவிடும் அமுத ஊற்றுக்கள். அந்த உணர்ச்சிப் பிடிப்பிலிருந்து மீண்ட பிறகே கவிதை பிறக்கிறது. கவிதை வடிவாக அக்கற்பனையிலிருந்தே கவிஞன் அனுபவித்த கற்பனை உணர்ச்சியை நாமும் பெறுகின்றோம் [17] கற்பனை என்பதன் பொருள் அறிவுக்கு எட்டாதது, சொற்களாலும் உணர்த்த முடியாதது, அதன் அழகையும் பலனையும் உணரமட்டுமே முடியும். கவிஞன் தான் அனுபவித்ததையெல்லாம் நமக்கு உணர்த்துவதற்குக் கற்பனையைத் துணைக் கொள்கிறான். கற்பனை அடிப்படையாக அமைந்து புதிய வடிவினைப் படைக்கத் தூண்டுகிறது. பொருளோ, கருத்தோ, உணர்வோ தொடர்புள்ள மற்றொரு காட்சியினை இணைத்துப் பார்ப்பதும்

கற்பனைதான். ஒரு காட்சியைக் கண்ணுற்ற கவிஞன் தன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளைச் சித்தரிப்பதும் கற்பனைதான். இதனைத்தான் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று மூன்று வகையாகப் பகுப்பர். [18]

கற்பனை என்பதற்கு எத்தனை விளக்கங்கள் கூறினாலும் எத்தனை வகைகளாகப் பிரித்தாலும் அதனை வரையறைக்குள் அடக்க முடியாது. இது மன வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகிறது. கற்பனை என்பது புலன்கள் நேரே ஒரு பொருளை நினைவிற்குக் கொண்டு வந்து அப்பொருளிடத்து மீண்டும் அனுபவத்தை ஏற்றவல்ல ஒருவகை ஆற்றலாம் [19] கவிஞர்கள் தனது கவிதையை சமுதாயத்திற்கு ஒருகாலக் கண்ணாடியாக மட்டும் படைப்பதில்லை. மக்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டுவதுடன், எப்படி இருக்கவேண்டும் என்ற அவனது விழைவும் கவிதையில் அமைகிறது. கவிஞன் கற்பனை செய்தல் பகற்கனவு காண்பதை யொத்தது. கனவு காண்பவர்கள் உள்ளதை உள்ளவாறு காண்பதில்லை. உள்ளம் விழையுமாறே காண்கின்றனர். நடந்த நிகழ்ச்சிகள், சிலவற்றின் அடிப்படையின் மேல் நடக்க வேண்டியவற்றைச் சேர்த்துக் காண்கின்றனர். நடக்க வேண்டியவற்றிலும் நம் உள்ளம் விரும்பும் வகையில் அமைத்துக் காண்கின்றனர். [20] இதனால் தான் கவிதை வெறும் முருகியலுணர்வை மட்டும் தருவதோடு நிற்காமல் சமுதாயத்தின் மனமாற்றத்திற்கும், எழுச்சிக்கும் கருவியாகிறது. இது சரித்திரம் (வரலாறு) கூறும் உண்மை இதுவே கவிதையின் வெற்றி.

### 1.4 உணர்ச்சி

இலக்கியம் என்பது உணர்ச்சியும், கற்பனையும் விரவிக்கிடப்பது. படைப்பாளி தான் பெற்ற அனுபவத்தை அல்லது தனது இலக்கியப் பாத்திரத்தின் உணர்வைக் கற்பனையோடும் மெய்ப்பாடுகளோடும் படைக்கும் போதுதான் அது இலக்கியமாகவே கருதப்படுகிறது. ஆதி கிரேக்கர்களே கவிதைக்கலை என்ற சொல்லைப் பயன்படுத்தினர். கலைகளெல்லாம் உணர்வை வெளியிடும் சாதனங்களே. கவிதையும் உணர்வை நிரல்படக் கோர்த்து

ஒலிகளால் வெளியிடுகின்றதாதலால் கலையாகின்றது. இவ்வுணர்வு மனிதனிடம் மறைந்து கிடக்கும் முருகியலுணர்வைத் தட்டி எழுப்புகிறது.[21] ஐம்புலன்கள் வாயிலாக கலைஞன் பெறும் உணர்வுகளும் அடையும் இன்பங்களும் அவற்றிற்கு உட்பட்ட அல்லது மேற்பட்ட அனுபவங்களும் அவன் படைப்பில் வெளிப்படுகின்றன. கலைப்படைப்பில் உணர்ச்சிப் பெருக்கை வெளியிடும் ஒரே நெறி புறநிலை இணைப்பு (Objective Correlative) என்பது தான். அதாவது பொருட்களின் ஒரு தொகுதி, ஒரு சூழ்நிலை, நிகழ்ச்சிகளின் ஒரு சங்கிலித் தொடர் என்பன குறிப்பிட்டதொரு உணர்ச்சிப் பெருக்கைத் தோற்றுவிப்பதற்காக முறைமரபாக (Formula) இருக்க வேண்டும். அவ்வாறு படைக்கப்பட்ட புற அமைவுகள் புலனுணர்வார்ந்த அனுபவத்தில் முடிவாகக் சேர்க்கப்பட்டு வழங்கப்படும் போது உடனடியாக உணர்ச்சி தோற்றுவிக்கப்படுகிறது.[22]

உணர்ச்சியின் தோற்றுவாய் எவ்வாறு இருந்தாலும் உணர்ச்சியின் வெளியீடாக மட்டும் கலை அமையாது அறிவின் புலப்பாடாகவும் அறத்தின் பயன்பாடாகவும் அமைவதால் அது அழகும் நிறைவும் உடையதாய் நிலைத்திருக்கிறது[23] உணர்வுகள் என்பது தேடிப்பிடிக்க வேண்டிய பொருள் அல்ல. மனிதர்களாகப் பிறந்த அனைவருக்கும் கடலலைகளைவிட அதிகமான உணர்வலைகள் மனத்தில் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கின்றன. இந்த உணர்வுகள்தான் மனிதனைச் சிறந்த வாழ்வு வாழச் செய்கிறது. இலக்கியம் படைக்கச் செய்கிறது. சுவைக்கச் செய்கிறது. கலைகளுக்கு அடிப்படையானதும் அவசியமானதுமாக விளங்குவது உணர்ச்சி, கவிதையை நாம் அனுபவிக்க வேண்டுமானால் கவிதையை இயற்றும் கவிஞனின் உணர்ச்சி, அதில்வரும் கற்பனைமாந்தரின் உணர்ச்சி, அதைப்படிக்கும் நம் உணர்ச்சி ஆகிய மூன்றும் ஒன்றும் பொழுதே கவிதையனுபவம் ஏற்படுகிறது.[24] உணர்ச்சிகள் இல்லாத கவிதைகள், படிப்பவரின் மனத்தில் எந்த வினைவையும் ஏற்படுத்தாது. வெறும் சொற்களின் கோவையாக மட்டுமே நிகழும். நாளுக்கு நாள் நிமிடத்திற்கு

நிமிடம் மாறிக் கொண்டிருக்கும் வாழ்க்கையில் பெரும்பாலோர் தங்கள் துன்பங்களுக்கிடையேயும் இன்பங்காண வேண்டும் என்ற உயரிய நோக்கத்தின் அடிப்படையில்தான் கவிதை மற்றும் கலைகள் படைக்கப்படுகின்றன என்று உறுதியுடன் கூறலாம்.

### 1.5 ஒத்துணர்வு

பிற உயிரின் இன்பதுன்பத்தைத் தன் இன்பதுன்பம் போல் உணரும் உணர்ச்சியை ஒத்துணர்வு என்று குறிப்பர். இது கலைஞனிடத்தில் சிறந்து விளங்குகிறது. இதனால்தான் புலவர் தம் துன்பத்தையும் கற்பனை செய்து பாடவல்லவராக விளங்குகிறார்.[25] இவ்வுணர்வுதான் இலக்கியங்களில் காணப்படும் துன்ப நிகழ்வுகளைப் படிக்கும்போது நம்மைக் கண்ணீர்விட்டு மனம்கரையச் செய்கிறது. இன்பநிகழ்வுகள் மனத்தை மகிழ்ச்சி கொள்ளச்செய்கிறது. இந்த ஒத்துணர்வால்தான் புலவர் ஆணாக இருந்து பெண்ணின் நெஞ்சம் உறும் துயரத்தைப் பாடுகிறார். துறவியாக இருந்து காதலரின் பிரிவாற்றாமையைப் பாடுகிறார். முதியவராக இருந்து இளைஞனின் உள்ளத்துடிப்பைப் பாடுகிறார். இவ்வாறு தம் வாழ்க்கையனுபவத்தில் உணராத உணர்ச்சிகளையும் பாடுமாறு உதவுவது இந்த ஒத்துணர்வே ஆனும்.[26]

இவ்வாறு கவிதை என்பது ஒருசில உண்மைப்பொருட்களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு செஞ்சொற்களால் அமைக்கப்படுவதல்ல. அனுபவம், கற்பனை, உணர்ச்சி, ஒத்துணர்வு ஆகியவற்றின் துணைகொண்டு அமைக்கப்படுகிறது. இவ்வகைக் கவிதைகள் படிப்பவர் மனத்தில் நீங்காத இடம் பெறுகின்றன. கவிஞனின் எண்ணங்களையும் உணர்த்துகின்றன. கண்ணால் காணும் நிகழ்ச்சிகளை உணர்ச்சிப்பெருக்குடன் கற்பனை நலத்துடன் படைப்பதே கவிதை.

## 2. உணர்த்து முறை உத்தி

இலக்கியப் படைப்பில் இன்றியமையா உறுப்பாக உணர்த்துமுறை உத்திகள் விளங்குகின்றன. அவற்றுள்

உருக்காட்சிக் கோட்பாடு ஒன்றாக விளங்குகிறது. உருக்காட்சியின் தோற்றம், தன்மை, வகை ஆசியவற்றைப்பற்றியும் தொல்காப்பியத்தில் இதன் இடம் பற்றியும் உணர முற்படலாம்.

## 2.1 உருக்காட்சி

இமேஜ் என்ற சொல் சாதாரணமாக மக்களிடையே பெரிதும் பயின்றுவரக் காண்கிறோம். ஒரு மனிதனது செயல்திறனோ, பேச்சோ, நடத்தையோ, அறிவுத்திறமையோ அல்லது இவையெல்லாம் சேர்ந்த ஆளுமைப்பண்போ மற்றவர் மனத்தில் அவரைப்பற்றிய ஒரு குணம் சார்ந்த ஆளுமைப்பண்பு உருத்தோற்றத்தை ஏற்படுத்துவதை இமேஜ் என்று குறிப்பிடுகின்றனர். எனவே மனத்தில் தோன்றும் கற்பனை வடிவமே உருக்காட்சி எனப்படுகிறது. இவ்வுருக்காட்சி உலக இலக்கியங்கள் அனைத்திலும் காணப்படுகிறது. சங்ககால முதற்கொண்டே தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. அது படிப்பவர்களாலும் உணரப்பட்டுள்ளது.

புதினங்கள் படிக்கும்போது படிப்பவர் மனதில் உருக்காட்சிகள் கற்பனையை விரிவடையச் செய்கின்றன. அப்புதினம் திரைப்படமாக்கப்படும்போது சுவையின்றிப் போவதும் இக்காரணத்தினால்தான். படிக்கும் போது தோன்றும் கற்பனை உருக்காட்சிகளோடு திரைப்படத்தின் காட்சிகள் ஒத்துப்போகாததால் சுவையின்றிப் போகிறது.

உருக்காட்சிகள் இலக்கியங்களில் இருப்பதுமட்டுமல்ல. அவை படிப்பவர்களால் அனுபவிக்கப்பட்டும் வந்துள்ளன. அவ்வாறு அனுபவிக்கப்பட்டதை குருபரம்பரை வைபவம் என்னும் வைணவநூல் நமக்கு உணர்த்துகிறது. எம்பெருமானார் ஒரு சமயம் திருக்கோட்டியூர் நம்பி வாசலிலே போய் நின்று கதவைத் தட்டினார். அப்போது உந்து மதகளிற்றன் என்ற திருப்பாவைப் பாசுரத்தை அநுசந்தித்துக் கொண்டிருந்தார். அவருடைய நினைவு முழுவதும் அப்பாசுரத்தின் பொருளில் ஊன்றிய தோடன்றித் தாம் ஆண்டாளாகவே மெய்மறந்து ஆழ்ந்த நிலையிலிருந்தார்.

செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் என்ற அடியை அநுசந்திக்கவும் தமது ஆசிரியர் திருமாளிகையில் அவரது மகள் கைவளை யொலியுடன் கதவு திறக்கவும் ஒன்றாயிருந்தது. அந்நிலையை நப்பின்னைப் பிராட்டியே கதவைத் திறக்கிறாள் என்று எண்ணித் தண்டனிட்டார்.[27] என்று உருக்காட்சி அனுபவத்தை உணர்த்தியுள்ளனர். இவ்வாறே புதினங்களையும் சிறுகதைகளையும் நாம் படிக்கும்போது உருக்காட்சியை அனுபவிக்கிறோம். இவ்வாறு தங்கள் படைப்புக்களில் உருக்காட்சிகளைக் கையாள்வதில் தி. ஜானகிராமன், கல்கி, சாண்டில்யன் ஆகியோர் மிகுந்த திறமைசாலிகளாக விளங்கியவர்கள். இவர்களில் தி. ஜானகிராமன் கும்பகோணத்தைப் பிண்ணணியாகக் கொண்டு அதிக புதினங்கள் படைத்தவர். இந்த ஊரின் கோடைக்கால வெப்பத்தையும் புழுதியையும் அவர் வர்ணிப்பதைப் படிக்கும்போது, குளிர்சாதன அறையிலும் அந்த வெப்பத்தை நம் உடல் அடைந்தது போன்ற உணர்வை ஏற்படுத்தும் வல்லமை உண்டு. இவ்வாறு சிறுகதைகளிலும் படைக்கப்படுகிறது. ஒரே ஒரு சொற்குறிப்பு ஏற்படுத்திவிடும் காதல் அனுபவங்களும் உண்டு. சரித்திரப் புதின ஆசிரியர்களான கல்கி, சாண்டில்யன் போன்றவர்களது படைப்புக்களைப் படிக்கும் போதும் கதை நடந்த காலத்திலும் அந்தச் சூழலிலும் இருப்பது போன்ற ஒரு மனத்தோற்றத்தை எளிதில் ஏற்படுத்திவிடும்.

கம்பராமாயணத்தில் கம்பன் தீட்டியுள்ள சொற்சித்திரங்கள் புகழ் பெற்றவை. படிக்கும்போது ஒரு நாடகக் காட்சியைப் பார்த்தது போன்ற உணர்வை ஏற்படுத்தி விடுவனவாய் அமைகின்றன. மகாபாரதத்தில் அபிமன்யு போரிடும் காட்சியைப் படைத்தளிக்கும் பாங்கு ஒரு போர்க்களத்திற்குள் சென்று வந்ததைப் போன்ற உணர்வையும் நேரில்கண்டது போன்ற உணர்வையும் ஏற்படுத்திக் கண்ணீர் விட வைக்கிறது. இலக்கியங்களைச் சுவைப்பவர் மனத்திரையில் நாடகக் காட்சியாய் விரிவதே உருக்காட்சியாகும். இந்த உத்தி தொல்காப்பியத்தில்

செய்யுளுறுப்பாக இடம் பெற்றுள்ளது.

## 3. தொல்காப்பியத்தில் உருக்காட்சிக்கோட்பாடு

தொல்காப்பியர் முந்து நூல்கண்டு முறைப்பட எண்ணி உற்று உணர்ந்து ஓதி உருவாக்கிய கோட்பாடுகள் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. திறனாய்வினால் கோட்பாடுகள் உருவாவதுபோல் கோட்பாடுகளினால் திறனாய்வு வளம் பெறுவதும் இயல்பானது. இலக்கியத் திறனாய்வும் இலக்கியக் கோட்பாடுகளும் ஒன்றையொன்று பின்னிப் பிணைந்தவை. பல நேரங்களில் இரண்டும் ஒன்றாகவே விளங்கக் கூடியவை.[28] 'கோட்பாடுகள் இல்லாமல் திறனாய்வில் ஈடுபடுவது இயலாது. திவிவேதி என்ற வடமொழி ஆய்வாளர் அலங்காரம் தொனி, ரீதி, லட்சணம், குணம், தோஷம் ஆகியவைகளை வடமொழியின் திறனாய்வுக் கோட்பாடுகளாகக் கொள்வதுபோல, தொல்காப்பியர் கூறியுள்ளமெய்ப்பாடு, உவமை, உள்ளுறை, வனப்பு, வண்ணம், மரபு ஆகியவைகளைத் தமிழ்த் திறனாய்வுக் கோட்பாடுகளாகக் கொள்ளலாம்.'[29] என்கிறார். இவைகளைத் தமிழரின் அழகியல் கோட்பாடுகளாகக் கூறுவர் பேரறிஞர் தெ.பொ.மீ. தொல்காப்பியரின் பொருளதிகாரம் மனோதத்துவ உண்மையின் அடிப்படையில் எழுந்த ஓர் அற்புதமான இலக்கியச் சிந்தனைகளில் இன்றைய திறனாய்வுச் சிந்தனைகளின் கூறுபாடுகள் அமைந்து கிடப்பதையும் காணமுடிகிறது.

### 3.1 திறனாய்வு நோக்கில் புலன்

கவிதையின் உள்ளடக்கமும் வடிவமும் பிரிக்க முடியாதவை என்பதை ஓர் உண்மையாகத் தொல்காப்பியர் வலியுறுத்துகிறார். மேலும் இலக்கிய ஆக்கத்திற்குத் துணையாக எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியவை விளங்குகின்றன. இவை அனைத்தையும் இணைத்து ஆராய்ந்திருக்கிறார். எல்லா வகையான திறனாய்வுக் கொள்கைகளையும் நான்கு பிரிவுகளில் அடக்குவர்.

1. போலச் செய்தல் கொள்கை

2. வெளியீட்டுக் கொள்கை

3. பயனீட்டுக் கொள்கை

4. புறநிலைக் கொள்கை

தொல்காப்பியரின் திறனாய்வுச் சிந்தனைகளின் சாரமாக வெளியீட்டுக் கொள்கை அமைகிறது எனலாம்.[31] மெய்ப்பாட்டியல் இக்கருத்துக்கு உரமாக விளங்குகிறது என்றால் புலன் என்ற உறுப்பு களனாக அமைகிறது என்று சான்றுகளுடன் உணர்த்த முற்படலாம். தொல்காப்பியர் செய்யுளியலில் புலன் என்றும் செய்யுளுறுப்பிற்கு

"தெரிந்த மொழீயாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றில்
புலனென மொழிய புலனுணர்ந் தோரே"[32]

என்ற நூற்பாவை அமைந்துள்ளார்.

### 3.2 தொல்காப்பியம் மற்றும் பிற இலக்கணநூல்களில் புலன்

"வழக்கச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமல் பொருள் தோன்றுவது புலன் என்னும் செய்யுளாம் என்றவாறு" என்று கூறி இதற்கு எடுத்துக்காட்டாக,

"பார்க்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி யொன்னார்
மலைமுறை நின் வழங்குதுளி சிதறிச்
சென்றவ டிருமுகங் காணக் கடந்தேர்
இன்று புகக் கடவுமதி பாக வுதுக்காண்
மாவொரு புணர்ந்த மாஅம் போல
இரும்பிடி யுடைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே"[33]

என்ற பாடலைக் கூறுகிறார் இளம்பூரணர். யாப்பருங்கல விருத்தியாசிரியரும் இளம்பூரணர் காட்டும் பார்க்கடன் முகந்த என்ற பாட்டினையே மேற்கோள் காட்டுவர். காரிகை உரையும் மேற்கண்டவாறே கூறுகின்றது. தண்டியாசிரியர் புலனைத் தெறிவு என்று கூறி,

"தெளிவெனப் படுவது பொருள் புலப் பாடே"[34]

என்பர் மாறனலங்காரம்

"தெளிவு, ஒல்காப் பொருள் புலப்பாடு"[35]

என்று கூறுகிறது.

### 3.3 புலன் என்னும் உறுப்பும் உருக்காட்சியும்

"கலையுணர்ச்சி மிக்க கலைஞர்கள். அறிவின் வாயிலாக உலகத்தை அறிவதைவிட புலன்களின் வாயிலாக உலகத்தைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று உணர்வதே மிகுதியாகும்"[36] கண்ணால் கண்ட பொருளின் அழகையும் செவியால் கேட்டுணர்ந்த ஒலியின்பத்தையும் பிறர் அறிந்து மகிழுமாறு கலைஞன் படைக்கிறான். ஐம்புலன் வாயிலாகக் கலைஞன் பெறும் உணர்வுகளும், உறும் இன்பங்களும் அவற்றிற்கு உட்பட்டும் மேற்பட்டும் அமையும். மனத்தின் நேரடி அல்லது சார்பு அனுபவங்களும் அதன் படைப்பில் வெளிப்படுகின்றன [37] அவ்வாறு வெளிப்படும் கருத்துக்களை கவிஞன் அனுபவித்த புலன்சார்ந்த அனுபவங்களையும் புலன்சாரா அனுபவங்களையும் படிப்பவனுக்கு உணர்த்துவதாக புலன் என்ற உறுப்பு அமைகிறது.

செவ்விதிற்கிளந்து - செம்மையாகச் சொல்லி - செம்மையாகச் சொல்லுவதாவது படைப்பாளியின் புலனுபவங்கள் படிப்பவனது புலன்களை அடையுமாறு உணர்த்தும் உத்தியைக் குறிக்கின்றன எனலாம். அவ்வாறு நிகழும் மாற்றம் ஆராய வேண்டாமல் பொருள் தோன்றச் செய்கிறது என்று கண்டுணரப் படுகிறது. இக்கண்ணோட்டத்தில் புலன் என்ற செய்யுளுறுப்பு உணர்த்துவது உருக்காட்சியையே என்று தெளியலாம். மொத்தத்தில் தொல்காப்பியரின் நோக்கம் கோட்பாடுகளை, விதிகளை உருவாக்குவதாக அமைந்துள்ளது.

உருக்காட்சிக்கோட்பாடு என்பது உணர்த்துமுறை உத்தியாக விளங்குகிறது. கண்ட பொருளைக் கொண்டு காணாத பொருளை உணர்த்தும் உவமையும், உவமையின் செறிந்த நிலையான உருவகமும், பிறிதுமோர் பொருள் கொளக்

கிடக்கும் இயல்புடையனவாய் உள்ளுறையுவமமும், இறைச்சியும் விளங்குகின்றன. கவிஞன் தான் கூறவரும் பொருளைப் புறத்தே புலப்படாத வகையில், வருணனை போல் அமைத்துப் பாடலைப் படிப்போர் தாமே அப்பொருளை உய்த்துணர்ந்து கொள்ளுமாறும், கவிஞன் படைக்கும் சூழலில் படிப்பவன் தானும் ஒன்றும்படியும் செய்யும் திறன் கொண்டதுவே உருக்காட்சி. இவ்வுருக்காட்சி தொல்காப்பியர் கூறும் புலன் என்னும் செய்யுளுறுப்பே என்று கண்டறியப்படுகிறது.

### 4. உருக்காட்சியின் தன்மை

உருக்காட்சி என்ற கலைச்சொல் வளர்ந்த வளர்ச்சியே தனிவரலாறு ஆகும். அவ்வாறே அதன் தன்மையின் ஆழமும் ஓவியம், உருக்காட்சி, காட்சி உருவகம், உருவக்காட்சி, கருத்தியல் வடிவம், படிமம், புலனுணர்வு சொற்காட்சி போன்ற பல்வேறு சொல்லும் தொடரும் இலக்கிய ஆய்வுலகில் அடிவைத்த புதுக்கருத்தின் வருகை வேகத்தை உணர்த்தும்[38] கலையில் தேர்ந்த கலைஞன் தீட்டிய சித்திரத்தை ஓவியம் எனக் கூறுகின்றோம். கவிஞன் தீட்டிய சொற்களாகிய சித்திரத்தையும் ஓவியம் எனக் கூறுவது வழக்கம். இலக்கிய ஓவியத்தின் வரிவடிவத்தை நாமே நம் மனத்தின் கண்தோற்றுவித்துக் கொள்கிறோம். அதனுடைய பொருட்செறிவே. அவ்வோவியத்தை எழிலுடையதாக விளங்கச் செய்யும் வண்ணமுமாகும்.[39] திரையில் எழுதப்படும் சித்திரம் அதன் பகைப்புலத்தோடு கண்களால் கண்டு மனதில் பதிவு செய்யப்படுகிறது. அதில் கோடுகளும் வண்ணங்களும் மட்டுமே வடிவம் கொடுக்க உதவுகின்றன. கவிஞன் தீட்டும் ஓவியமோ அழகிய வருணனை, சொற்குறிப்பு, கேள்விப்புலத்தைதூண்டும் ஒலிக்குறிப்புக்கள், முகர்வுப் புலத்தைத் தூண்டும் மணம் பற்றிய குறிப்புக்கள் என்று ஐம்புலன்களின் அடிப்படையில் அமைந்த குறிப்புக்கள், சுவைமிக்க சொல்லோவியங்களாக மனத்திரையில் வடிவம் கொடுக்கும் வகையில் அமைக்க உதவுகின்றன. ஒரு சொல்லோ சொற்றொடரோ அல்லது உவவையோ தான் விளக்கவந்ததோடு, அதற்குத் தொடர்புடைய பிற

"தெளிவெனப் படுவது பொருள் புலப் பாடே"[34]

என்பர் மாறனலங்காரம்

"தெளிவு, ஒல்காப் பொருள் புலப்பாடு"[35]

என்று கூறுகிறது.

### *3.3 புலன் என்னும் உறுப்பும் உருக்காட்சியும்*

"கலையுணர்ச்சி மிக்க கலைஞர்கள். அறிவின் வாயிலாக உலகத்தை அறிவதைவிட புலன்களின் வாயிலாக உலகத்தைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று உணர்வதே மிகுதியாகும்"[36] கண்ணால் கண்ட பொருளின் அழகையும் செவியால் கேட்டுணர்ந்த ஒலியின்பத்தையும் பிறர் அறிந்து மகிழுமாறு கலைஞன் படைக்கிறான். ஐம்புலன் வாயிலாகக் கலைஞன் பெறும் உணர்வுகளும், உறும் இன்பங்களும் அவற்றிற்கு உட்பட்டும் மேற்பட்டும் அமையும். மனத்தின் நேரடி அல்லது சார்பு அனுபவங்களும் அதன் படைப்பில் வெளிப்படுகின்றன [37] அவ்வாறு வெளிப்படும் கருத்துக்களை கவிஞன் அனுபவித்த புலன்சார்ந்த அனுபவங்களையும் புலன்சாரா அனுபவங்களையும் படிப்பவனுக்கு உணர்த்துவதாக புலன் என்ற உறுப்பு அமைகிறது.

செவ்விதிற்கிளந்து - செம்மையாகச் சொல்லி - செம்மையாகச் சொல்லுவதாவது படைப்பாளியின் புலனநுபவங்கள் படிப்பவனது புலன்களை அடையுமாறு உணர்த்தும் உத்தியைக் குறிக்கின்றன எனலாம். அவ்வாறு நிகழும் மாற்றம் ஆராய வேண்டாமல் பொருள் தோன்றச் செய்கிறது என்று கண்டுணரப் படுகிறது. இக்கண்ணோட்டத்தில் புலன் என்ற செய்யுளுறுப்பு உணர்த்துவது உருக்காட்சியையே என்று தெளியலாம். மொத்தத்தில் தொல்காப்பியரின் நோக்கம் கோட்பாடுகளை, விதிகளை உருவாக்குவதாக அமைந்துள்ளது.

உருக்காட்சிக்கோட்பாடு என்பது உணர்த்துமுறை உத்தியாக விளங்குகிறது. கண்ட பொருளைக் கொண்டு காணாத பொருளை உணர்த்தும் உவமையும், உவமையின் செறிந்த நிலையான உருவகமும், பிறிதுமோர் பொருள் கொளக்

### தோற்றம்

1908-ம் ஆண்டு இலண்டன் நகரில் பலரும் கூடி, கவிதை படிப்பதற்குச் சங்கம் ஒன்றை டி. அல்மே உருவாக்கினார். கிருஸ்துமஸ் நாளன்று இலையுதிர்காலம் என்ற தலைப்பில் அவர் கவிதை எழுதி வாசித்தார். இக்கவிதையே உருக்காட்சிக்குப் புகழ் தந்த முதல் கவிதையாகும். உருக்காட்சிக் கோட்பாடு பற்றிய திறனாய்வுகள் மிக விரிவாகச் சிறந்த முறையில் இன்று மேல் நாடுகளில் வந்து விட்டன.[45] உலக இலக்கியங்களில் இது சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. தமிழில் உருக்காட்சி இயக்கக் கவிஞர்கள் என்ற ஒரு அமைப்பு இல்லை. உருக்காட்சி அமைப்பு எல்லா கவிதைகளிலும் இருக்கிறது. உருக்காட்சிகள் தமிழுக்குப் புதியதல்ல. உருக்காட்சி என்ற தனிக்கோட்பாடு மட்டுமே புதியது.

### 5.1 மேலை நாட்டார் கோட்பாடுகள்

மேலை நாட்டு இலக்கணியார் கவிதைகளில் உருக்காட்சிகளை இனம் காணுவதற்குச் சில கோட்பாடுகளை வகுத்துள்ளனர், கூர்ந்து காணும் ஆற்றலுள்ளவர் உருக்காட்சியின் திறனையும் அது கவிதையில் எத்தகைய உறவு கொண்டு விளங்குகிறது என்றும் கண்டுணர்வதன் வாயிலாகத் தம் கவிதை நயப்பினை மிகுத்துக் கொள்வர். பொதுவாகக் காட்சிப்புல உருக்காட்சியல்லாத பிற உருக்காட்சிகள் கவிதையில் சிறந்து விளங்குகின்றன என்று யாரும் நினைப்பதில்லை. காட்சிப்புல உருக்காட்சிகளைவிட பிறபுலன் உருக்காட்சிகளைக் குறித்துக் கவனம் செலுத்த வேண்டியுள்ளது.

"The Visual images of poetry require less conscious attention than other kinds of imagery"[16]

சிந்தனை, எழுத்து, பேச்சு ஆகியவற்றில் காட்சிப் புல உருக்காட்சிகளைப் பலர் பயன்படுத்துகின்றனர். ஆகையால் மிகுந்த கவனம் செலுத்திக் காண வேண்டுவதாயின் உணர்வதற்கு நுண்ணிதான் வகையில் அந்த உருக்காட்சி இருத்தல் அவசியம்.

"If any of the imagery of a poem is to receive extra attention, it should be the imagery which requires a more delicate apprehension"[47]

வெளிப்படையான, அருவருப்பான, வன்மையான வழிகளில் அல்லது திருத்தமான நெறியில் நல்ல கவிதை தனது விளைவுகளைப் பெறுவதில்லை. அரிதான தன்மையும் சிறப்பும் உடைய மொழியாலும் வேறுபாட்டியல்பாலும் அவற்றைப் பெறுகிறது.

கதிரவன் ஒளியில் பளபளக்கும் அந்தக் கலத்தின் பாய்கள் அமைதியின்றி ஆடுகின்ற ஒட்டடைபோல் தோன்றவில்லையா கனத்த மோதலுடன் உயிரற்ற குவியலாக ஒன்றன்பின் ஒன்றாக அவையெல்லாம் கீழே விழுந்தன என்ற கருத்தமைந்த கவிதை.

"Are those her sails that glance in the sun like restless gossamers? And with heavy thump, A life less lump, They dropped down one by one"[18]

இதில் முதல் இரண்டு வரிகளில் காட்சிப்புலன் சார் உருக்காட்சி உள்ளது. விரைவு (Swift) நழுவும் தன்மை (Elusive Movement) குறிப்பாகக் காட்டப்படுகிறது. மென்மைத் தன்மையும் காட்டப்படுகிறது. அடுத்தாற்போல் மிக மென்மையான இத்தன்மை மிக நுண்மையான ஓசை, சந்தம் ஆகியவற்றால் சொல்லோவியங்களாய் உணர்த்தப்படுகிறது. ஓசையும் சந்தமும் இணைந்து தம் மென்மையும் இளகியதுமான தன்மையால் நொய்மையான விரைவான சற்றுப் புரிந்து கொள்ள முடியாத ஓர் அசைவைக் காட்டுகிறது. பல வகை உருக்காட்சிகள் இவற்றைப் படிப்பவர் நெஞ்சில் எழுகின்றன.

"Both sound and rhythm, by means of their silky liquid quality, make their own contribution of lightness, swifness and slight mysterious movement"[19]

எனவே இக்கவிதை வரிகளை வெறும் காட்சிப்புல உருக்காட்சிகளாகக் கொள்ள முடியாது. உருக்காட்சி வகைகளைக் கவிதையைக் கூர்ந்து காண்பதன் வாயிலாகக் கண்டுணரவியலும் என்பதைத் தெரிவிக்கிறது.

கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் நேரிடையாக உணர்த்தும் திறனுடைய கேள்விப்புல உருக்காட்சி (Auditory image) ஊற்றுப்புல உருக்காட்சி (Tectile image) தசை உருக்காட்சி (Muscular image) ஆகியவற்றுடன் ஒப்பிட்டுக் காணும் போது காட்சிப்புல உருக்காட்சி இக்கவிதைகளில் சிறப்பிடம் பெறவில்லை எனலாம். காட்சிப்புலனல்லாத பிற புலன் சார்பாக வருவனவற்றைக் கற்பனையினால் நாம் அனுபவிக்க முடியும். எல்லா வகை புலன்சார் உணர்வுகளும் கவிதையில் காட்டப்படுகின்றன. தண்மை (Cold) வெம்மை (Heat) வெறுமை (Dryness) ஈரநிலை (Moisture) விரைப்பு (Tension) அழுத்தம் (Pressure) அசைவுகள் (Movement) சுமைகள் (Weights) ஓசைகள் (Sounds) என்பன தாள அறுதியுடன் கூடிய சொற்களைக் கொண்ட ஓசையால் உணர்த்தப்படுகின்றன. முக்கியமாக உருக்காட்சி இவற்றைக்காட்டுகிறது.

"Since impressions of all sorts are suggested in poetry - cold[1] heat[2], dryness[3] moisture[4] tension[5] pressure [6] and movements[7] weights[8] and sounds[9], they are suggested by the sound and rhythm of words, But chiefly by imagery" [50]

உருக்காட்சிகளைப் படைக்கும் சொற்கள் புலன் உணர்வுகளைத் தெரிவிக்கின்றன. புலன்சார் அனுபவங்களைக் கவிதைகளில் உருக்காட்சியினால் ஏன் கூறவேண்டும்? அசாதாரண நிகழ்ச்சிகள் (Unususal incident) வினோதமான நிகழ்ச்சிகள் (Curious happenings) தெளிவான உணர்ச்சிகள் (Definite Feelings) கவனத்தைக் கவரும் உணர்வுகள் (Striking Impression) ஆகியவற்றால் எப்படி நாம் ஈர்க்கப் பெற்றோம் என்பதை உணர்த்த உருக்காட்சியைப் பயன்படுத்துகிறோம்.

"Poetry describes unusual incidents, Curious, Happenings, Definite feelings, Striking impressions, We use imagery in order to make our heart distinctly aware of what we were impressed by"[51]

உருக்காட்சியைப் பயன்படுத்தத் தவறினால் நாம் கூறவந்தது சாதாரண சொற்களின் ஓட்டமாகவும் தெளிவற்ற குறிப்புக்களாகவும் பொதுக்கருத்துக்களாகவும் அமைந்து விடும். தெளிவான நிலை இல்லாமல் போகும். கேட்பவரிடம்

கிளர்ச்சியுற்ற உணர்வுகளும் கற்பனையும் இல்லாமல் இருந்தால் ஒரு நிகழ்ச்சி எப்படி நடந்தது என்பதை முழுவதும் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் குழப்பமே உண்டாகும்.

தெள்ளத்தெரிந்த உண்மையாலும், நுண்மையாலும் நம்மைக் கற்பனைப் பாங்கில் உண்மைப் பொருள்களுடன் ஒன்றச் செய்கின்ற ஆற்றல் உருக்காட்சிக்கு உண்டு. இந்த இணக்கம், தெளிவு ஆகியவற்றின் விளைவாக சாதாரணப் பேச்சில் அல்லது எழுத்தில் நமக்கு உண்டாகும் கவனத்தைவிட கவிதைக்கு நிறைந்த விளக்கத்தையும், தெளிவையும் அதிகமான கவனத்தையும் தரக்கூடியதாக உருக்காட்சி விளங்குகிறது.

"This quality of Precision of clarity of definitions one of the vital contribution which imagery makes to poetry, without imagery poetry would be abstract"[52]

இத்தகைய தெளிவுள்ள நுட்பமும் விளக்கத் தெளிவும் கவிதைக்கு உருக்காட்சி தரும் உயிருள்ள செல்வமாகும். இது சொற்களை வலுவுள்ளதாக விளங்கச்செய்கிறது. மேலும் உருக்காட்சி என்பது அனைத்து வகை உவமை. உருவகம் ஆகியவைகளைத் தன் மாட்டுக் கொண்டுள்ளது. இது காட்சிப் புலத்தைச் சார்ந்ததாக இருக்க வேண்டுமென்பதில்லை. எல்லா விதமான கற்பனைச் சித்திரம் அல்லது பிற அனுபவம் உருக்காட்சியாகும். எவ்வாறு வரினும், புலன்களின் வழியில் மட்டுமன்றி, அவன் தனது மனம், உணர்ச்சிகளின் வழியாகப் பெறினும் கவிஞன் அக்கற்பனைச் சித்திரத்தை அல்லது அனுபவத்தை உவமை. உருவகம் என்ற வடிவங்களில் ஒப்புமையின் பொருட்டுப் பயன்படுத்துகிறான்.

"The term 'image' connotes any and every imaginative picture or other experience drawn in every kind of way, which may have come to the poet, not only through any of his senses. But through his mind and emotions as well. And which he uses in the forms of simile and metaphor in their widest senses for purposes of analogy"[53]

குறியீடு (Symbol) ஒரு சொற்குறிப்பு (Suggestion)

கற்பனையிலிருந்து பெறப்படும் நுட்பமான ஒரு புனைவு (a delicate fancy world of imagination) தற்குறிப்பேற்றம் (Personifiction) தெளிவான வினைச்சொல் (Vivid Verb) உருவகம் (Metaphor) என்ற வகையமைப்புக்களில் அந்தக் கற்பனைச் சித்திரம் வரக்கூடும்.

உண்மையில் வாழ்வில் இடம் பெறும் உருக்காட்சிகளைக் கவிஞன் ஆள்வதன் வாயிலாக, பொருட்களிடையேயுள்ள ஒப்புமையைத் தன் சொற்களால் வெளிப்படுத்துகிறான். மிகத்தூயதாகவும் பகுத்தறிவுக் கொத்தாகவும் காரண காரியத் தொடர்புடையதாகவும் உள்ள விளக்கத்திற்கும் இயலாத வகையில், சிறந்த கவிதையில் இடம் பெறும் உருவகம் நம்மை உருக்குகிறது, கிளர்ச்சியுறச் செய்கிறது.

"Great metaphor in great poetry moves and stirs us in a way impossible to account for purely rationally and logically. It stirs us because it touches or awakens something in us, which I think we must call spritual at the very roots of our being"[54]

மொழியால் வெளியிடுவதற்கு அரிய சிறந்த உண்மைகளுக்கு ஒரு வடிவம் அல்லது தோற்றம் மறைவாக உள்ள இவ்வொப்புமைகளால் தரப்படுகிறது. புலனுணர்வான அறிவும் (Sensuous perception) ஆன்ம உள்ளுணர்வும் (Platomic Perception) ஒரு சிறந்த கவிஞனுக்கு மிகவும் அவசியமானவை. பாதி காட்சித் தன்மையினதாகவும் பாதி ஆன்ம உணர்வினதாகவும் உள்ள ஒரு சித்திரத்தைத் தோற்றுவிக்கிறது. இச்சித்திரம் கவிஞன் தான் இயம்புதற்பொருட்டும் அழகுபடுத்தற் பொருட்டும் படைக்கின்ற உருக்காட்சிக்கு எழுச்சியைக் தருகிறது.

"Poet's constant accumulation of vivid sense perceptions supplies the most potent means by which hearticulates his spritual intutions"[55]

ஒரு கவிஞன் அல்லது உரைநடை எழுத்தாளன் தனது எண்ணத்தை விளக்கிக் காட்டவும், அழகுபடுத்தவும், உயர்வுபடுத்தவும் வேண்டி ஆளப்படுகின்ற ஒரு சிறு

சொற்சித்திரமே, உருக்காட்சி இது தரத்தைத் தருவதாகவும் சூழலைப் படைப்பதாகவும் உணர்ச்சியைத் தெரிவிப்பதாகவும் விளங்குகிறது. எவ்வளவு தான் துல்லியமாக இருப்பினும் சரியானதொருவிளக்கவுரை இவ் உருக்காட்சியைப் போல் செயல்படவியலாது.

"This image thus gives quality, creates, atmosphere and conveys emotion in a way no precise description. However Clear and accurate can possibly do"[56]

இயற்கை என்ற பிரிவின்கண் அடங்கும் தட்ப வெப்பம் செடிகள், தோட்டம், விலங்குகள், குறிப்பாகப் பறவைகள், என்பனவும் அன்றாட வாழ்வில் பயிலும் பொருட்கள் நல்ல நிலையில் உள்ள உடம்பு, அகவாழ்க்கை தீ, ஒளி, உணவு, சமையல் ஆகியவையும் கதிரவன், நிலவு, கோள்கள், மேலுலகங்கள் ஆகியவையும் ஷேக்ஸ்பியரது உருக்காட்சிகளாக விளங்குகின்றன. சாலையில் செல்லும் வீரர்களைப் பற்றிப் பாடும் போது

கதிரொளி காலும் போர்க்கவசத்துடன் நடக்கின்ற நாங்கள்
வானத்தின்கண் உள்ள விண்மீன்களைத் தொடர்வோம்
எனவும் ஒரு பெண்ணின் முகத்தை வருணிக்கும் போது

ஆயிரம் விண்மீன்களின் ஒளியால் ஒப்பனை செய்யப்
பெற்றமாலை நேர வானத்தைவிட ஒரு மங்கையின்
முகம் பொலிவுடன் திகழ்கிறது என்பதை

"And with our Sun - bright armour as we march
We'll chase the stars from Heaven
The loveliness of a woman's face
Fairer than the evening air
Clad in the beaty of a thousand stars"[57]

என்று குறிப்பிடுகிறார்.

### 6. உருக்காட்சி வகைகள்

மேலை நாட்டு இலக்கணியாரின் விளக்கத்தின் படியும் கோட்பாட்டினடிப்படையிலும் உருக்காட்சிகளை வகைப்படுத்தலாம். இவ்வாறு வகைப்படுத்திக் கொள்வது

கவிதையிலுள்ள உருக்காட்சியனுபவத்தை விளக்கிக் கூறவும் உணர்ந்து கொள்ளவும் பயன்படுகிறது. புலன்களை அடிப்படையாகக் கொண்டு பெரும்பாலான உருக்காட்சிகள் அமைவதால் ஐம்புலன்களின் அடிப்படையில் உருக்காட்சிகளை பகுக்க முற்படலாம். கண்ணால் கண்டதுபோன்ற உணர்வினைத்தருவது காட்சிப்புல உருக்காட்சி என்றும், காதால் கேட்டது போன்ற அனுபவத்தை ஏற்படுத்துவது கேள்விப்புல உருக்காட்சி என்றும், மூக்கினால் முகர்ந்தது போன்ற அனுபவத்தைத்தர வல்லது முகர்வுப்புல உருக்காட்சி என்றும், நாவினால் சுவைத்தது போன்ற உணர்வை ஊட்டுவது நுகர்வுப்புல உருக்காட்சி என்றும், தொட்டுணர்வு அல்லது ஸ்பரிச உணர்வைத் தருவது ஊற்றுப்புல உருக்காட்சி என்றும் பகுத்துள்ளனர். ஐம்புலன்களையும் தாண்டியதாக மனத்தினால் உணரும் மனஉணர்வு என்பது புலன்கடந்த உருக்காட்சியாக இருப்பினும் ஆறாவது உருக்காட்சியாக அமைத்துக் கொள்கின்றனர். எனவே புலனடிப் படையில்

1. காட்சிப்புல உருக்காட்சி
2. கேள்விப்புல உருக்காட்சி
3. முகர்வுப்புல உருக்காட்சி
4. நுகர்வுப்புல உருக்காட்சி
5. ஊற்றுப்புல உருக்காட்சி
6. மனவுணர்வு உருக்காட்சி என்று பகுக்கப்படுகிறது.

புலனடிப்படையில் மட்டுமின்றி சமயம், தொன்மம், முரண், அடைமொழி, புலன் மாற்று போன்றவைகளும் உருக்காட்சிகளாகப் பகுக்கப்படுகின்றன.

### ஐம்புல உருக்காட்சிகளின் விளக்கம்

ஒரு படைப்பாளியின் புலன்களின் இயல்பு, சிறப்புக் கூறுகள் ஆகியவற்றைப் பற்றி, அவனது படைப்பின் வழியில் நின்று செய்யப்படும் பகுப்பாய்வுக்கு அவனது காட்சிப்புலம், கேள்விப்புலம், முகர்வுப்புலம், நுகர்வுப் புலம், ஊற்றுப்புலம் ஆகியவற்றை விளக்கமாகப் பகுத்துக் கொள்வது அவசியமாகிறது.

### 6.2 காட்சிப்புல உருக்காட்சி

காட்சிப்புலம் என்பது உலகின் பெரும்பகுதியைத் தழுவிய ஒன்றாகும். வாழ்வின் பெரும்பகுதி காடசிப்புலம் என்ற வாயில் வழியாகக் கவிஞனைச் சென்றடைகிறது எனவே உலகில் காட்சியாய்ப் பெறப்படும் அனைத்தும் இதில் அடங்கும்.

இயற்கை - வான் - வானியல் கோள்கள், வானியல் கோள்கள் என்ற வகையில் ஞாயிறு, நிலவு, விண்மீன் கார்மேகம், காற்று, மின்னல், மழை, வானவில் போன்றவை.

தீ - ஒளிப்பிழப்பு, நெருப்பு ஆகியவை. நீர் - வெள்ளம் - புனல், பொய்கை, ஆறு, மடு, கடல் ஆகியவை. நிலம் - வித்து, முளை, செடி மரம், மலை, இலை, காய், கனி, பூ.

### 6.5 கேள்விப்புல உருக்காட்சி

கேள்விப்புல உருக்காட்சியை இயற்கை, அன்றாட வாழ்க்கை என்ற இருபிரிவுகளில் அடக்கிக் கூறலாம்.

இயற்கை - இடிமுழக்கம், ஆற்றின் ஒலி, கடல் ஒலி, சுரும்பு, வண்டு, குயில், கிளி, ஆனைச்சாத்தன்.

அன்றாட வாழ்க்கை - அணிகலன், படைக்கலன், இசைக்கருவிகள், தயிர்கடைதல், தவயோகிகளின் குரல்.

### 6.4 முகர்வுப்புல உருக்காட்சி

முகர்வுப்புல உருக்காட்சியில் நறுமணம் தரும் மலர்கள், திருத்துழாய் போன்ற வற்றால் உணர்த்தப்படும் போது அந்த அனுபவத்தை இயல்பாக அனுபவிக்க முடிகிறது.

### 6.5 நுகர்வுப் புல உருக்காட்சி

உயிர்வாழ்வுக்கு உதவும் உணவுப்பொருள்கள் உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என நான்கு வகையினவாகவும் இனிப்பு, உறைப்பு, புளிப்பு, கசப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என ஆறு வகைச் சுவையினதாகவும் உள்ளன. இறைவனை பால், நெய், கன்னல்சாறு, அமுது என்றும் மருந்து என்றும் நஞ்சு என்றும் உருக்காட்சிகளாக அமைத்துள்ளனர். இது உடனடி அனுபவத்தைத் தருகிறது.

### 6.6 ஊற்றுப்புல உருக்காட்சி

ஐம்புல உணர்வுகளில் ஒன்றான ஊற்றுப்புல உணர்விற்குரிய தண்மை, வெம்மை, நடுக்கம், மகிழ்ச்சி போன்றவற்றை ஆள்வது அனுபவச் செறிவை மிகுவிக்கிறது.

### 6.7 மனவுணர்வு உருக்காட்சி

ஐம்புல உருக்காட்சிகளுடன் மனத்தால் அறியக்கூடிய உருக்காட்சிகள் மனவுணர்வு உருக்காட்சி என்று விளக்கப்படுகின்றன. புலனுணர்வுக்கு அப்பாற்பட்டு மனவுணர்வுகள் ஆழ்வார்களால் உருக்காட்சிகளாகப் படைக்கப்பட்டுள்ளன.

இவ்வகையில் கோபம் மகிழ்ச்சி ஏக்கம், கனவு, பாவம், புண்ணியம் இறையனுபவம் போன்ற மன உணர்வுகள் உருக்காட்சிகளாகப் படைக்கப் பட்டுள்ளன.

## தொகுப்புரை

இலக்கியத்தில் யாப்பு என்பது அதன் உருவம் என்றும் அது தனக்குள் அடக்கி இருக்கும் கருத்து உயிர் என்றும் கூறினால் உணர்த்து முறை உத்திகள் இலக்கியத்தின் பேச்சு மொழி என்று கருத முடிகிறது.

இலக்கியம் அறிவும் மனோபாவமும் கலந்து விளங்குவது மக்களின் வாழ்வோடு தொடர்புடையதாக உள்ளது. இது வாழ்க்கையைப் பற்றிய ஒரு ஆராய்ச்சி இது வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதாக அமைவது. இதனால் விளையும் பயன் மக்களின் உள்ள மேம்பாடாக இருக்க வேண்டும்.

எந்த உயிரினமாக இருப்பினும் உறுப்புக்கள் ஒழுங்காக ஒருங்கிணைக்கப் பட்டிருந்தால்தான் அது உருவம் அல்லது வடிவம் எனப்படும் இலக்கியமும் அது போன்றதே.

கவிதைக்கு கவிஞன் அடையும் அனுபவமே வித்தாக அமைகிறது. கவிஞன் தன் ரசனை மிகுந்த கண்களையும் மனத்தையும் படிப்பவனுக்கு அளித்து உலகின் அழகைச் சில நிமிடங்களில் சுவைக்கச் செய்கிறான். உலக அனுபவங்களைப் படிப்பவனுக்கு ஊட்டுகிறான். இதுவே இலக்கியம்.

இலக்கியம் கற்பனை, உணர்ச்சி, ஒத்துணர்வு ஆகியவற்றைப் பெற்றிருப்பதால் தான் சிறந்து விளங்குகிறது.

இலக்கியப் படைப்பின் இன்றியமையா உறுப்பாகவும், உணர்த்துமுறை உத்தியாகவும் உருக்காட்சிக் கோட்பாடு விளங்குகிறது. இக்கோட்பாடு உலக இலக்கியங்கள் அனைத்திலும் காணப்படுகிறது. தமிழ் இலக்கியங்களில் சங்க காலந்தொட்டே உருக்காட்சிகள் இடம் பெற்றிருப்பது மட்டுமன்றி அவை அனுபவிக்கப்பட்டும் வந்துள்ளன.

தொல்காப்பியர் கூறும் செய்யுளுறுப்புகளுள் புலன் என்னும் உறுப்பே உருக்காட்சியாகும். கண்ட ஒரு பொருளைக் கொண்டு காணாத பொருளை உணர்த்தும் உவமையும், உவமையின் செறிந்த நிலையான உருவகமும், பிறிதுமோர் பொருள் கொளக் கிடக்கும் இயல்புடையனவாய் உள்ளுறையுவமமும், இறைச்சியும் விளங்குகின்றன. கவிஞன் தான் கூறவரும் பொருளைப் புறத்தே புலப்படாத வகையில் வருணனை போல் அமைத்துப் பாடலைப் படிப்போர், தாமே அப்பொருளை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு அமைக்கிறான். கவிஞன் படைக்கும் சூழலில் படிப்பவனை ஒன்றும் படி செய்கிறான். இவ்வகை உத்தியே உருக்காட்சி. இவ்வுருக்காட்சியை தொல்காப்பியர் கூறும் புலன் என்னும் செய்யுளுறுப்பு என்று கருதலாம்.

**சான்றெண் விளக்கம்**


1. க.ப. அறவாணன், கவிதையின் உயிர் உள்ளம் உடல் ப.25
2. அ.ச. ஞானசம்பந்தன் இலக்கியக் கலை ப. 13
3. மேலது ப. 13
4. சொ. பரமசிவம் - சேக்கிழாரின் இலக்கியத்திறன் ப.5
5. தொல்காப்பியம் செய்யுளியல் நூ.1259
6. The Concise Oxford Dictionary of Current English P 882
7. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை ப.17

8. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், பக். 26,27
9. Abercrombie, Principles of Literary Criticism P. 31
10. C.T. Winchester, Principles of Literary
11. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கியக் கொள்ளை, முன்னுரை ப.4
12. Hendry New Bolt, A New Study of English Poetry - iv
13. தொல்காப்பியம், எழுத்து நூ. 74
14. பவணந்திமுனிவர், நன்னூல் நூ.268
15. மு.வ. இலக்கியத்திறன் ப.114,115
16. இரா.மாயாண்டி இலக்கியத்தில் கற்பனை ப.13
17. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம் ப. 150
18. ந. சுப்புரெட்டியார் அறிவுக்கு விருந்து ப. 79
19. ந. சுப்புரெட்டியார் கவிதையனுபவம் ப.151
20. மேலது ப. 151
21. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை ப. 44
22. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம் ப. 140
23. ச. வே. சுப்பிரமணியன் தமிழ் இலக்கிய வகையும் வடிவும் ப.5
24. ந. சுப்புரெட்டியார், கவிதை அனுபவம் ப. 66
25. மு. வரதராசன் இலக்கியத்திறன் ப.91
26. மேலது ப. 95
27. எதிராஜராமானுஜதாச குருபரம்பரை வைபவம் ப. 129
28. A.G. George, Critics and Criticism P. 8
29. சி. கனகசபாபதி, சி.சு. செல்லப்பா, தமிழ் இலக்கிய விமர்சகாகள்

30. T.P.M. Aesthetics of Tamils, P. 23
31. ஏ.வி. சுப்பிரமணிய ஐயர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி ப. 30
32. இளம்பூரணர், தொல்காப்பியம், பொருள் - செய்யுளியல், நூ. 1497
33. இளம்பூரணர், தொல்காப்பியம், பொருள், செய்யுளியல் ப. 65
34. கொ. இராமலிங்கத்தம்பிரான், தண்டியலங்காரம் நூ.17
35. நாராயணையங்கார், மாறனலங்காரம் நூ. 82
36. மு. வரதராசன் இலக்கியத்திறன் ப. 50
37. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும் ப. 5.
38. த.வே. வீராச்சாமி பெரியபுராணத்தில் உருக்காட்சிகள் அணிந்துரை ப.3
39. எஸ். ஆர். மார்கபந்துசர்மா, கபிலர் ஓவியம் ப. 87.
40. மேலது ப. 88
41. ந. கடிகாசலம் ப. 197
42. எஸ்.ஆர். மார்கபந்துசர்மா, கபிலர் ஓவியம் ப. 88
43. எஸ்.ஆர். மார்கபந்துசர்மா சிலம்பின் கற்பனை ப. 13
44. மேலது முன்னுரை ப. 13
45. பா. முருகேஸ்வரி, சிந்தாமணியில் உருக்காட்சி ப. 173
46. பி.கரே The Appreciation of poetry P. 40
47. மேலது ப. 40
48. மேலது ப. 41
49. மேலது ட.41
50. மேலது ப. 44

51. மேலது ப. 45

52. மேலது ப. 46

53. F.E. கரோலின் ஸ்பர்ஜர் Shakespeare's Imagery and what it tells us - P.5

54. மேலது ப. 7

55. மேலது ப. 8

56. மேலது ப. 9

57. மேலது ப. 14

## இயல் - 3

## ஆழ்வார் பாசுரங்களில் உருக்காட்சி

ஆழ்வார்கள் இறையனுபவத்தை ஆழ்ந்து அமிழ்ந்து அனுபவித்தவர்கள். அவ்வனுவங்களே திவ்வியப்பிரபந்தப் பாசுரங்கள். உருக்காட்சிகளைப் பெற்று அமைந்துள்ள இப்பாசுரங்கள் ஆழ்வார்களின் இறையுணர்வினைக் கேட்பவர்களும் அடையும் விதத்தில் உள்ளன. ஆழ்வார்கள் தங்கள் ஐம்புலன்களையும் இறைவனை உணர்வதற்குப் பயன்படுத்தினர். இறையனுபவத்தை உற்றதை உற்றவாறு மொழிந்தனர். பாசுரத்தைக் கேட்டவுடன் கேட்பவர் மனத்திரையில் ஓவியமாக விளங்குவதற்கு ஒலி, ஒளி, மணம், நுகர்வுப்பொருட்கள், ஊற்றுப்புல உணர்வுகளைக் காட்டும் சொற்கள் ஆகியவை முன்நிற்கின்றன. இவை தவிர மனவுணர்வு உருக்காட்சிகளும் ஆழ்வார்களது அனுபவங்களை நமக்கு உணர்த்துகின்றன. மனவுணர்வினைக் கருத்துப் புலமாகக் கொண்டு ஐம்புலன்களினடிப்படையோடு, ஆறு புலன்களாக உருக்காட்சிகள் உணரப்படுகின்றன. இந்த ஆறு புலன்களடிப்படையில் ஆழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ள உருக்காட்சிகளை இவ்வியல் ஆராயத் தலைப்படுகிறது.

### திருவரங்கத் தொன்மை

வைணவர்கள் பெரிய கோயில் என்று வழங்கும் தனிப் பெரும் புகழிற்கு உரியது திருவரங்கம் என்னும் திருத்தலம்.

இத்தலம் தமிழகத்தில் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே காவிரியாற்றின் நடுவில் அமைந்துள்ளது.

> "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
> திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும்
> கருமணி" [1]

என்று இந்நகரில் குடிகொண்டுள்ள எம்பெருமான் அரங்கநாதனைப் போற்றுகின்றனர். ஆழ்வார்கள் பாடிய திருப்பதிகளுள் இதுவே முதன்மையானதாக மதிக்கப்பெறுகிறது. வடநாட்டினரும் தென்னாட்டினரும் இதனை இந்தியாவில் புனிதத் தலங்களுள் மிக்க புகழ் பெற்றதாகக் கருதுகின்றனர் என்பதை,

> "தென்நாடும் வடநாடும் தொழநின்ற
> திருவரங்கத் திருப்பதி" [2]

என்ற பாசுரவரிகள் உணர்த்துகின்றன. இந்நகர் நீர்வளமும் நிலவளமும் பொருந்தியது.

அப்படிப்பட்ட வளம் பொருந்திய நகரில் உறையும் எம்பெருமான் இறைவனது பெருமையையும், உருவ எழிலையும், தன்மையையும் அவன் குடிகொண்டிருக்கும் திவ்விய தேசங்களின் நகர்வளம், மலைவளம் ஆகியவற்றையும் அவனை உணர்ந்து அனுபவிக்கும் வழிமுறைகளையும் ஆழ்வார்கள் நமக்குக் காட்டுகின்றனர்.

மனிதர்கள் முதலில் புலன்களின் வழியாகத்தான் எதையும் உணர்வர். எனவே ஆழ்வார்கள் தங்கள் இறையனுபவத்தைப் புலன்களின் அடிப்படையில் படைத்துள்ளனர். இவை கேட்பவர் மனத்திரையில் ஐம்புல உருக்காட்சிகளாய் அனுபவிக்கப்படுகின்றன.

ஆழ்வார்கள் மனத்தை உள்முகமாகத்திருப்பி எவ்வாறு யோகப் பயிற்சியினை அடைந்தனர் என்றும், அம்மனப் பயிற்சியினால் இறைவனை உணர்ந்த விதத்தையும் கூறி இப்பாசுரங்களைக் கேட்பவர்களும், முயலும் விதத்தில் விளக்கமாகக் கூறியுள்ளனர். இப்பாசுரங்கள் மனவுருக்காட்சிகளாக அமைந்துள்ளன.

### 1. காட்சிப்புல உருக்காட்சி

இந்த உலகில் உள்ள பொருட்களையெல்லாம் உணர்வதற்கு, மற்ற புலன்களைவிட காடசிப்புலமாகிய கண்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. நாம் கண்களால் கண்டுணர்ந்த பொருளைக் கொண்டுதான் காணாத ஒரு பொருள் உணர்த்தப்படுகிறது. காணாத ஒரு பொருளின் சிறப்பை வேறு எவ்வகையிலும் உணர்த்த இயலாது. உணர்ந்து கொள்வதும் கடினம் எனவே காட்சிப்புல உருக்காட்சியாக படைத்துக் காட்சி ஆழ்வார்கள் தங்கள் அனுபவங்களை உணர்த்த முற்படுகின்றனர். இதற்காக இயற்கைப் பொருட்களைத் துணைக் கொள்கின்றனர். ஞாயிறு, நிலவு, மேகம், வான், மலை, அருவி, மழை, கடல், ஒளி, நிறங்கள், விதை, கொழுந்து, மலர்கள் ஆகியவற்றைக் கொண்டும், சங்கு, யானை, குரங்கு, கயல் போன்றவற்றைக் கொண்டும் உருக்காட்சிகள் படைத்துக் காட்டப்படுகின்றன. இறைவனின் திருவுருவம், அழகு, நிறம் சிறப்பு ஆகியவையும் காலைப் பொழுது, பகற் பொழுது, இரவுப் பொழுது ஆகிய பொழுது பற்றிய உருக்காட்சியும், இறைவன் உறையும் நகரம், மலை ஆகியன பற்றிய உருக்காட்சியும் இடம் பெற்றுள்ளன.

#### 1.1 ஞாயிறு

உயிரினங்களையெல்லாம் வாழ்விக்கும் சக்தியாக விளங்கும் ஞாயிறு, சூரியன், கதிரவன், பகலவன் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. பூமியில் உள்ள இயற்கை சக்தியும் கதிரவனால் வளம்பெறுகிறது. கதிரவனைச் சுற்றியே மற்ற கோள்கள் இயங்குகின்றன. ஒப்பற்ற ஒளியையும் வெப்பத்தையும் அளிக்கும் சூரியன். உலக இயக்கத்திற்கு முதன்மையான சக்தியாகக் கருதப்படுகிறது. இத்தனை சிறப்பு வாய்ந்த கதிரவனை ஒப்பற்ற இறைவனை உணர்த்தக் கையாள்கிறார்.

கழல் அணிந்த முடிமன்னர்கள் சூழ்ந்திருக்க, சிம்மாசனத்தில் வீற்றிருந்து உலகை தர்மம் தவறாது இறைவன் ஆளும் திறத்தை, கோள்கள் சூழ்ந்திருக்க கோள்களையும் இவ்வுலகத்தையும் நடுநாயகமாய் தலைமையேற்று ஒப்பற்ற

ஒளிவிளக்காய்த் திகழும் கதிரவனுக்கு உவமையாக்குகிறார். இதை,

"கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி
எழலுற்று மீண்டே யிருந்துன்னை நோக்கும்"[3]

என்று காட்சிப் படுத்துகிறார்.

இறைவனின் திருமுடிச்சிறப்பை உணர்த்தவந்த ஆழ்வார் தான் கண்டு அனுபவித்தபடி கூறுவதற்கு உவமையைத் தேடிப் பார்க்கிறார். இயலாததால் இல்பொருள் உவமையாக இறைவனின் திருமுடியை,

"கதிராயிரமிரவி கலந்தெரித்தா லொத்த நீண்முடியன்"[4]

என்று காட்சிப்படுத்துகிறார். இத்தொடர் குறிப்பிடும் ஒளியின் மேன்மை படிப்பவர் மனத்தில் கற்பனைக்கு எட்டாததாக, மனத்தில் வியப்பை ஏற்படுத்தக் கூடியதாக உள்ளது. இவ்வுருக்காட்சி செறிவு (Intensity) கிளர்ச்சியூட்டும் ஆற்றல் (Evocative Power) ஆகியவற்றைக் கொண்டுள்ளது.

கண்கள் என்பது இதயத்தின் வாசல் என்றும் சாளரங்கள் என்றும் கூறுவர். மனவுணர்வைக் காட்டும் கண்ணாடி என்றும் கருதப் பெறுகிறது. மனத்திலே நேர்மையும், அறமும், வீரமும் பொதுநலமும், கருணையும் உள்ளர்களது கண்களில் ஒளியிருக்கும். கண்களும் முகமும் சூரியப்பிரகாசமாய் புன்மையை, சிறுமையைச் சுட்டெரிக்கும் தன்மையதாய் இருப்பது. சிறுமதியாளனும் நேர்மையற்றவனும் நிமிர்ந்து பார்க்கக் கூசுந் திறத்ததாய் விளங்குவது. அந்த ஒளியை, கண்களைக் கூசச் செய்வதாய், எலும்பற்ற உயிரைக் காய்ந்து அழிப்பதாய், உயிரினங்கள் வாழத் துணை செய்வதாய் உள்ள ஞாயிறு இறைவனின் கண்களைக் காட்சிப்படுத்த எடுத்தாளப்பெறுகிறது. ஆழ்வார் காதல் மீதூரியதால் நாயகியாய் மாறிவிட்டார். இறைவனை நாயகனாய்க் கொண்டு அவனது கண்ணழகை அனுபவிக்கிறார். எம்பெருமான் உடம்பை ஒரு உதய மலையாகவும் அவனது இரு கண்களை அம் மலையில் கூடித் தோன்றும் செந்தீநிறைந்த இரு ஞாயிறுகளாகவும் காட்டுகிறார்.

இவ்வுலகிற்குச் சூரியன் ஒன்று இறைவன் கண்களோ இரண்டு எம்பெருமான் உலகமனைத்தையும் தம் திருக்கண்களால் விருப்புடன் அருள்புரிகிறான். தீயோரைக் காய்கிறான் அப்படிப்பட்ட இறைவனின் கண்களின் நிறம்,

> "எரிகொள் செந்நாயிறிரண்டுடனே உதயம் மலைவாய்
> விரிகின்ற வண்ணத்த எம்பெருமான் கண்கள்" [5]

என்றும், நல்லோர் மாட்டு அருள் நோக்கும் தீயோர் மாட்டு எரிநோக்கும் உடையவன் என்பதை,

> "செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
> திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
> அங்கண் இரண்டுங் கொண்டெங்கள்மேல் நோக்குதியேல்" [6]

என்ற பாசுர வரிகளால் சொல்லோவிய மாக்குகிறார். அருள் நோக்கு திங்களாகவும், எரிநோக்கு ஆதித்தியனாகவும் உவமிக்கப்படுகின்றன. சூரியனும் சந்திரனும் ஒருங்கு இருப்பதில்லை ஆனால் இறைவனின் திருக்கண்களில் அருள் நோக்கும், எரிநோக்கும் உள்ளதாகக் கூறுகிறார்.

இறைவனின் திருவுருவைக் கண்டவர் இலர். ஆனால் இறைவனின் பக்தியில் ஈடுபட்டவர்கள், நல்லதை நினைத்து நல்ல செயல்களைச் செய்பவர்கள் ஆகியோர் ஆத்ம சுத்தி உடையவர்கள். இவர்களது முகத்தில் பொலிவு காணப்படும். இது வடமொழியில் தேஜஸ் என்று கூறப்படுகிறது. தெய்வீக ஒளி என்று தமிழில் கூறுவர். எனவே தெய்வம் ஒளிபொருந்தியது என்ற கருத்து நிலவிவருவது அறியப்படுகிறது. ஆழ்வார்களும் யோகநிலையில் இறைவனை ஒளிவடிவாகவே கண்டுள்ளனர். கண்ணனின் புருவம், முகம், உருவம் ஆகியவற்றின் எழிலை ஆண்டாள் நமக்கு விளக்குவதற்கு வில், சூரியன் ஆகியவற்றைத் துணைக் கொள்கிறார். கண்ணனது முகத்தில் உள்ளபுருவங்கள் அவனது சார்ங்கம் என்னும் வில்போல்வளைந்து இருப்பதாகவும், உடலும் முகமும் கரியநிறத் தினதாய் இருப்பது, அக்கரிய உருவத்தின் ஒளி உதயமலையில் தோன்றும் சூரியன் விரிக்கும் கதிர்போல இருப்பதாகவும் கருதுகிறார். இக்கருத்தை,

> "தருமமறியாக் குறும்பனைத் தன்கைச் சார்ங்கமதுவே போல்

புருவ வட்டமழகிய பொருத்த மிலியைக் கண்டீரே
உருவுகரிதாய் முகம் செய்தாய் உதயப்பருப்பதத்தின் மேல்
விரியும் கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே"[7]

என்ற பாசுரவரிகள் உணர்த்துகின்றன. எம்பெருமானின் உருவத்தைக் குறிப்பிட்டதுபோல அவனது அணிகலன்களையும் காட்சிப் படுத்துகிறார். மேருமலையில் தோன்றும் ஞாயிறும் பல வகைச் சுடர்களும் போல, அவனது திருமேனியில் அணிகலன்கள் விளங்குவதை,

"அணிமேருவின் மீதுலாவும்
துன்னு சூழ்சூடர் ஞாயிறும்
அன்றியும்பல் சுடர்களும்போல்
மன்னுநீள்முடி யாரம்பல்கலன்
தானுடை எம்பெருமான்" [8]

என்ற வரிகளில் காட்டுகிறார். இவ்வரிகள் அணிகலன்கள் பற்றி ஒரு ஒளிபொருந்திய கற்பனை வடிவைத் தோற்றுவித்துச் சிறந்த காட்சிப் புல உருக்காட்சியாய் அமைகின்றன.

இராமன் சூரிய நிறத்தினன். ஞாயிறு போன்ற தலைமைப் பண்பினன் ஒளிபொருந்தியவன், சீதையின் முகத்தாமரையை மலர்விப்பவன் என்ற கருத்தில் இராமன், கருஞாயிறு என்று ஆழ்வார்களால் குறிப்பிடப்பட்டவன் இங்கு கம்பரால் அஞ்சன் ஞாயிறு என்று குறிப்பிடப்படுகிறான்.

"செஞ்சவே சேற்றில் தோன்றும் தாமரை தேரில் தோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின் விரிந்த வேறு ஓர்
அஞ்சன ஞாயிறு அன்ன ஐயனை நோக்கி செய்ய
வஞ்சிவாழ் வதனம் என்னும் தாமரை மலர்ந்தது அன்றே" [9]

என்று காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது.

இறைவன் எல்லாமாகி இருப்பவன், இந்திரனுக்கும் பிரமனுக்கும் முதல்வனாக இருப்பவன். நீர், நிலம், காற்று, தீ, வான் ஆகிய ஐந்து பூதங்களாக இருப்பவன். தமிழோசையாய், வடமொழியாய், சூரியனாய், சந்திரனாய் அவனே விளங்குகின்றான். அவனன்றி ஓர் அணுவும் அசையாது. அணுவினுக்கணுவாய் விளங்குபவன் என்றெல்லாம்

கருதப்படுகிறான்.

இக்கருத்தை,

"இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இருநிலம்கால் தீ நீர் விண் பூதம் ஐந்தாய்
செந் திறத்த தமிழோசை வடசொல்லாகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறாகி" [10]

என்ற பாசுரத்தின் மூலம் விளக்குகிறார்.

இறைவன் இவ்வுலகில்,

"திரியும் காற்றொடு அகல் விசும்பு
திணிந்த மண் இடந்த
எரியும் தீயொடு இருசுடர்
தெய்வம் மற்றும் முற்றும் முற்றுமாய்" [11]

என்று ஐம்பூதங்களாக விளங்குவதை ஆழ்வார்கள் காட்சிப் படுத்துகின்றனர்.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாய்" [12]

என்று இறைவன் எல்லாமாகி நிற்கின்ற தன்மையைத் தெளிவாக விளக்குகிறார்.

இவ்வாறு இறைவனின் தலைமை, திருமுடிச்சிறப்பு, கண்கள், திருவுருவம் ஆகியவை அனைவரும் அறிந்த ஞாயிறுகொண்டு ஆழ்வார்களால் காட்சிப்புல உருக்காட்சியாய் அமைத்துக் காட்டப்பட்டுள்ளன.

இயற்கையிலும் இலக்கியத்திலும் கதிர் பெறும் இடம் குறிப்பிடற்குரியது. நடுநிலைமைக்கும், வாய்மைக்கும், அறிவுக்கும், ஆற்றலுக்கும் குறியீடாக அமையும் கதிரவனைக் கம்பர் கையாளும் நிலை கற்பனைப் பாங்குடன் அமைகிறது. கும்பகர்ணன் படை ராமன் மூலம் அழிந்ததை, கதிரவன் மூலம் பனி அழிந்தது போல இருந்தது என்று, குறிப்பிடுகிறார்.

"ஆர்த்து எழுந்தனர் ஆடினர் பாடினர்

தூர்த்து அமைந்தனர் வானவர் தூய்மலர்
தீர்த்தனும் பொலிந்தன கதிரோன் திசை
போர்த்த மென் பனி போக்கியது என்னவே" [13]

என்ற பாடல் வரிகளில் இறைவனைக் கதிரவனாக உணர்த்துகிறார். பகைவரை அழிந்து தர்மத்தை நிலைநாட்டும் ஆற்றலுக்கு கதிரவனைக் குறியீடாகக் கருதும் நிலையை,

"ஞாயிறு அனையை நின் பகைவர்க்கு" [14]

என்ற புறநானூற்று வரியாலும் உணரமுடிகிறது.

## 1.2 பிறை

பிறை என்பது நிலவின் வளர்நிலைப்பருவம், கதிரவன் மறைந்த முன் அந்திப்பொழுதில் வானில் செம்மை நிறம் பொருந்தி இருக்கும். அப்போது சிறிது நேரமே பிறையைப் பாக்க முடியும். கண்ணன் என்னும் குழந்தையின் செவ்விதழ் களினூடே அவ்வப்போது தெரிந்து மறையும் லேசாக முளை விட்ட பற்களைப் பார்த்த போது பெரியாழ்வாருக்குச் செவ்வானில் தோன்றும் பிறையின் முனை நினைவுக்கு வருகிறது. கண்ணனின் பற்கள் பிறை முனை போல் தெரிந்து மறைவதை,

"செக்கரிடை நுனிக் கொம்பில் தோன்றுஞ் சிறுபிறை முனை போல்
நக்க செந்துவர்வாய்த்திணை மீதேநளிர்வெண் பல்முளையிலக
அக்குவட முடுத்தாமை தாலிபூண்ட அனந்தசயனன்
தக்கமாமணி வண்ணன் வாசுதேவன் தளர்நடை நடவானோ" [15]

என்று காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்து கண்ணனின் செவ்விதழ்களூடே தெரிந்து மறையும் பற்களைக் காட்சிப் படுத்துகிறார்.

## 1.3 நிலவு

நிலவு குளிர்ச்சியான கிரணங்களை உடையது. இரவின் இருளை விலக்கி தண்ணொளியைக் கொடுப்பது. எல்லோராலும் விரும்பப்படுவது மக்கள் மனத்தில் களிப்பை ஏற்படுத்துவது. இத்தன்மைகள் கொண்ட நிலவை கண்ணனின் முகமாக ஆழ்வார் காட்டுகிறார்.

கண்ணனின் முகம் அனைவரும் பார்த்துக் களிக்கும் நிலவு போன்ற எழில் நிறைந்ததாய் இருப்பதாகக் கூறுகிறார்.

"களிநிலா வெழில் மதிபுரை முகமும் கண்ணனே
திண்கை மார்வும் திண்டோளும்
தளிமலர்க் கருங்குழல் பிறையதுவும் தடங்கொள்
தாமரைக் கண்களும் பொலிந்த இளமை இன்பத்தை" [16]

என்று கண்ணனின் முகத்தை நிலவு போல இருப்பதாகக் கூறுவது காண்போர் விரும்பும் தன்மையும், அவன் முகம் காணக்காணக்குளிர்ச்சி தரும் அன்பு முகமாகவும் ஒரு கற்பனை வடிவமைப்பு இப்பாசுரத்தைப் படிப்பவர்களுக்கு ஏற்படுத்துகிறது.

நிலவு பெண்களின் முகத்துக்கும் குழந்தைகளின் முகத்துக்கும் உவமையாகக் கவிஞர்களால் ஆளப்படுவது. இறைவனின் கைகளில் வீற்றிருக்கும் சங்கின் தோற்றத்தை உணர்த்துவதற்கு,

"தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவாவில் வந்து எழுந்தாலே போலநீயும்
வட மதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ் சங்கே" [17]

என்றும்

"சந்திரமண்டலம் போல் தாமோதரன்கையில்
அந்தர மொன்றின்றி யேறியவன் செவியில்
மந்திரம் கொள்வாயே போலும் வலம்புரியே" [18]

என்றும் சந்திரனின் ஒளி, நிறம் போன்றவற்றையும் எளிதில் அணுக முடியாத தூரத்தில் இருக்கும் தன்மையையும் காட்சி சங்கின் பெருமையையும் காட்சியையும் வெளிப்படுத்துகிறார். இது ஒரு அழகிய காட்சிப் புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது.

### 1.4 மேகம்

மேகம் வானில் சுற்றித்திரிந்து பலப்பல உருவங்களைக் காட்டி மகிழ்விக்கும். நீர் நிறைந்து காணப்படும் போது கருமை

நிறம் கொண்டு விளங்கும். அப்போது சூல்கொண்ட மேகம், கருவுடை மேகம் என்றெல்லாம் கூறப்படும். மற்ற நேரங்களில் நீல நிறத்தில் காணப்பெறும். வானத்தைப் பார்க்கும் ஆண்டாள் நீல நிற மேகத்தைப் பார்க்கிறாள். வானம் பெண்ணாகவும் நீல நிற மேகம் மேலாடையாகவும் தோன்றுகிறது. கண்ணனுக்குத் தூதுவிட மேகங்களை,

"விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்" [19]

என்று அழைக்கிறாள். இவ்வுருக்காட்சி நீல வண்ண மேகத்தைக் காட்டும் சொல்லோவியமாய் அமைந்துள்ளது.

நீர் சுமந்திருக்கும் கரிய மேகத்தைப் பார்க்கும்போது பெரியாழ்வாருக்கு கண்ணனின் நிறமாகத் தோன்றுகிறது. அவ்வுணர்வை,

"கருவுடை மேகங்கள் கண்டால் உன்னைக் கண்டா
லொக்கும் கண்கள்" [20]

என்று வெளிப்படுத்துகிறார். உணர்த்த இயலாத கண்ணனின் உருவை விளக்க மேகத்தைக் கொண்டு காட்சிப்புல உருக்காட்சியாக்குகிறார். மேலும்,

"கருவுடை முகில் வண்ணன் காயா
வண்ணன் கருவிளை போல் வண்ணன்" [21]

என்று கருமுகிலுடன் காயாமலர், கருவிளைமலர் போன்றவற்றையும் கூறி உணர்த்துகிறார். கண்ணன் வீதியில் நடந்து வருவதைக் கண்ட ஆண்டாளுக்கு அவன் தோற்றம் மேகக் கன்றுபோல் தோன்றுகிறது.

இதனை,

"பீதகவாடையுடைதாழப் பெருங்கார் மேகக் கன்றே போல்
வீதியார வருவானை விருந்தாவனத்தை கண்டோமே" [22]

என்று கண்ணனை மேகக் கன்று என்று சொல்லோவியம் படைக்கின்றார். மேகக் கன்று என்ற புதிய சொல்லாட்சி வியப்பு கலந்த ஒரு கற்பனையைத் தருகிறது.

கண்ணன் கரிய திருமேனியன் என்று கூறும்போது கேட்பவர்களுக்கு ஆவல் மீதூறும். அந்த ஆவலை வானம்

தீர்த்து வைக்கிறது. திருமால் திருமேனி கார்மேகம் போன்றது என்ற கூற்றை வானம் நிகழ்த்திக் காட்டுகிறது என்பதை,

"............ மொய்த்தெழுந்த
கார்மேகமன்ன கருமால் திருமேனி
நீர்வானம் காட்டும் நிகழ்ந்து" [23]

என்ற வரிகளில் அமைத்துக் காட்சிப்படுத்துகிறார். மேலும் கண்ணனின் வண்ணம் கொழுமுகில்போலும், குவளை மலர் போலும், ஆர்ப்பரிக்கின்ற கடல் போலும், அழகாய் நடம் பயிலும் தோகை மயில் போலும் தோன்றுகிறது. இக்கருத்தை

"குன்றாடு கொழு முகில்போல்
குவளைகள்போல் குரைகடல் போல்
நின்றாடு கண மயில் போல்
நிறமுடைய நெடுமால்" [24]

என்று காட்சிப்புல உருக்காட்சியாய்ப் படைத்தளிக்கிறார்.

**1.5 மலை**

மலையானது அனைவரும் காணும் விதத்தில் உயர்ந்து நிற்பது. உயர்ந்தும், அகன்றும் திண்மையும் பெற்றுத் திகழ்வது. தனக்குள் பலவகைத் தாவரங்களையும் கொண்டு உயிர்களின் வாழ்வுக்குத் துணை நிற்பது. அருவிகளையும் சுனைகளையும் கொண்டு இனிய நீர் வளத்தினைக் கொடுப்பது. பூமி வளம் பெற ஆறுகள் உற்பத்தியாகும் மையமாய் விளங்குவது. இப்படிப்பட்ட குணங்களைக் கொண்டமலை, இறைவனின் தோற்றத்தை விளக்க ஆழ்வார்களால் எடுத்தாளப்பெறுகிறது. இறைவனின் மேனி பச்சைநிறம் கொண்டதாக இருக்கின்றது. அவனது உயர்ந்து விளங்கும் தோற்றமும் அரக்கர்களை அழிக்கும் திண்மையையும் தான் உணர்ந்தவாறு எப்படி உணர்த்துவது என்று சிந்தித்த ஆழ்வார்கள் மலையைக் காட்டிக் காட்சிப்படுத்த முனைகின்றனர். அவர்களில் இறைவனின் நிறத்தையும் உருவத்தையும், தொண்டரடிப் பொடியாழ்வார்.

"பச்சை மாமலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்" [25]

என்று பச்சைமலையாகக் காட்சிப்படுத்துகிறார்.

மலையானது சூரிய ஒளியின் பிரகாசத்திற்கேற்ப அவ்வப்போது ஒவ்வொரு நிறம் காட்டக் கூடியது. நன்றாக ஒளிபடும்போது மலைமீது வளர்ந்திருக்கும் பசுமைமிகு தாவரங்கள் பச்சை நிறத்தைக் காட்டும். உதயகாலத்தில் சூரியனின் கதிர்கள்பட்டு பொன்னிறமாக ஒளிவிடும். அந்த நிலையை இறைவனின் மேனி ஒளியாக,

"மின்னும் சுடர் மலைக்குக் கண்பாதம் கை கமலம்" [26]

என்றும்,

"செம்பொன் திருவுடம்பே" [27]

என்றும்

"பூமருவு கண்ணியெம்பிரானைப் பொன் மலையை"

என்றெல்லாம் இறைவனின் திருமேனியை பொன் மலையாகக் காட்சிப்படுத்துகின்றார். மேலும் மாலை நேரத்தில் மேகம் சூரியக்கதிர்களை மறைத்திருக்கும்போதும் மலையின் நிறம் கருமையாகக் காணப்படும்.

"விட்டிலங்கு கருஞ்சுடர் மலையே திருவுடம்பு" [28]

என்ற அந்த நிலை பாசுர வரிகளாக அமைந்து கேட்பவர் மனத்திரையில் காட்சியாய் மாற்றித்தரும் இயல்பினதாய் அமைந்துள்ளது. இராமனின் வடிவழகைக் குறிப்பிடும் போது கம்பர் அவன் நிறத்தை எப்படி உணர்த்துவது என்று அறியாமல் திகைத்து,

"மையோ, மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ
ஐயோ, இவன் வடிவு" [30]

என்று குறிப்பிட்டு.

இராமனுடைய நிறத்தை, மை, மரகதம், மறிகடல், மழைமுகில் ஆகியவற்றைக் கொண்டு காட்சிப்புல உருக்காட்சியில் அமைக்கின்றார்.

முழுவதும் நீலமணியாலான பெரியமலை போன்றது எம்பெருமான் திருமேனி, நீலோத்பல மலர்களுக்கு ஒத்ததாக

மாட்டாது. கருநெய்தர்காடு பெரிதாயினும் திருக்கண்களுக்கு உவமை அங்கே கிடைக்க வில்லை. நீல மலையாகில் அதன் மேலுள்ள பெரிய குளங்களில் உயர்ந்து நிற்கும் செந்தாமரைகளைத் திருக்கண்களுக்கு ஒப்பிடலாம். இப்படி கருநெய்தல்களை விட்டுக் கரிய திருமேனியையும், திருக்கண்களையும் ஆழ்வார் தம் மனத்தே பொலிந்திருக்கப்பெற்றார். சில நொடிகளில் திருக்கண்களின் கோலங்களிலே மனம் பதிந்தது. அதனால் கவரப்பட்டுத் திருமேனியை விட்டுத் திருக்கண்களையே நினைத்தார். யோக நிலையில் ஒன்றையே நின்று நினைப்பார்க்கு அதுவே எங்கும் தோன்றுவது போல, இடைவிடாது கண்களையே நினைத்து வந்ததால் அவையே எங்கும் தோன்றின. [31]

''கருமாணிக்க மலைமேல் மணித்
தடந்தாமரைக் காடுகள் போல்
திருமார்பு வாய்கண்கை யுந்தி காலுடை
யாடைகள் செய்த பிரான்'' [32]

என்ற பாசுரத்தில் இறைவனின் திருமார்பு, வாய், கண், கை, உந்தி, காலுடை ஆடைகள் என்று காட்டிய ஆழ்வார். இறைவனின் கண்களை மட்டுமே நெருங்கி (Foucous) காணச் செய்கிறார். கண்களுக்குள்ள சிறப்பு,

''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி
நீண்ட அப்பெரியவாய கண்கள் என்னைப்
பேதமை செய்தனவே'' [33]

என்று திருப்பாணாழ்வார் அனுபவித்தது கருமை, குளிர்ச்சி, பெருமை, மலர்ச்சி, செம்மை, நீண்மை முதலியன. எவரெவர் எப்பலனை வேண்டுகின்றனரோ அவரவர்க்கு அப்பலனை அளிக்கின்ற வகையால் கண்களின் கோலம் காட்டப்பெறுகிறது திருக்கண்களின் பண்பு, அழகு, கருணை, அன்பு ஆகியவை பாசுரவரிகளால் கேட்பவர் அனுபவிக்கும் வண்ணம் காட்சிப்புல உருக்காட்சியாய்,

''நீலத்தடவரைமேல் புண்டரிக நெடுந்தடங்கண்
போலப் பொலிந்த தெமக்கெல்லா விடத்தவும் பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான் விசும்புக்கும் பிரான் மற்றும் நல்லோர்
பிரான்

கோலம் கரியபிரான் எம்பிரான் கண்ணின் கோலங்களே"[34]

என்று உணர்த்தப் பெறுகிறது.

கும்பகர்ணன் எதிரியாக நின்ற இராமனைக் கண்டான் மேகம் திரண்டு ஒருருக் கொண்டு பூமியில் நிற்கின்றது. அதன் கரத்தில் வானவில் ஒன்று ஒளிர்கின்றது. முகம், வாய், கண், கை, பாதம் எல்லாம் தாமரை மலர் போல் துலங்குகின்றன. என்று இராமனின் வடிவை,

"கண்டனன் வதனம் வாய் கண் கை கால் எனப்
புண்டரிகத் தடம் பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்து மண் வயங்க வந்தோர்
கொண்டலிற் பொலிதரு கோலத்தான் தன்னை"[35]

என்று கும்பகர்ணன் கண்டதாக கம்பன் காட்சிப்புல உருக்காட்சியைப் படைக்கின்றான். முகம், வாய், கண், கை ஆகியவற்றை தாமரை மலர் கொண்டும் நிறத்திற்குக் கார் மேகத்தையும் ஒப்புமைப்படுத்திக் காட்டும் காட்சிப்புல உருக்காட்சி ஆழ்வார்களது உருக்காட்சியுடன் ஒப்பு நோக்கத்தக்கது.

எம்பெருமான் திருமேனிக்கு முகில் ஒக்கும் என்பது தனிமையாகப் பார்க்கும் போதாம். திருமாலாக அவனைப்பார்க்கும் போது திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் என்றவாறு பொன் மேனியனாகவே பார்க்கப்படுவான். ஆகவே அவன் திருமேனிக்கு மின்னல் கலந்த மேகம் அல்லது மேருமலை சமமாகும். சிலர் மேருவுக்கு ஒக்கும் திருமால் திருமேனி என்று கருதுவர். அது தவறு. சிறந்த பொருளை உவமையாகக் கொள்வதே இயல்பு திருமேனியே சிறப்புள்ளதாகையால் அத்துடன் ஒக்கும் மேரு என்று கூறுவதே பொருந்தும். அதுபோல அவன் திருக்கைகளில் திகழும் திருவாழிக்கு ஒப்பாக மேருவின்மீது நின்ற செஞ்சுடரோன் எனலாம். எவ்வாறாயினும் திருமாலின் உருவம் வேறு, மேரு வேறு, திருவாழிவேறு சூரியன் வேறு. பிறகு ஏன் மேருவையும் சூரியனையும் கண்டு திருமாலின் திருமேனியும் திருவாழியும் இவை என்று கூறுகின்றனரென்றால், எங்கும் திருமாலையே காணும் நிலை பெற்றவர்கள் யோக நிலையில்

திருமாலையும் திருவாழியையும் தியானிக்கின்றவர்கள். எனவே காண்பதையெல்லாம் தியானிக்கும் உருவாகவே காண்கின்றனர். [36] என்ற கருத்தை,

> "திருமாலுருவொக்கும் மேரு அம்மேருவிற் செஞ்சுடரோன்
> திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும், அன்னகண்டும்
> திருமாலு ருவோடவன் சின்னமே பிதற்றா நிற்பதோர்
> திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கே வருந்தீவினையே" [37]

என்று ஓவியமாக்குகிறார்.

மிகப்பெரிய திருமேனியாதலால் குன்றம் என்கிறார். அது மரகதமயமானது என்பது நிறத்தைக் காட்டுவது. செக்கர்மா முகில் இறைவனது பீதகவாடையைக் காட்டுவது செஞ்சுடர்ப் பரிதியை திருமுடியாகவும், அழகிய சுடர்மிக்க நிலவும், பல சுடர்களும் அவன் அணிந்துள்ள அணிகலன்களாகவும் பவளநிறமாக வாயும் சிவந்து ஒளிவீசுவதாகக் கண்களையும் கூறி, குன்று, மேகம், பரிதி, நிலவு, பவளம் ஆகியவற்றைக் கொண்டு ஒரு காட்சிப்புல உருக்காட்சியைக் தோற்றுவிக்கின்றார். இறைவனின் தோற்றத்தைத் தன் மனத்திலுள்ளவாறு உணர்த்துவதற்கு,

> "செக்கர்மா முகிலுடுத்து மிக்கசெஞ்சுடர், பரிதிசூடி அஞ்சுடர்மதியம் பூண்டு
> பலசுடர் புனைந்த பவளச்செவ்வாய் திகழ்பசுஞ்சோதி மரகதக் குன்றம்
> கடலோன் கைமிசைக் கண்வளர்வதுபோல் பீதகவாடை முடிபூண்முதலா
> மேதகு பல்கலனணிந்து சோதி, வாயவும் கண்ணவும் சிவப்பமிதிட்டு" [38]

என்று இயற்கையைத் துணைக் கொண்டாலும் கடலோன் கைமிசை கண் வளர்வது போல் என்ற தொடரை ஆள்வது பயில்வோர் மனத்தில் தாய்மை உணர்வைத் தோற்றுவிக்கக் கூடியதாய் அமைந்துள்ளது. இந்த வரிகளைப் படிக்கும்போது சுரம் (Pitch Level) தாழ்ந்து ஒலிக்கும்படி, இதிலுள்ள சொல்லாட்சி அமைந்து உருக்காட்சியை தோற்றுகிக்கிறது. இப்பாசுரம் பெரும்பகுதி காட்சிப்புல உருக்காட்சியைக் கொண்டிருந்தாலும் கடலோன் கைமிசை கண்வளர்வதுபோல் என்ற வரிகள் மனவுணர்வு உருக்காட்சியாய் அமைகிறது.

### 1.6 கடல்

கடல் இடையறாத இயக்கமும் அளப்பருந்தன்மையும் கொண்டது தன்னிலையிலிருந்து மாறாமை, நிலத்துவாழ் மக்களுக்கு மழை தரும் கருணை, தன்மை, நோக்கி வரும் ஆற்றும் நீரைத் தனக்குள் ஏற்றுக்கொள்கிற கருணை ஆகிய சிறப்புக்களைக் கொண்டது. இறைவன் கருணையே வடிவானவன் என்பதை உணர்த்துவது போல்,

"பௌவநீர் உடையாடை யாகச் சுற்றி
பார் அகலம் திருவடியா புவன மெய்யா
எவ்விமா திரம் எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான்" [39]

என்ற பாசுரத்தில் கடலை ஆடையாகக் கொண்டவன் என்றும்,

"கண்டதுவே கொண்டு எல்லாரும் கூடி
கார்க்கடல் வண்ணனொரு என்திறத்து" [40]

என்று கடல்நிறமானவன் என்றும் காட்சிப்புல உருக்காட்சியால் உணர்த்துகிறார். இக்கருத்தை,

"மாநிலம் சேவடியாக தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக
விசும்பு மெய்யாகத் திசை கையாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர் கண்ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரியோனே" [41]

என்று இறைவனின் உருவமாகக் காட்சிப்படுத்துகிறார்.

### 1.7 அருவி

மலையின் மீதிருந்து அருவிகள் விழுவது பார்ப்பவர்கண்களுக்கு இனிய காட்சி. உயர்ந்து கருத்த மலையில் வெள்ளியை உருக்கி விட்டாற் போல் வெண்ணிற அருவி பூமியை நோக்கி இழியும் காட்சியைக் கொண்டு இறைவனின் திருமார்பில் உள்ள அணிகலன் உணர்த்தப்படுகிறது.

தாழ்வடங்கள் மலையின் இருபுறமும் விழும் அருவிகள் போல இருப்பதாக ஆழ்வாருக்குத் தோன்றுகிறது.

"பக்கங் கருஞ்சிறுப் பாறைமீதே அருவிகள் பகர்ந்தனைய
அக்குவடமிழிந்தேறித் தாழ" [42]

என்ற பாசுர வரிகளில் காட்சிப் படுத்துகிறார். மேலும் மலர் மாலையைக் குறிப்பிடும்போதும் அருவியைக் கொண்டு காட்சிப்படுத்திக் காட்டுகிறார். தார் என்பது இருமுனைகளும் இணைக்கப்படாத மலர் மாலையைக் குறிக்கும். இதை ஆண்கள் அணிவர். மாலை என்பது இருமுனைகளும் இணைக்கப்பட்டு விளங்குவது. இதனை பெண்கள் அணிவர் இந்த தார் என்ற மலர் மாலையை இறைவன் அணிந்திருப்பது உணர்ந்த மலையிலிருந்து தாழும் அருவிகள் போல் இருப்பதாக,

"வாழும் வகையறிந்தேன் மைபோல் நெடுவரை வாய்
தாழும் அருவி போல் தார்கிடப்ப" [43]

என்ற பாசுர வரிகளில் குறிப்பிடுகிறார்.

### 1.8 வித்து

இந்த உலகம் தோன்றுவதும் அழிவதுமாக இருப்பது. அவ்வாறு பிரளயத்தினால் அழியும் காலத்தில் பெருமையோடிருந்த பொருள்களை மீண்டும் தோற்றுவிக்கக் கூடிய வித்தாக இருப்பவன் என்பதை,

"ஊழிதோறூழி ஒவாதுவாழிய என்று
யாம்தொழ இசையுங்கொல்
யாவகையுலகமும் யாவருமில்லா
மேல்வரும் பெரும் பாழ்காலத்திரும் பொருட்டு
எல்லாம் அரும்பெறல் தணிவித்தொரு தான் ஆகி" [44]

என்று தான் ஒருவனே ஆகிநின்று அந்த ஓர் உருவம் உடையவனாக இருந்தே உலகம் முழுவதும் உற்பத்திக்காரணவித்தாக இருப்பவன் என்ற கருத்தை,

"தான் ஓர் உருவேதனி வித்து ஆய்" [45]

என்றும் அவ்வாறு தனிப்பெருங்காரண வித்தாக இருப்பவன்

என்றும் அவ்வாறு தனிப்பெருங்காரண வித்தாக இருப்பவன் பாற்கடலில் அரவணை மீது அறிதுயில் கொள்பவனாக இருக்கின்றான் என்ற கருத்தை.

"வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
என்று ஆண்டாளும்" [46]

"பின்னை மணாளனைப் பேரிற் கிடந்தானை
முன்னை யமரர் முதல் தனிவித்தினை" [47]

என்ற பெரியாழ்வாரும் காட்சிப் படுத்துகின்றனர். இந்த உலகப் பொருட்களின் தோற்றத்திற்கும் இயக்கத்திற்கும் மூலப்பொருளாய் இருப்பவன். உலகத்தின் புறத்தே மட்டுமின்றி மனத்தில் தோன்றும் நினைவுகளுக்கும், மன அலைகளின் இயக்கங்களுக்கும் காரணமாக இருப்பவன் என்பதை,

"வேர் முதலாய் வித்து ஆய்ப்பரந்து தனிநின்ற
கார்முகில் வண்ணம்" [48]

என்றும் குறிப்பிடுகிறார்.

"நாராயணன் என்பது நரர்களின் உயிரும் ஆதாரமும் என்றும், எல்லைக்குட்பட்ட பொருள்களில் உள் உயிர் என்றும் பிரபஞ்சத்தின் உயிர் என்றும், எல்லாப் படைப்பின் முழு முதல், தொகுதியினுள்ளே பொதிந்த உயிர் என்றும் குறிக்கப்படுகிறது. நாராயணம் என்பதை ஒருபோதும் குறைவு பொறாத விதை என்றும் பல வடிவம் கொண்ட அவதாரங்களின் புகலிடம் என்றும் கருதப்படுகிறது" [49] இதனை,

"நினைந்த எல்லாப் பொருள்கட்கும்
வித்துஆய் முதலில் சிதையாமே
மனஞ்செய் ஞானத்து உன்பெருமை
மாசூனாதோ மாயோனே" [50]

என்றும் கூறி இறைவன் மூல காரணனாய் இருப்பதை விதையைக் கொண்டு காட்சிப்புல உருக்காட்சியாய் அமைத்துள்ளனர்.

இறைவன் இந்த உலகம் உருவாவதற்கு மூலக்கருவாக விளங்குபவன், தான் படைத்த உலகை உண்டு உமிழும்

தன்மையவன் என்று,

> "தானே உலகெல்லாம்
> தானே படைத்து இடந்து
> தானே உண்டு உமிழ்ந்து
> தானே ஆள்வானே" [51]

என்றும்

> "சீர்வளம் கிறர் மூவுல
> குண்டுமிழ் தேவபிரான்" [52]

என்றும் ஆழ்வார்கள் தங்கள் பாசுரங்களில் குறிப்பிடுகின்றனர், கம்ப நாடனும் இறைவனின் இத்தன்மையை,

> "உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
> நிலைபெறுத்தலு நீக்கலும் நீங்கலா
> அலகிலா விளையாட்டுடையார் அவர்
> தலைவர் அண்ணவர்க்கே சரண் நாங்களே" [53]

என்றும்

> "உலகம் யாவையும் படைத்து அளித்து
> உண்டு உமிழொருவன்" [54]

என்றும் இறைவனின் தன்மையைக் காட்சிப்படுத்துகின்றனர்.

## 1.9 கொழுந்து

கொழுந்து என்பது இலையின் இளமைப்பருவம். இதனைத்துளிர் என்றும் தளிர் என்றும் கூறுவர். விதை செடியாக முளைக்கும் போது முதலில் தோன்றும் வடிவம் கொழுந்து. கொழுந்து தோன்றத் தோன்றத்தான் செடி வளர்ந்து மரமாகிப் பல்கிப் பெருகுகிறது. இது மென்மையாகவும் அழகிய வண்ணம் கொண்டதாகவும் பளப்பளப்பாகவும் காண்பவர் விரும்பும் வண்ணம் விளங்குகிறது. இறைவன் உலகப் பொருட்களுக்கெல்லாம் வித்தாக விளங்குகிறான் என்று கூறிய ஆழ்வார் இறைவனைக் கொழுந்தாகக் கண்டு மகிழ்கிறார்.

> "கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே" [55]

"ஆயர்தம் கொழுந்தே" [56]

"ஆயர்கோலக் கொழுந்தினை" [57]

என்றும்,

"வந்தருளியென்னெஞ்சிடங் கொண்டவானவர் கொழுந்தே" [58]

என்றும் இறைவனைக் கொழுந்தாகக் காட்டுகின்றனர். இவ்வுலகில் அறம் என்ற மரம் தழைப்பதற்காக இந்த பூமியில் அவதரித்தவன் கண்ணன். தன் குழந்தைப்பருவக் குறும்புகளோடு கம்சனின் கொடுமைகளை ஒழித்தவன் என்பதனால் கொழுந்து எனப்படுகிறான். மரங்களுக்குக் கொழுந்து காண்பவர் கண்களுக்கு விருந்தாக அமைவது போல் மனிதர்களில் குழந்தைகள் காண்போரை வசப்படுத்தும் தன்மையன. வானவர் கொழுந்தே என்ற சொல்லாட்சி குழந்தைக் கண்ணனை மனக் கண்ணில் தோற்றுவிக்கிறது. கம்பன் இறைவனை ஞானத்தனிக் கொழுந்து என்று,

"ஒன்றாகி மூலத்து உருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி ஊழி
சென்றா சருங் காலத்து அந்நிலைய தாகித்
திறத்துலகம் தானாகி செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக் கொழுந்தே" [59]

என்ற பாடல் வரிகளில் அமைத்துக் காட்டுகிறார்.

### 1.10 மலர்கள்

இறைவனின் திருமேனி நிறத்தை உணர்த்தவும், திருக்கண்கள், திருவடிகள், திருக்கரங்கள் ஆகியவற்றின் அழகை உணர்த்தவும் ஆழ்வார்கள் பலவித மலர்களை உருக்காட்சியாக ஆள்கின்றனர். திருமாலின் நிறத்தை உணர்த்த கார்முகிலைக் காட்டுவது வழக்கமாயினும் கருவிளை மலர்களையும் காயா மலர்களையும் பார்க்கும் போது ஆழ்வார்களுக்கு எம்பெருமான் மேனிநிறம் காட்டுவனவாகத் தெரிகின்றது.

"கார்த்தண் முகிலும் கருவிளையும் காயா மலரும் கமலப்பூவும்
ஈர்த்திடுகின்றன வென்னை" [60]

என்ற பாசுரவரிகள் இம்மலர்களின் நிறத்தை நம்மனக் கண்ணில் தோற்றுவித்து வடிவத்தை காட்சிப்புல உருக்காட்சியாய் மாற்றித் தருகின்றன.

இராமனின் உருவ அழகில் ஈடுபட்ட கம்பன் அவன் கருநிற மேனி நீலமலர்களான காவியும், குவளையும், காயாவும் போன்ற நிறத்துடன் ஓவியத்திலும் அழகுமிக்க உருத்தோற்றத்தோடு காணப்பட்டதாக,

"காவியும் குவளையும் கடிகொள் காயாவும் ஒத்து
ஓவியம் சுவைகெடப் பொலிவது ஓர் உருவாடே
தேவரும் தொழுகழல் சிறுவன் முன் பிரிவது ஓர்
ஆவி வந்தென்ன வந்து அரசன் மாடு ஆணுகினான்" [61]

என்று பல வண்ணங்களால் அமைந்த ஓவியம் ஒரே நிறம் கொண்ட இராமனின் முன் சுவையிழந்து போனதாகக் குறிப்பிட்டு இராமனின் அழகைக் காட்சிப்புல உருக்காட்சியாகப்படைத்துள்ளமை நோக்கத்தக்கது.

இறைவனின் கண்கள் மலர்களைக் கொண்டு காட்சிப்படுத்தப்படுகின்றன. இறைவனின் வாய் கனியால் உணர்த்தப்படுகிறது. இறைவனின் கண்கள் நெருங்கிப் பூத்த தாமரை மலர்களைப் போல் இருப்பதாகக் கூறப்படுகிறது. கண்களின் சிவந்த நிறம், மலர்ச்சி, குளிர்ச்சி, அழகு ஆகியவற்றுடன், இறைவன் பக்தர்களைக் கண்டு மகிழும் இயல்புடையவன் என்பதால் சூரியனைக்கண்டு மகிழும் இயல்புடைய தாமரையால் உணர்த்துவதுமாகும். கனிபோன்ற வாய் என்பதால் சிவந்த நிறம், இனியமணம், இன்சுவை ஆகிய தன்மைகளை உணர்த்தி இறைவனின் வாய் காட்சிப்புல, முகர்வுப்பல, நுகர்வுப்புல உருக்காட்சிகளால் காட்டப்படுகிறது. ஆயிரம் பெரிய சூரியன்கள் ஒளி வீசினாற்போன்ற திருமுடியினை உடையவன் என்று இறைவன் காட்சிப்படுத்தப்படுகின்றான். திருமுடிக்கு ஒப்பாகக் காட்டக்கூடிய பொருள் உலகில் இல்லை என்பதால் ஆயிரம் சூரியன்கள் ஒளிவீசினாற் போல என்று ஒளியை காட்சிப்புல

உருக்காட்சியாய்,

"...... வானவர் முறைமுறை
வழிபட நெறீஇ தாமரைக் காடு
மலர்க்கண் ணோடு கனிவாயுடையது
மாய் இரு நாயிறாயிரம் மலர்ந்தன்ன
கற்பகக் காவு பற்பல வன்ன
முடிதோளாயிரம் தழைத்த
நெடியோய்க் கல்லதும் அடியதே வுலகே" [62]

என்று காட்சிப்படுத்துகிறார்.

கண்ணனைக் குழந்தையாக அனுபவிக்கும் பெரியாழ்வார் அக்குழந்தையின் பாதங்களைச் செந்தாமரையாகவும் விரல்களைச் சிற்றிதழ்களாகவும் காட்டுகிறார். இதனால் தாமரையின் சிவந்த நிறம், மென்மை, மணம், குளிர்ச்சி, நீண்ட வடிவம் ஆகியவை உணரப்படுகின்றன.

"செங்கமலக் கழலிற் சிற்றிதழ் போல் விரலில்" [63]

என்று ஒரு குழந்தையின் பாதங்கள் காட்சிப்புல உருக்காட்சியாய் அமைகின்றன.

கண்ணனின் பவளம்போல் சிவந்த வாயினருகில் அவனது கரிய சுருண்ட குழல்கள் வந்து வந்து மோதுகின்றன. இக்காட்சியானது செந்தாமரைப்பூவில் தேனுண்ணுவதற்காகக் கருவண்டுகள் வந்து மொய்ப்பது போலத் தோன்றுகிறது. இதனை,

"செங்கமலப் பூவில் தேனுண்ணும் வண்டே போல்
பங்கிகள் வந்து உன் பவளவாய் மொய்ப்ப" [64]

என்று உருக்காட்சியாகப் படைக்கிறார்.

### 1.11 மழை

மழையானது மண்ணிலுள்ள உயிர்களுக்கெல்லாம் அமுதம் போன்றது. மண் குளிர்ந்து, ஆறு குளங்கள் நிரம்பி, பயிர்களும் மரங்களும் செழித்து வளர மழையின் கொடை தேவையாகிறது. இந்த மழை, மேகங்களிலிருந்து கிடைப்பது. சூரிய வெப்பத்தினால் நீர் நிலைகளிலுள்ள நீர் ஆவியாக மாறி

வானத்தில் சூழ்ந்திருக்கும்.

நீர் நிறைந்த மேகத்தைக் கண்ணனின் மேனி நிறத்திற்கும், கண்களுக்கும் ஒப்புமைப்படுத்தி ஆழ்வார்கள் குறிப்பிடுவர். கண்ணனின் கண்கள் மழைக்கண்கள் என்று ஆண்டாள் குறிப்பிடுகிறார். மழையின் குணம் வேண்டுவோர் வேண்டாதார் என்று பாராமல் உலகம் முழுவதும் உய்யும்படி பெய்வது. கண்ணனின் கண்களும் அவ்வாறே உலகுய்ய அருளைப் பொழிவது என்ற கருத்தை,

"ஆழிமழைக் கண்ணா ஒன்று நீ கைகரவேல்" [65]

என்ற பாசுர வரிகளில் உணர்த்துகிறார்.

மழைவரும் நேரம் காற்று ஓசையுடன் புழுதிவாரித் தூற்றும், காற்றில் ஒரு குளிர்ச்சியும் தோன்றும். இதுவே மழைவரப் போகிறதென்பதற்கான அறிகுறியாகும். கண்ணன் மற்ற ஆயச்சிறுவர்களுடன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு காலையில் சென்று மாலையில் கன்றுகளோடும் தோழர்களோடும் வீடுநோக்கி விரைந்து வருகிறான். அப்போது வீதியில் கன்றுகளும் சிறுவர்களும் எழுப்பும் புழுதி, காற்றுடன் கலந்து வீசுகிறது.

மழைவரும்போது ஆவலுடன் எதிர்பார்ப்பது போல் குழந்தைகளின் வரவை ஆவலுடன் தாய்மார்கள் எதிர்பார்த்திருப்பர். இக்காட்சி,

"தழைகளுந் தொங்கலுந் ததும்பியெங்கும்
தண்ணுமை யெக்கம் மத்தளி தாழ்பீலி
குழல்களுங் கீதமுமாகி யெங்கும்
கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு
மழைகொலோ வருகின்றதென்று
சொல்லி மங்கைமார்சாலக வாசல் பற்றி
நுழைவனர் நிற்பனராகி எங்கும்
உள்ளம் வீட்டுடன் மறந் தொழிந்தனரே" [66]

என்ற பாசுர வரிகளால் காட்சிப் படுத்தப்படுகிறது. இப்பாசுரத்தைக் கேட்கும்போது இக்காட்சி நாடகம் போல்

மனத்தில் விரிகிறது.

## 1.12 ஒளி - தீ

தீ சிவந்த நிறம் கொண்டது. கண்களால் காணக்கூடியது. அதன் தன்மையோ வெப்பத்தைக் கொடுப்பது. உணர்வால் உணரக் கூடியது. புகையை உடையது. அனுமானத்தால் உணரக் கூடியது. பயம் என்ற மனவுணர்வு, தீ நெருப்பு போன்ற காட்சிப்புலத்தால் அறியக்கூடிய பொருள்களாலும் வெப்பம் என்ற ஊற்றுப்புல உணர்வால் அறியக் கூடிய ஒன்றாலும் உணர்த்திக் காட்டப்படுகிறது.

இறைவன் அறமுடையாரைக் காத்து அல்லாதாரை அழிப்பவன் தீயோரை நெருப்புப் போல் காய்பவன்

"என்பிலதனை வெயில் போலக் காயுமே
அன்பிலதனை அறம்" [67]

என்ற திருக்குறள் கூற்றுக் கிணங்க,

இறைவன் செவ்விய குணமுடையவன் நல்லோரைக் காத்துக் தீமைகளை அழித்து இவ்வுலகை உய்விப்பவன்.

"..... ....... செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா" [68]

என்றும்

"தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப் பென்ன நின்ற நெடுமாலே" [69]

என்றும் வெப்பம் என்ற ஊற்றுப்புல உணர்வினைக் கொண்டு பகைவரின் மனத்தில் தோன்றும் பயத்தை உணர்த்துகிறார்.

## 1.13 ஒளி - மாணிக்கம்

கண்ணனின் நிறம் கருமை நிறம் என்று கூறப்படுகிறது. ஒளி பொருந்தியவன் என்றும் கருமை நிறத்தவன் என்றும் தனித்தனியே கூறாது நிறத்தையும் ஒளியையும் சேர்த்துக் கூறினால் தான், உருவ எழிலை உணர்ந்து கொள்ள முடியும் என்பதற்காகவோ அல்லது அவன் நிறத்தையும் ஒளியையும் தனித்தனியே பிரிக்க முடியாத எழிலுருவை உவமைகூற

இயலாதவர்களாகி,

"ஈசனென் கருமாணிக்க மென் செங்கோலக் கண்ணன்" [70]

என்றும்

"எல்லையில் சீர் என் கருமாணிக்கச் சுடரை" [71]

என்றும் வாட்டமிலென் கருமாணிக்கம் கண்ணன் மாயம்போல் கோட்டிய விலலோரு மின்னு மேகக் குழாங்கள் காண் என்று நிறத்தையும் ஒளியையும் பிணைத்துக் காட்சிப் படுத்துகிறார். மேலும் கண்ணனின் எழிலைக் கூறவந்த ஆழ்வார் வியந்து எவ்வாறு உவமை கூறுவது என்று தெரியாமல் திகைக்கிறார். பின்பு கார்வானில் மின்னலைப் பார்க்கிறார் கண்ணனின் மேனியெழிலாகத் தோன்றுகிறது.

"பொலிந்திருண்ட கார்வானில் மின்னல் போல் தோன்றி" [72]

என்று காட்டுகிறார். இதேபோல் கண்ணனின் அழகொளியை முத்தின் ஒளியாகக் காட்டுகிறார். முத்து வெண்மை நிறம் உடையது. இருப்பினும் பச்சை சிவப்பு போன்ற நிறங்களை மென்மையாகச் சிதறவிட்டு ஒளிரும். ஆழ்வாருக்கு கண்ணனின் நிறம் முத்தின் ஒளியில் தோன்றும் பச்சை நிறமாக ஒரு நேரம் தோன்றுகிறது மற்றொரு சமயம் கார்கால மேகத்திடையே தோன்றும் மின்னலாகத் தோன்றுகிறது.

"முத்தொளி மரகதமே
முழங்கொளி முகில் வண்ணா" [73]

என்று கண்ணனின் நிறத்தைக் காட்சிப்புல உருக்காட்சியாக்கிக் காட்டுகிறார். மேலும் இறைவனின் ஒளியை உவமை கூற இயலாது.

"சாதி மாணிக்கம் என்கோ
சவிகொள் பொன் முத்தம் என்கோ
சாதிநல் வயிரம் என்கோ
தவிவில்சீர் விளக்கம் என்கோ
ஆதியஞ் சோதி என்கோ
ஆதியம் புருடன் என்கோ

[illegible]
அச்சுதன் அமலனையே” [74]

என்று பல்வேறு ஒளியைப்பற்றிக் கூறி இறை ஒளியை விளக்க முற்படுகிறார்.

### 1.14 காலைப்பொழுது

கறவையினங்களை விடியற்காலையில் பனிப்புல் மேயவிடுவது வழக்கம். இவ்வழக்கம் சிறுவீடு மேய்தல் எனப்படும். இந்தக் காலை நேரக் காட்சி சொல்லோவியமாகப் படைக்கப்பட்டுள்ளது. விடியத்தொடங்கி விட்டதை கிழக்குவானம் காட்டுகிறது. எருமைகள் சிறுவீடு மேயச்செல்கின்றன. இக்காட்சி,

“கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தன காண்” [75]

என்று காட்டப்படுகிறது.

ஆயர்பாடியின் செழிப்புக்கு முதற்காரணமான செல்வங்கள் எருமைகள். இவை கானகம் சென்று பசும்புல்லை நன்றாக மேய்ந்து, குடம் குடமாகப் பாலைச் சுரக்கும் வள்ளல்கள். அப்படிப்பட்ட எருமைகளின் மடிகள் பால் நிறைந்து கனத்துள்ளன. தங்களது கன்றுகளை நினைத்த மாத்திரத்தில் பாலைப் பொழிகின்றன. இதனால் ஆயர்களின் இல்லங்கள் சேறாகின்றன.

இக்காட்சி,

“கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிறங்கி
நினைத்து முலைவழியே நின்று போல் சோர
நனைத்தில்லம் சேறாக்கும்” [76]

என்ற பாசுரவரிகளில் ஓவியமாய்க் காட்டப்படுகிறது.

### 1.15 உச்சிப்பொழுது

இக்கானகத்தில் நண்பகலில் பகலவன் காலும் வெப்பம் தாங்கமாட்டாது துன்புறும். நாய்களும் கழுகுகளும் அவ்விடத்தில் நடக்க முடியாமல் கால் தடுமாறித் திண்டாடுகின்ற காட்சியை ஊற்றுப்புல உருக்காட்சியின் துணைகொண்டு,

"கவ்வுநாயும் கழுகும் உச்சிப்போதொடுகால் சுழன்று
தெய்வமல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேள் குன்றமே" [77]

என்று காட்சிப்படுத்தியிருப்பதை அறிய முடிகிறது. மலையின் நண்பகல் வெப்பம் ஊற்றுப்புல உருக்காட்சியாய் இருப்பினும் அந்த வெப்பத்தின் கொடுமையால் நாய்களும் கழுகுகளும் திண்டாடுவதை அழகிய காட்சிப்புல ஓவியமாக்கியுள்ளார்.

**1.16 கண்ணனின் தோற்றம்**

கண்ணன் கன்றுகளை மேய்க்கத் தன் தோழர்களோடு கானகம் சென்று வருகிறான். போகும்போது அவன் வலக்காதின்மேல் தோன்றிப்பூ அணிந்து கழுத்தில் மல்லிகை மாலை மௌவல் மாலை அணிந்துள்ளான். தலைக்குழல்களைத்தாழ விட்டுக் கொண்டு புல்லாங்குழலை ஊதிக்கொண்டிருக்கின்றான். இக்காட்சி,

"வலங்காதில்மேல் தோன்றிப் பூவணிந்து
மல்லிகைமாலை மௌவல் மாலை
சிலிங்காரத்தால் குழல்தாழ விட்டுத்
தீங்குழல் வாய்மடுத் தூதியூதி" [79]

என்ற பாசுர வரிகளில் காட்டப்படுகிறது. இப்பாசுரவரிகள் மல்லிகை மாலையைக் கழுத்தில் அணிந்து குழலூதும் கண்ணனின் உருவத்தை மனத்திரையில் தோற்றுவிக்கும் காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது.

**1.17 காதல் கொண்ட பெண்ணின் இயல்பு**

காதல் கொண்டபெண் தன்னை அழகுபடுத்திக் கொள்வதும் அடிக்கடி கண்ணாடி பார்த்துத் திருத்திக் கொள்வதும் இயல்பு. இவ்வியல்பை காட்சிப்புல உருக்காட்சியாக்கி கண்ணன் மேல் மகள் மாலுறு தோற்றத்தை,

"காறைபூணுங் கண்ணாடி காணும் தன்கையில் வளைகுலுக்கும்
கூறையுடுக்குமயர்க்கும் தன் கொவ்வைச் செவ்வாய் திருத்தும்
தேறித்தேறி நின்றாயிரம் பேர்த் தேவன் திறம் பிதற்றும்
மாறில் மாமணி வண்ணன்மேல் இவள் மாலுறுகின்றாளே" [80]

என்று விளக்கும் பாசுரத்தைக் கேட்பவர்கள் ஒரு நாடக நிகழ்ச்சியைப் பார்த்தது போன்ற உணர்வைப் பெறுவர்.

### 1.18 கண்ணனின் குறும்புகள்

ஆயர்பாடியில் ஒருவீட்டில் கெண்டைபோல் ஒளிரும் கண்களையுடைய பெண் ஒருத்தி தயிர் கடைந்து கொண்டிருக்கிறாள். அங்குவந்த கண்ணன் நானும் கடைவேன் என்று குழல்கள் அலைந்தாடவும் அவன் ஒளிபொருந்திய முகத்தில் வியர்வைத் துளிகள் அரும்பவும் செவ்விய இதழ்கள் துடிக்கவும் குளிர்ச்சி பொருந்திய தயிரைக் கடைந்தான் இக்காட்சியை,

"கெண்டையொண்கண் மடவாளொருத்தி
 கீழையகத்துத் தயிர் கடையக்
கண்டு ஒல்லை நானும் கடைவேனென்று
 கள்ளவிழியை விழித்துப் புக்கு
வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ
 வாண்முகம் வேர்ப்பச் செவ்வாய் துடிப்ப
தண்டயிர் நீ கடைந்திட்ட வண்ணம்" [81]

என்று காட்சிப்புல உருக்காட்சியையும் ஊற்றுப்புல உருக்காட்சியையும் இணைத்து ஒரு நாடகக் காட்சி போல் அமைத்துள்ளார்.

**கண்ணனின் கையழகும் குறும்பும் :**

கண்ணன் கைகளால் வெண்ணையை அளைந்து பின்பு வாயில் வைத்து உண்கிறான். அந்தக் கைகள் லேசாகக் குவிந்து வெண்ணையைத் தொடும்போது முகிழக்கும் சிறு தாமரைபோல் இருக்கிறது. விரிந்தும் விரியாத தோற்றம், செம்மைநிறம், மென்மை போன்ற குணங்களைக் கொண்டு கண்ணனின் கைகள் செந்தாமரை முகிழ்ப்பது போல் தோற்ற மளிக்கிறது. வெண்ணையை அளைந்தும் உண்டும் விளையாடும் கண்ணனை அடிப்பதற்குத் தாய் அசோதை கையில் உள்ள கயிற்றை ஓங்குகிறாள். கண்ணனோ வெண்தயிர் தோய்ந்த செவ்வாயுடனும், தாயின் ஓங்கிய கையைக் கண்டு

[illegible]
அடிக்கவேண்டாம் என்று கைகூப்புகிறான். இக்காட்சியை,

> "முழுதும் வெண்ணையளைந்து தொட்டுண்ணும்
>   முகிழிளஞ் சிறுத்தாமரைக் கையும்
> எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கெள்கு நிலையும்
>   வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
> அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்கும்
>   அணிகொள் செஞ்சிறு வாய் நெளிப்பதுவும்
> தொழுகையு மிவை கண்டவசோதை
>   தொல்லை இன்பத்திறுதி கண்டாளே" [78]

என்று பாசுரத்தில் அமைத்துக் காட்டுகிறார். இப்பாசுரத்தைக் கேட்பவர் அல்லது படிப்பவர்களுக்கு காட்சிப்புல உருக்காட்சியாகி உடனடியாக ஒரு நாடகக் காட்சியைக் கண்டது போலும் உணர்வை எழுப்புகிறது.

### 1.19 குழல் ஊதுதல்

கண்ணன் முல்லை நிலத்து தெய்வமாக வணங்கப்படுகிறான். ஆயர்குலத்திடையே ஒளித்து வளர்க்கப்பட்டவன். ஆயனாக மாடு கன்றுகளை மேய்த்தவன். ஆநிரை மேய்க்கும் கோவலர்கள், கையில் புல்லாங்குழலை வைத்து ஊதுவர். கண்ணன் குழல் ஊதுவதில் வித்தகன். அவன் குழல் இசையின் சிறப்பைச் சொல்லவந்த ஆழ்வார் கண்ணன் குழல் ஊதும் அந்த அழகைக் காட்சிப்படுத்தி அவன் இசையின் சிறப்பையும் காட்சிப்படுத்துகிறார்.

கண்ணன் குழலை வாயில் வைத்து ஊதுகிறான். அவன் சின்னஞ்சிறு விரல்கள் குழலின் துளைகளை மாற்றி மாற்றி அடைத்தும் திறந்தும் இசையைப் பிறப்பிக்கின்றன. அவன் கண்கள் இசையில்லயித்து ஒருபக்கமாக நிலைத்து நிற்கின்றன. குழலினுள் காற்றைச் செலுத்துவதால் அவன் செவ்வாய் கொப்பளிக்கிறது. அவன் குழலூதுவதே ஒரு யோக நிலையாக உந்தியிலிருந்து காற்றை மேலெழுப்பி மிடற்றில் செலுத்தி மூக்கறைக்குள் செல்லாதபடி கட்டுப்படுத்தி வாய்வழியாக குழலுக்குள் செலுத்தும்போது ஏற்படுகின்ற அழுத்தமானது அவன் [illegible] நெறியச் செய்கிறது. மனம், மொழி, மெய்

அனைத்தையும் ஒருமுகப்படுத்தி, அவன் இசைக்கும் இசையானது எவ்வளவு சிறப்பு வாய்ந்ததாக உள்ளது என்பதையும் காட்சிப்படுத்துகிறார்.

கண்ணனின் குழலிசையின் சிறப்பை, பறவைகள், கறவையினங்கள் ஆகியவற்றின் செயல்பாடுகளால் உணர்த்துகிறார். பறவைக் கூட்டங்கள் தங்கள் தங்கள் கூடுகளைத் துறந்து கண்ணனைச் சூழ்ந்து தரையில் மயங்கிக் கிடக்கின்றன. கறவையின் கனங்களோ கால்களைப் பரப்பித் தலையைக் கவிழ்த்துக் கொண்டு தங்கள் செவிகளையும் ஆட்ட மறந்தனவாகி மயங்கிக் கிடக்கின்றன. இவ்வாறு கண்ணன் குழலூதும் செயலை ஒரு யோக நெறியாகக் காட்டுகிறார். அவ்வாறு மனம், மொழி, மெய் அனைத்தையும் ஒரு செயலில் ஒருமுகப் படுத்தும்போது அந்த செயல் எவ்வளவு சிறப்புடையதாக இருக்கும் என்பதைக்கண்ணனின் இசைச்சிறப்பு உணர்த்துகிறது. அந்த இசைச் சிறப்பை பறவைகள், கறவையின் கணங்கள் ஆகியவை மனம் ஒன்றி லயிக்கும் நிலையைக் காட்டி,

"சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண்
கோடச்செய்யவாய் கொப்பளிப்ப
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல் கொடுதினபோது
பறவையின் கணங்கள் கூடுதுறந்து
வந்த சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச் செவியாட்டக் கில்லாவே" [82]

என்று காட்சிப்புல உருக்காட்சியாகப் படைத்துள்ளார். மேலும் கண்ணனின் இசைச் சிறப்பை,

"........ ஊதுகின்ற குழலோசை வழியே
மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லுங் கடைவாய் வழி சோர
இரண்டு பாடுந்துலுங் காப்புடை பெயரா எழுது
சித்திரங்கள் போல நின்றனவே" [83]

என்று மான்களின் இசைலயிப்பைக்காட்டி உணர்த்துகிறார்.

எளிய சொற்களால் அமைத்துக் காட்டும் இக்காட்சியானது ஒரு நாடகக் காட்சி போலும், திரையில் எழுதப்பட்ட ஓவியம் போலும் அமைந்து இப்பாசுரங்களை படிப்பவர் மனத்தில் ஓவியமாகிறது.

### 1.20 மழைவளம்

மழைபொழிந்தால் இவ்வுலகம் வளம் பெறும் நீரின்றியமையாது உலகம் என்றாற்போல் பயிர்கள் செழிக்கவும் தாவரங்கள் உயிர்வாழவும் உலகில் உள்ள உயிரினங்கள் எல்லாம் வாழவும் நீர்நிலைகள் நிரம்பவும் மழை அவசியம். மழை இல்லாமல் போனால் விளைச்சல் இன்றி வரண்டு, உணவுப் பஞ்சம் ஏற்பட்டுவிடும். பஞ்சம் ஏற்பட்டால் பல தீங்குகள் நாட்டைப்பற்றும் பஞ்சத்தின் காரணமாக பசி, பட்டினி, நோய், கொள்ளை, கொலை என்று பல பாதகங்கள் வந்து நாடு நலம் இழக்கும். எனவே நாடு தீங்கின்றி விளங்க மழை பொழிய வேண்டும். மழையானது சில சமயங்களில் பெய்யாமல் இருந்து தீங்கு விளைவிப்பதும் உண்டு, அதிகமாகப் பெய்து அழிப்பதும் உண்டு. எனவே மழையை வேண்டும் ஆண்டாள் தீங்கின்றி வாழ்விக்கப் பெய்யும்படியாக வேண்டுகிறார். அவ்வாறு மழைபெய்தால் நாடு எவ்வாறு வளம் பெற்றிருக்கும் என்பதையும் படம்பிடித்துக் காட்டுகிறார். வயல்களில் நெற்கதிர்கள் ஓங்கிவளர்ந்திருக்கும். செம்மைநிற நெல்மணிகள் பெருத்து விளங்கும். அப்படிப்பட்ட நெல்வயல்களின் ஊடே கயல்கள் துள்ளும் நீர் வளமாக இருப்பதால் குவளை மலர்கள் மலர்ந்து காணப்படும். அம்மலர்களின் போதில் உடலில் அழகியபுள்ளிகளையுடைய வண்டுகள் கண்ணுறங்கும். பசும்புல் செழிப்பாக வளர்ந்திருப்பதால் அவற்றை மேய்ந்துவிட்டுப் பசுக்கள் வளமாக விளங்கும். அவற்றின் பருத்த முலைகளைப் பற்றி வாங்கக் குடம் குடமாகப் பாலைப் பொழியும் பசுக்கள் வள்ளல்கள் போல் விளங்குவன. இவ்வளவு செல்வங்களையும் தரத்தக்கது மழையேயாகும். என்பதை,

"ஓங்கியுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்று நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து

ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடுகயலுகள
பூங்குவளை போதில் பொறிவண்டு கண் படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி வாங்கக்
குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்" [84]

என்ற இப்பாசுரத்தில், செந்நெல் ஓங்கி வளர்ந்திருப்பது, நெற்கதிர்களின் ஊடே கயல்கள் துள்ளுவது, குவளைகள் மலர்ந்திருப்பது, அதன் பொகுட்டில் வண்டுகள் உறங்குவது செழுமையான பசுக்கள் போன்றவை திரைச் சீலையில் தீட்டப்பட்ட ஓவியமாய் மனக்கண்களில் விரிகின்றன.

### 1.21 மலைக்காட்சிகள்

ஆழ்வார் காட்டும் இமயமலையில் ஏலக்காயின் மணம் கமழ்கிறது. குளிர்ச்சியான பொழில்கள் அமைந்துள்ளன. அடர்ந்து நெருங்கியுள்ள மேகங்கள் அதிரும் ஒலியும் கார்மேகத்தைக்கண்டு தோகைமயில் நடனமிடும் அழகும், குளிர்ச்சியான பெரிய சுனைகளும் கொண்டதாக விளங்குகிறது.

"ஏலநாறு தண்தடம் பொழிலிடம் பெற
இருந்த நல்லிமயத்துள்
ஆலிமா முகிலதிர்தர அருவரை அகடுமுகடேறி
பீலிமாமயில் நடஞ்செய்யும் தடஞ்சுனைப்
பீரிதிசென்றடை நெஞ்சமே" [85]

என்று இமய மலையின் அழகிய காட்சியை முகர்வுப்புல கேள்விப்புல காட்சிப்புல உருக்காட்சிகளைக் கொண்டு நாம் எளிதில் செல்ல இயலாத இமயமலைக்குத் சென்றுவந்த ஒரு உணர்வினை ஏற்படுத்துகிறார்.

ஆண்யானை தன் மனைவியான பெண்யானைக்கு தாகம் தீரும்படி இளமூங்கில் கணுக்களை ஒடித்து தேன்கூட்டிலுள்ள தேனில் நனைத்துத்தன் மனைவிக்கு ஊட்டும் காட்சி,

"வரைசெய் மாக்களிறு இளவெதிர் வளர்முளை
அலைமிகு தேன் தோய்த்துப்
பிரசவாரிதன் இளம்பிடிக் கருள் செய்யும்

பிரிதிசென் றடை நெஞ்சே"[86]

என்ற பாசுர வரிகளில் காட்டப்படுகிறது. இப்பாசுரங்களில் மலைப்பகுதியின் செழுமையும், விலங்குகளின் அன்பும் பாசுரங்களைப் படிப்பவர் உள்ளத்தில் பசுமையான காட்சியாய் விரியும் படி அமைந்துள்ளது.

வேங்கடமலையிலவாழும் விலங்குகள் ஆணும் பெண்ணும் அன்புகொண்டு களித்து வாழ்கின்றன என்பதை ஒரு களிற்றையும் பிடியையும் கொண்டு காட்சிப்படுத்துகிறார். மன உணர்வுகளை மனதால் மட்டுமே உணரமுடியும். ஆயினும் ஒருவரின் மனஉணர்வை அவர்களது செயல்மூலமும் அறியமுடியும் என்பதை இக்காட்சி உணர்த்துகிறது. மதநீர் பெருகுகின்ற ஒருயானை தன் பெண்யானை தாகத்தால் வருந்துவதைப் பார்க்கிறது. உடனே ஒரு இள மூங்கிலை ஒடித்து அருகில் தேன் கூட்டில் உள்ள தேனில் நனைத்து உண்ணச் சொல்லி நீட்டுகிறது. இக்காட்சியை,

"பெருகுமதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருக ணிள மூங்கில் வாங்கி, அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்
வான் கலந்த வண்ணன் வரை"[87]

என்ற பாசுர வரிகளில் அமைத்துக் காட்டுகிறார். இப்பாசுரத்தில் யானையின் மனவுணர்வு உருக்காட்சியும் காட்சிப்புல உருக்காட்சியும் இணைந்து ஓவியம் படைக்கிறது.

சந்திர சயிலமலைக் காட்சியை கம்பன் விவரிக்கும் போது நெருங்கியிருக்கின்ற தேனடைகளில் தேனிக்கள் இசைபாடி, ஆடவும் ஆகாயத்தைக் தொடுமளவுக்கு அவற்றின் தளிர்களோடு சேர்த்துத் தனது தும்பிக்கையால் ஒடித்து யானைகள் தன் உயிரனைய பெண்யானைக்குக் கொடுக்கும் என்று,

"பம்பு தேன் மிநிறு தும்பி பரந்து அசை பாடி ஆட,
உம்பர் வானகத்து நின்ற ஒளி வளர் தருவின ஓங்கும்
கொம்புகள், பணைக் கைநீட்டி, குழையொடும் ஒடித்து, கோட்டுத்
தும்பிகள், உயிரை அன்ன துணை மடப் படிக்கும் நல்கும்"[88]

என்று அழகிய காட்சிப்புல உருக்காட்சியாகப் படைத்துள்ளார். மற்றொரு காட்சி ஒரு குரங்குத் தம்பதிகளைப் பற்றியது. கடுவனும் மந்தியும் ஊடல் கொண்டு கோபத்தோடு முகம் திருப்பிக் கொண்டு அமர்ந்துள்ளன. கடுவனுக்குத் தன் மனைவி தன்னோடு பேசமாட்டாளா என்ற தவிப்பு. வானத்தில் முழுமதி தண்ணொளியை வீசிக்கொண்டிருக்கிறது. மலையில் உள்ள பளபளத்த பாறையின்மீது அந்தநிலவின் பிம்பம் தெரிவதைப் பார்த்த மந்தி அந்த வெண்மதியைப் பிடித்துத்தா என்று கடுவனைப் பார்த்துக் கேட்கிறது. இக்காட்சியைக் கண்ட ஆழ்வாருக்கு மகாபலியிடம் வாமனனாக வந்து மூவடிமண் இரந்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்துவிட்டது. இதனை,

"தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி விளங்கிய
வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே மேலொருநாள்
மண் மதியில் கொண்டுகந்தான் வாழ்வு" [95]

என்று விளக்குகிறார். இப்பாசுரங்கள் நிகழ்ச்சிகளை நேரிற்கண்ட உணர்வினைக் கொடுக்கின்றன.

வேங்கடமலைக் காடுகளில் வசிக்கும் குறவர்கள் காட்டிற்குள் சென்று கொண்டிருக்கின்றனர். அப்போது திடீரெனயானை வருவதைப் பார்க்கின்றனர். யானையை விரட்டுவதற்கு அங்கு கிடந்த மாணிக்கக் கல்லை எடுத்து எறிகின்றனர். அம்மாணிக்கக்கல் இருண்ட கானகத்தில் சிவந்த ஒளியுடன் வேகமாக யானையை நோக்கி வருவதைக் கண்ட உடலில் வரிகளையுடைய பாம்பு, கார்மேகத்திடையே தோன்றும் மின்னல் என்று நினைத்து பயந்து புற்றில் சென்று அடைந்தது. இக்காட்சியை,

"ஊரும் வரியரவம் ஒண்குரவர் மால்யானை
பேர எறிந்த பெருமணியை காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்
எம்மென்னு மாலதிடம்" [96]

என்று படம் பிடித்துக் காட்டுகிறார். இது அழகிய காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது.

கை நீட்டுகின்றது. மழை மேகத்தின் முழக்கினைக் களிறு தன் பிடியின் பிளிறல் எனக் கொள்ளுவதால் இக்காட்சியில் காட்சிப்புல உருக்காட்சியும் கேள்விப்புல உருக்காட்சியும் இணைந்து,

> "குளிறும் வான் மதிக் குழவிதன் சூல்வயிற்று ஒளிப்ப பின்று மேகத்தைப் பிடி என பெரும் பனைத் தடக்கை களிறு நீட்டும் அச்சித்திர கூடத்தைக் கண்டார்" [91]

என்று தனித்த சுவையைக் கம்பர் படைத்துள்ளார்.

செய்து முடிக்க அரிதான செயல் என்று கருதப்படும் செயல்கள் இரண்டு வகை. ஒன்று உடல்வலிமை கொண்டு முடிப்பது. மற்றொன்று மனவலிமை கொண்டு முடிப்பது. இவை இரண்டுமே ஒருவரிடம் இருப்பினும் முயற்சி என்ற ஒன்று இருந்தால்தான் ஒரு காரியத்தில் ஈடுபட்டு அதில் வெற்றியும் பெறமுடியும். ஆகவே முயற்சியில்லாத வலிமை பயனற்றது. இக்கருத்தை கஜேந்திரன் என்னும் யானையின் மூலம் காட்சிப்படுத்தப்படுகிறது. கஜேந்திரன் என்னும் யானை தினமும் பொய்கையில் மலர்ந்துள்ள தாமரை மலர்பறித்து வந்து வேங்கடவன் திருவடிகளில் சமர்ப்பித்து வந்தது. ஒரு நாள் மலர்பறிக்க பொய்கையில் இறங்கிய போது, முதலை ஒன்று அதன் காலைப் பற்றிக் கொண்டது. முதலையின் வாயிலிருந்து மீள முடியாத யானை கோவிந்தனின் பெயர் சொல்லிக் கூவியழைத்தது. இறைவன் தன் மீது பக்தி கொண்ட யானையின் வேதனையைத்தீர்க்க, சக்ராயுதத்தை அனுப்பி முதலையை அழித்தான். ஆனால் யானையின் குறிக்கோள் இறைவனின் திருவடிகளில் மலரைச் சமர்ப்பிப்பது. முதலைவாயில் அகப்பட்டதால் ஏற்பட்ட துன்பத்தால் உடல் வருந்தியது. தனது குறிக்கோளை அடையும் உறுதியில் தளராத யானை இறைவனை மனத்தில் தியானித்து வருந்தியழைத்தது. உண்மையான பக்தனுக்கு எளியவனாகும் இறைவன் கஜேந்திரன் என்னும் யானைக்குக் காட்சியளித்தனன். தான் பறித்த தாமரை மலரை இறைவனின் திருவடிகளில் சமர்ப்பித்து மகிழ்ந்ததுயானை இது மிக்க முயற்சியை உடையவர்க்கு அரிதான செயலும் எளிதாகும் என்பதைக் குறிக்கிறது.

"முயற்சித் திருவினையாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்" [92]

என்ற குறளுக் கிணங்க கஜேந்திரனின் வெற்றி முயற்சியினாலும் மன வலிமையாலும் பெறப்பட்டது. இக்கருத்து,

"அரிய தெளிதாகும் ஆற்றலால் மாற்றி
பெருக முயல்வாரைப் பெற்றால் - கரியதோர்
வெண்கோட்டு மால்யானை வென்றி முடித்தன்றே
தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து" [93]

என்ற பாசுர வரிகளில் உணர்த்தப்படுகிறது. கரியதோர் வெண்கேபாட்டு மால்யானை என்ற வரியினால் யானையின் பெரிய கரிய உருவம் வெண்ணிற தந்தம் ஆகியவை காட்சிப்படமாய் மனத்தில் விரியுமாறு அமைந்துள்ளது.

வேங்கட மலை திருமாலுக்குரியது. அவன் வீற்றிருக்கும் அந்த மலை அவனைப் போலவே அழகு வாய்ந்தது என்பது ஆழ்வார்களது எண்ணம் எங்கும் எதிலும் இறைவனையே கண்டு இன்புறும் ஆழ்வார்கள், வேங்கட மலையில் மந்திகளின் விளையாட்டைக்கண்டு இன்புறுகின்றனர். அந்த இன்பக் காட்சி இறைவனின் புராண நிகழ்ச்சிகளை நினைவுபடுத்துகிறது.

வேங்கடமலைமீது தெளிவான கனைநீர் அதனருகில்ஒரு கடுவன்க் களாக்கனிகளைக் கையில் வைத்துக்கொண்டு தின்று கொண்டிருக்கிறது. சுனை நீரைத் திரும்பிப் பார்க்கிறது. அங்கு ஓர் கடுவன் கைகளில்க்களாக கனிகளை வைத்துக் கொண்டிருக்கிறது. தனது நிழல்தான் நீரில் தெரிகிறது என்பதை உணராத கடுவன் அந்தக் கனிகளைத்தா என்று கை நீட்டுகிறது. இந்தக் காட்சியைக் கண்ட ஆழ்வாருக்குக் கண்ணன் விளங்கனியை வீழ்த்தக் கன்றெறிந்த புராணக் கதை நினைவுக்கு வருகிறது. அதனை,

"பார்த்த கடுவன் சுனைநீர் நிழற்கண்டு
பேர்த்தோர் கடுவனெனப் பேர்ந்து, கார்த்த
களங்களிக்கு கைநீட்டும் வேங்கடமே, மேலொருநாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு" [94]

மலையின் செழிப்பை யானையின் அன்பைக் கொண்டு காட்சிப்புல உருக்காட்சியாகப் படைத்துக் காட்டுவது ஒப்பு நோக்கத்தக்கது.

கஜேந்திரன் என்னும் யானை வேங்கடவனை நினைந்து பக்திசெய்து தினமும் புதிதாய் மலர்ந்த தேன்மிகுந்த தாமரைமலர் கொண்டு திருவடிகளில் வைத்து வணங்கியும் வந்தது. அவ்வாறு இறைவனை வணங்குவதற்கு முன் உடல்தூய்மை செய்து வந்ததை,

"புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து, அருவி
 உகுமதத்தால் கால்கழுவிக் கையால், மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்ட விறல் வேங்கட வனையே
 கண்டு வணங்கும் களிறு" [89]

என்று அழகிய முறையில் ஓவியமாகப் படைக்கிறார்.

பெரியவில்லைக் கையில் ஏந்தி வேட்டையாடும் குறவர்கள் தினைப்புனம் காக்கும் போது யானைகளை விரட்ட தீப்பந்தங்களைக் கொளுத்துவர். தீப்பந்தங்களைக் கண்டயானைகள் தினைப்புனம் விட்டு நீங்கி ஓடும். அவ்வாறு ஓடும்போது பெரிய வான்வெளியில் தீப்பிழம்பாக விண்மின் எரிந்து விழும் காட்சியைக்கண்டு அஞ்சி எங்கு செல்வது என்று தெரியாமல் திகைக்கும் காட்சியைக் கண்ட ஆழ்வாருக்கு அசுரர் தலைவனை வீழச்செய்து மகிழ்ந்த இறைவனின் அற்புதச் செயல் நினைவில் வந்து,

"பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
 வெருவிப் புனம்துறந்த வேழம் - இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும் வேங்கடமே மேலசுரர்
 கோன் வீழக் கண்டுகந்தான் குன்று" [90]

என்று வேங்கடமலைக் காட்சியைக் காட்டி மலைச் சிறப்பைக் காட்சிப்படுத்துகிறார். கம்பன் சித்திரகூடக் காட்சியை வருணிக்கும் போது யானையைக் கொண்டு காட்சிப்புல உருக்காட்சியைப் படைத்தளிப்பது இங்கு ஒப்பிடற்குரியது.

சத்திரக்கூட மலையில் பிடியைத்தேடிப் பிளிறி வரும் யானை திடீரென மேல் நோக்க, மழை மேகத்தையும் அதில் புகும் மதிக் குழவியையும் தன் இணையெனக் கருதித் தழுவக்

அச்சத்தை விளைவிக்கும் கானகத்தில் யானை, குதிரை, சிங்கம், புலி கரடி போன்ற கொடிய விலங்குகள் இங்குமங்கும் ஓடியலைந்து ஓய்ந்து நிற்கின்றன. காட்டிலுள்ள மூங்கில் மரங்கள் காற்றில் ஒன்றோடொன்று உராய்ந்து நெருப்புப்பற்றி எரிந்து கருகி நிற்கின்றன. இந்த காட்சியை,

"ஓய்ந்த மாவும் உடைந்த குன்றும்
அன்றியும் நின்றழலால்
தேய்ந்த வேயும் அல்லது இல்லாச்
சிங்கவேழ் குன்றமே" [97]

என்று ஓவியமாக்கிறார்.

அழகர்மலை என வழங்கப்பெறும் திருமாலிருஞ்சோலை மலையில் இரத்தினக் கற்களையும் சந்தனக் கட்டைகளையும் உருட்டிக்கொண்டு வந்து அருவிகள் நீரைப் பொழிகின்றன. இவ்வழகிய காட்சியை,

"சந்தொடு மணியுமணிமயிலதழையும் தழுவிவந்தருவிகள் நிரந்து
வந்திழிசாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வாமடநெஞ்சே" [98]

என்ற பாசுர வரிகள் காட்டுகின்றன.

சோலைமலைச் சாரலில் மூங்கில் மரங்கள் நிரைந்து வளர்ந்துள்ளன. அம்மூங்கில்கள் வளைந்து பிரிந்து காணப்படுகின்றன, அம்மூங்கில்களுக்கிடையில் நறுமணமிக்க குறிஞ்சி மலர்களிலுள்ள தேனில் படிந்தவண்டுகள் வந்துதங்குகின்றன. இவ்வழகிய மலைவளக் காட்சியை,

"விண்டலர் தூளி வேய்வளர்புறவில்
விரைமலர்க்குறிஞ்சியின நறுந்தேன்
வண்டமர்சாரல் மாலிருஞ்சோலை
வணங்குதும் வா மடநெஞ்சே" [99]

என்ற பாசுரத்தின் மூலம் ஓவியமாக்குகிறார்.

திருமாலிருஞ்சோலையில், மேகங்கள் ஆழ்கடலில் நீரை முகந்து கொண்டு வானில் சென்று இடிமுழக்கம் செய்கின்றன. அவ்வொலியைக் கேட்கும் சிங்கங்கள் அது யானையின் பிளிறல் என்று கருதி எதிர முழக்கம் செய்கின்றன.

கானகத்தைப் பிண்ணணியாகக் கொண்ட அழகிய காட்சிப்புல உருக்காட்சிக்கு கேள்விப்புலத்துக் குரிய ஒலிக்கூறுகள் துணைசெய்கின்றன.

"தடங் கடல் முகந்து விசும்பிடைப் பிளிறத்
தடவரைக்களிறென்று முனிந்து
மடங்கல் நின்ற திருமாலிஞ்சோலை" [100]

என்று இப்பாசுரத்தைக் கேட்பவர்கள் ஒரு நாடகக் காட்சி போல் உணரும்படி அமைந்துள்ளது.

### 1.22 திருக்கோவலூர்வளம்

முதலாழ்வார் மூவருக்கும் இறைவன் காட்சிதந்த புகழ்மிக்க திருக்கோவலூரின் வளத்தை, கோங்கு அரும்புகளும், சுரபுன்னைகளும், குரவமலர்களும் செறிந்து திகழும் சோலைகளில் வண்டுகள் கூட்டம் கூட்டமாக மது உண்டகளிப்பாலே இசைபாடுகின்றன. இத்தகைய சோலைகள் கண்கண்ணாகச் செழித்து வளரும் கரும்புகளையும் கொண்ட வயல்களினால் சூழப்பட்டது என்று,

"கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாம் வரிவண் டிசைபாடும் பாடல் கேட்டுத்
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழந்த
திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே" [101]

என்ற பாசுரத்தில் அமைத்து அழகிய மலர்க்காட்சியினையும் திருக்கோவலூர் வளத்தையும் ஒருங்கே உணர்த்துகிறார். மேலும் கருமை நிறத்தில் கமுகுக்காய்கள் பசுமைநிறம் கொண்ட பாலை வெடித்து வெண்முத்துக்கள் போல் பூக்களைக் காட்டுகின்றன. மரகதப்பச்சையில் காய்களும் அதன் மீது பவளநிறமும், செருந்திப்பூக்கள் மொட்டவிழ்ந்து தேன்பிலிற்றும் சோலைகள் உள்ள திருக்கோவலூர் என்று,

"கருங்கமுகு பசும்பாலை வெண்முத்து, ஈன்று
காய்எல்லாம் மரகதமாய் பவளம் காட்ட
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்
திருக்கோவ லூர் அதனுள் கண்டேன்" [102]

என்ற பாசுரத்தில் பலவகை நிறங்களைக் காட்டும் காட்சியும்,

தேன்கொண்ட மலரின் காட்சியும் ஒருங்கே வண்ண ஓவியமாய்க்காட்டப்படுகிறது.

### 1.23 நாங்கூர் வளம்

வயல்களில் இளம் எருமைகள் சுரும்புச் சோகைகளை அளவுக்கு மீறி மேய்ந்து விட்டதால், நகர்ந்து செல்ல முடியாமல் இருந்த இடத்திலேயே இருந்து அசை போடுகின்றன பிறகு மெதுவாகச் சென்று செங்கழு நீர்ப்பூக்கள் நிரம்பியுள்ள நீர் நிரம்பிய குளத்தில் மூழ்குகின்றன. குளத்தின் சேற்றில் கொம்புகளைக் குத்தி மண்ணுருண்டையைப் பெயர்த்தெடுத்துத் தாங்கிக் கொண்டு கிளம்பி, பின்னர்க் கரையேரவும் முடியாதபடி அங்கேயே கிடக்கின்றன. இக்காட்சியை,

"...... .... ...... ஒருங்குபைந்தாள்
  கண்ணார் கரும்பின் கழைதின்று வெகி
கழுநீரில் மூழ்கி செழுநீர்த் தடத்து
  மண்ஏந்து இளமேதிகள் வைகும் நாங்கூர்" [103]

### 1.24 திருப்புல்லாணி வளம்

ஒளிமிகுந்த முத்துக்களையும், அழகிய பவளத்துளிர்களையும் மலர்ந்த தாமரைப் பொய்கைகளையும் உடைய சோலைகளால் சூழப்பட்டது திருப்புல்லாணி என்பதை,

"இலங்கு முத்தும் பவளக்
  கொழுந்தும் எழில் தாமரை
புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்து
  அழகாய புல்லாணி" [104]

என்ற கடற்கரைச் சோலைகள் இருந்த விதத்தைக் குறிப்பிடும் ஆழ்வார். மதுவிரியும் காவி மலர்களும் வெளுத்த நிறம் கொண்ட தாழைப்புதர்களும் சேறுநிறைந்த வயல்களும் சூழ்ந்து விளங்குவதாக.

"கள்ளவிழும்மலர்க் காவியும்
தூமடற் கைதையும்

புள்ளும் அள்ளற் பழனங்களும்
சூழ்ந்த புல்லாணி" [105]

என்று நெய்தல் நிலத்தின் காட்சியை அந்நிலக் கருப்பொருள் கொண்டே நிழற்படமாய்க் கண்முன் காட்டுகிறார்.

### கேள்விப்புல உருக்காட்சி

மனிதவாழ்வில் காட்சிப்புலத்தைப் போலவே கேள்விப்புலமும் முக்கியம் வாய்ந்தது. கண் பார்வையற்றவர்கள் ஒலியைக் கொண்டே அனைத்தையும் உணர்கின்றனர். காட்சிகளுக்கு ஒலி பக்கதுணையாக இருந்து அக்காட்சியின் சிறப்பை மிகுவிப்பதை நாடகங்களிலும் திரைப்படங்களிலும் காண்கிறோம். அன்றாட வாழ்க்கையில் ஒலி எத்தகைய இடத்தைப் பெற்றுள்ளது என்பதை ஆழ்வார் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது. கேள்விப்புல உருக்காட்சிகளை ஆழ்வார்கள் கையாள்வதைக் கொண்டு அவர்களது அன்றாட வாழ்க்கையனுபவமும், இயற்கையில் தோய்ந்த மனமும் வெளிப்படக் காண்கிறோம்.

### 2.1 காலைப்பொழுது

உருக்காட்சிகளைத் தோற்றுவிப்பதில் ஒலிகளுக்கு முக்கிய பங்கு உண்டு. உலகத்து உயிர்களுக்கெல்லாம் இனிமையானதும், மனதுக்கு இதம் தருவதும், அழகியதும் , விருமபி மகிழ்வதுமான ஒரு பொழுதுகாலைப்பொழுது. அந்தக் காலை நேரத்து உணர்வினைப் பாசுரங்கள் நமக்கு ஊட்டுகின்றன. புள்ளினங்கள் சிலம்புகின்றன. ஆனைச்சாத்தன் என்னும் பறவைகள் தங்களுக்குள் கலந்து இன்பமாகப் பேசிக் கொள்ளும் இனிய ஒலி விடிந்து விட்டதை உணர்த்துகிறது. ஆய்ச்சியர்கள் நிலை மத்தினால் தயிர்கடையும் ஒலியும் கேட்கிறது. அவர்கள் கழுத்தில் அணிந்துள்ள காசு என்கின்ற அச்சுத்தாலியும், பிறப்பு என்கின்ற ஆமைத்தாலியும் கலகல வென்று ஓசையெழுப்புகின்றன. கருடனை வாகனமாக உடையவனின் கோவிலில் வெண்ணிற சங்கின் ஒலி பேரரவமாகக் கேட்கிறது. அதுமட்டுமல்ல யோகியர் கூறும் அரியென்னும் ஒலி எல்லாஒலிகளையும் அடக்கி உள்ளத்தில் புகுவதாய் அமைந்துள்ளது.

"கீசுகீசென்றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப் பெண்ணே
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங் குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைப்படுத்தத் தயிரரவம் கேட்டிலையோ" [106]

என்ற பாசுர வரிகள் காலை நேரத்து ஓசையைக் குறிக்கின்றன.

ஆயர்கள் இவ்வாறு தயிர்கடையும் செயலைக் கம்பன்,

"தோயும் வெண்தயிர் மத்தோலி துள்ளல் போய்
மாய, வெள்வளை வாய்விட்டு ஆற்றவும்
தேயும் நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார்" [107]

என்று காட்சிப் படுத்துகின்றான்.

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிச்சங்கின் பேரரவம் கேட்டிலையோ
"........... ......... ....

....... ..... ....

............. முனிவர்களும் யோகிகளும்.
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்" [108]

என்ற பாசுர வரிகளிலும் அமைந்துள்ளன. மேலும் கோழி கூவுதல் குயிலினங்கள் கூவுதல் ஆகியனவும் கரிய குருவிக் கணங்கள் பாடுவதும் காலை நேரத்தை மக்களுக்கு உணர்த்துகின்றது.

"உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
......... ............. .........
வந்தெங்கும் கோழியழைத்தன காண் மாதவிப்
பந்தர் மேல் கல்கால் குயிலினங்கள் கூவினகாண்" [109]

என்ற பாசுரவரிகளும்,

"காலை யெழுந்திருந்து கரியகுருவிக் கணங்கள்
மாலின் வரவுசொல்லி மருள்பாடுதல் மெய்ம்மை கொலோ" [110]

என்றும் காலை நேரத்துப் புள்ளினங்கள் ஓசையும்,

தயிர்கடையும் ஓசையும், பெண்களின் அணிகலன்கள் அசையும் ஓசையும் ஆயர்பாடியில் காலைப் பொழுது எவ்வாறு இருந்தது என்பதை அறிவிக்கிறது. ஆண்டாள், தன்னை கோபிகையாகக் கற்பனை செய்துகொண்டு கண்ணனை அனுபவித்தவள் ஆனால் இப்பாசுரங்களைக் கேட்கும்போதும் படிக்கும்போதும் நாம் அவ்வாறெல்லாம் கற்பனை செய்து கொள்ள வேண்டாமல் ஆயர் பாடியின் காலைப் பொழுதினை அனுபவித்தாற்போன்ற உணர்வை இந்த ஒலிக்குறிப்புக்கள் நமக்கு அளிக்கின்றன. பிண்னணி இசையோடு கூடிய நாடகக் காட்சிபோல இருந்து இக்கேள்விப்புல உருக்காட்சி செயல்படுகிறது.

## 2.2 சதங்கை ஒலி

காண்போர் கண்ணுக்கு அழகியதும் பசும் பொன்னால் செய்யப்பட்டதுமான மாடு மேய்க்கும் கோலை அழகிய கையிலே பிடித்துக் கொண்டு, காட்டில் கன்றுகளை மேய்த்துத் திரிகிறான் கண்ணன் கண்ணனின் கால்களிலுள்ள வீரக் கழல்களும் சதங்கைகளும் ஒன்றோடொன்று கலந்து அவன் போகும் இடம் எல்லாம் ஒலிக்கின்றது. அப்போது அவன் தலையில் உள்ள திருக்குழல்கள் அசைந்துகொண்டிருக்கும்.

> "அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு
> கழல்கள் சதங்கை கலந்தெங்கும் ஆர்ப்ப
> மழகன்று இனங்கள் மறித்துத் திரிவான்
> குழல்கள் இருந்தவா காணிரே குவிமுரையீர் வந்து காணிரே"[111]

என்று பாசுர வரிகளில் கழல்கள் சதங்கைகள் கல்ந்தெங்கும் ஆர்ப்ப என்ற ஒலிக்குறிப்பை அமைத்துச் சதங்கை ஒலியை நாம் கேட்பது போன்ற உணர்வையும் அந்தச் சூழலில் இருந்தது போன்ற உணர்வையும் ஏற்படுத்தி விடுகின்றார். இந்த உணர்வை,

> "ஓட ஓடக்கிண்கிணிகள் ஒலிக்குமோசைப் பாணியாலே
> பாடிப்பாடி வருகின்றாயைப் பற்பநாப னென்றிருந்தேன்" [112]

என்ற பாடல் வரிகளும் ஏற்படுத்துகின்ற.

## 2.3 கிண்கிணி ஒலி

கண்ணனின் கால்களில் அணிவித்திருந்த தண்டைக்குள் மாணிக்கக் கற்கள் ஒலி செய்கின்றன. இடுப்பில் பத்தரை மாற்றுத் தங்கத்தினால் செய்த உடைமணித்தொடர் இலங்குகிறது. தங்கத்தின் ஒளியை மிஞ்சுவதாக அவனது பவளவாய்ச்சிவப்பும், வாய்திறக்கும் போதெல்லாம் தெரிந்து மறையும் முத்துக்களை நாணச் செய்யும் பற்களும் விளங்குகின்றன. இவற்றைப் பார்க்கும் போதும், கிண்கிணி ஒலியைக் கேட்கும் போதும் பெரியாழ்வாருக்கு, முன்புவாமனனாய் வந்து மூன்றடி மண்ணிரந்த காட்சி நினைவுக்கு வருகிறது. அதுவே,

> "மாணிக்கக் கிண்கிணியார்ப்ப மருங்கின்மேன்
> ஆணிப் பொன்னாற் செய்த ஆய்பொன்னுடைமணி
> பேணிப் பவளமாய் முத்திலங்க பண்டு.
> காணி கொண்ட கைகளாற் சப்பாணி
> கருங்குழற் குட்டனே சப்பாணி"[113]

என்று பாசுரவரிகளில் அமைந்துள்ளது. இப்பாடல்வரிகளைக் கேட்பவருக்கு ஒரு அழகிய குழந்தையின் கொழுவிய கால்களில் தண்டையும், இடுப்பில் கட்டிய தொடரும், அக்குழந்தையின் பவள வாயும் முத்துப்பற்களும், காட்சியாய் விரிய இடமேற்படுகிறது. இது காட்சிப்புல உருக்காட்சியும் கேள்விப்புல உருக்காட்சியும் இணைந்த உருக்காட்சியுமாக உள்ளது.

### 2.4 சங்கிலி ஒலி

யானையைக் கட்டியிருக்கும் இரும்புச் சங்கிலியானது யானை அசையும் போதெல்லாம் சலார் பிலார் என்று ஒலி செய்யும் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணி அது நடக்கும்போது ஒலித்து யானையின் வரவை அறிவிக்கும். இதனை யானை வரும்பின்னே மணியோசை வரும் முன்னே என்று கூறுவர். மதநீர் சோர அது அசைந்து நடக்கும் அழகு பார்த்து மகிழத்தக்கது. கண்ணனின் கால்களில் உள்ள கிண்கிணிகள் ஒன்றோடொன்று கூடி ஆரவாரிக்கின்றன. இவ்வாறு சலங்கைகள் ஒலிக்கத் தனது அகன்ற பாதங்களை எடுத்து வைத்து கண்ணன் தளர் நடை நடக்கிறான். கண்ணனின் நடையழகுக்கு யானையின் நடையழகு ஒப்பிட்டுக் காட்டப்படுகிறது. இதனை,

"தொடர் சங்கிலிகை சலார் பிலாரென்னத்
தூங்கு பொன்மணி யொலிப்ப
படுமும் மதப்புனல் சோர வாரணம் பையநின்றூர்வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணியாரவாரிப்ப உடைமணி பறைகரங்க
தடந்தாளினை கொண்டு சார்ங்கபாணி தளர் நடை நடவானோ" [114]

என்ற பாசுர வரிகள் காட்டுகின்றன. இதிலுள்ள சலார் பிலர் என்ற ஒலிக்குறிப்பு யானை அசையும் போது இங்கும் அங்கும் சங்கிலி அசைந்து அதனால் ஏற்படுகின்ற ஒலியைக்குறிக்கிறது. குழந்தை கால் பெயர்த்து நடக்கும்போது கால்களில் அணிந்துள்ள சலங்கைகள் ஒருவித சந்தத்தோடு ஒலிக்கும். முதலில் மெதுவாக நடந்து பின்பு வேகமாக வந்து தாயின் மடியில் விழும் குழந்தையின் இடையில் கட்டியுள்ள மணிகளின் ஓசை வேகமாக ஒலிக்கும். குழந்தை நடை பழகும் அழகிய காட்சியை இந்த ஒலிக்குறிப்புக்கள் அமைத்துக் காட்ட உதவுவதுடன் அந்தக் கிண்கிணி ஒலியை நாம் அனுபவித்தாற் போன்ற உணர்வை ஏற்படுத்தி விடுகிறது.

கண்ணன் கால்களில் கட்டியுள்ள கிண்கிணிகள் சலன்சலன் என்று ஒலி செய்கிறது. மின்னலையுடைய கருநிற மேகம் எதிர்வந்தது போல கண்ணன் வரவு தோன்றுகிறது என்பதை,

"பொன்னியற் கிண்கிணி கட்டிப் புறங்காட்டி
தன்னிய லோசை சலன் சலனென்றிட
மின்னியல் மேகம் விரைந்தெதிர் வந்தாற்போல்" [115]

கண்ணனின் கருநிறமும் மேனி ஒளியும் காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்தும், கிண்கிணி ஒலிகள் கேள்விப்புல உருக்காட்சியாய் அமைந்தும் கண்ணால் கண்டது போன்றும் காதால் கேட்டது போன்றும் ஒரு உணர்வை உண்டாக்குகின்றன.

குறிஞ்சி நிலமான சிங்கவேழ்குன்றத்தில் அடர்ந்த காடுகள் நெருங்கி வளர்ந்துள்ளன. அந்தக் காட்டு வழியில் திருத்தலப் பயணமாகப் பலர் செல்லுகின்றனர். அங்குள்ள வேடர்கள் அவ்வழிப் போகும் பயணிகளைத் தடுத்துப் போரிடுவர். அப்போரில் வேடர்களின் வில்லோசையும், பறையோசையும்

இடைவிடாது இருந்து கொண்டே இருக்கும் நிலையை,

"மலைத்தசெல் சாத்தெறிந்த பூசல்
வன்துடி வாய்கடுப்ப
சிலைக்கை வேடர் தெழிப்பறாத
சிங்கவேழ் குன்றமே" [116]

என்று ஒலியோடு காட்சிப் படுத்தும் பாங்கு கேட்போர் மனத்தில் அக்காட்சியை எளிதில் உருவாக்கத் துணை செய்கிறது.

வாகைநெற்றுக்கள் காற்றுவீசும் போதெல்லாம் ஒலியெழுப்புகின்றன. மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்ததால் எழுந்த தீயானது சிவந்து விளங்கி வானத்தைச் சிவக்கச் செய்கிறது. மூங்கில்கள் நெருப்புப் பற்றி எரிகின்ற போது படபடவென்று தெறித்து விழும் ஒலி உண்டாகிறது. அந்த நெருப்பில் கற்களும் கனன்று நிற்கின்றன. மலையில் உள்ள நெல்லி மரங்கள் கற்களுக்கிடையே வேர்பரப்பியிருப்பதால் அந்த வேர்கள் பருத்துப் பாறைகளை பிளந்து தள்ளுகின்றன. இப்படிப்பட்ட தன்மை வாய்ந்த சிங்கவேள் குன்றத்தை,

"காய்ந்த வாகை நெற்றொலிக்க
கல்லதர்வேய்ங் கழைபோய்
தேய்த்ததீயால் விண்சிவக்கும்
சிங்கவேள் குன்றமே" [117]

என்றும்

"நெல்லிமல்கிக் கல்லுடைப்ப புல்லியார்ந்து
சில்லிசில்லென்றொல்லறாத சிங்கவேள் குன்றமே" [118]

என்றும் குறிப்பிடும் பாசுரவரிகள் ஒலிக்குறிப்போடு படம் பிடித்துக் காட்டுகின்றன. கேள்விப்புல உருக்காட்சியும் காட்சிப்புல உருக்காட்சியும் இணைந்து நின்று இக்காட்சிகளை உணர்த்துகின்றன.

### 3. முகர்வுப்புல உருக்காட்சி

நறுமணம் என்பது மனத்தை மகிழ்விப்பது மலர்களின்

நறுமணம் மனத்தை சாந்தப்படுத்துவது, இறையுணர்வையும் ஆரோக்கியத்தையும் கொடுப்பது. இதன் காரணமாகத்தான், சந்தனம், பன்னீர், நறுமணமிக்க மலர்கள், துளசி, கற்பூரம், சாம்பிராணி போன்ற நறுமணப் பொருட்களை மக்கள் பயன்படுத்துகின்றனர். இந்த நறுமணப் பொருள்கள் ஒரு தெய்வீக உணர்வை அளித்து மனத்தை அமைதிப் படுத்துகின்றன. அதனால் மக்கள் இப்பொருட்களை தெய்வத்துடன் தொடர்புபடுத்தி வைத்துள்ளனர். மகளிர் தம் கூந்தலில் பலவகை மணம் மிக்க மலர்களைச் சூடிக் கொள்ளுவதும், திரவியப் பொடிகளைப் பயன்படுத்துவதும், மனத்தை அமைதிப்படுத்தவும் ஆரோக்கிய சூழலை உருவாக்கவுமே யாகும்.

உணவின் மணம் முகர்வுப் புலத்தின் மூலம் பசியைத் தூண்டி உணவுண்ண விருப்பத்தை ஏற்படுத்தும் பான்மையுடையது என்பதும் கருதத்தக்கது. எனவே மணப் பொருள்களுக்குத் தூண்டும் சக்தி இருக்கிறது என்பதை உணரலாம்.

### 3.1 மல்லிகை

பகற்காலத்தில் பசுக் கூட்டங்களை மேய்க்கச் சென்ற கண்ணனே தாழ்ந்து நீ சொன்ன சொற்களை நினைக்கும் போதெல்லாம் என் ஆத்மா வேகின்றது. கட்டுத் தளர்ந்த மல்லிகைப்பூவை வாடைக் காற்று எங்கும் தெரிக்க மிக்க மதமுடைய யானை போன்ற மாலைப் பொழுதும் வந்துவிட்டது என்ற கருத்தை,

> "பணிமொழி நினைதொறுமா விவேமால்
> பகல்நிரை மேய்க்கிய போய கண்ணா
> பிணியவிழ் மல்லிகை வாடை தூவப்
> பெருமத மாலையும் வந்தின்றாலோ" [119]

என்ற பாசுர வரிகள் தெரிவிக்கின்றன. இப்பாசுரம் பராங்குச நாயகியாய் நாயகனின் பிரிவாற்றாமை கூறும் அகத்துறை பாசுரம் ஆகும். வாடைக்காற்று வேகமாக வீசும்போது மல்லிகை மணத்தையும் சுமந்துவரும். மல்லிகைப் பூவையும் கொடியிலிருந்து பெயர்த்து வீசும். அந்த மணம் மிக்க மாலை நேரத்தை முகர்வுப்புல உருக்காட்சியாக்குகிறார். மதம்பிடித்த

யானை வேகமாக ஓடுவதுபோல மாலைப்பொழுது வேகமாக இருள்கவிந்து வருமழகை மதயானையைக் கொண்டு காட்சிப்படுத்துவது ஆகிய இரண்டு உருக்காட்சிகளும் சேர்ந்து மாலை நேரத்து மங்கிய ஒளிச்சூழல், வாடைக் காற்றில் கலந்து வரும் மல்லிகை மணம் ஆகியவற்றை அனுபவித்த உணர்வைக் கொடுக்கிறது.

### 3.2 மல்லிகைப்பூ மணம்

பராங்குச நாயகி நாயகனை நினைந்து அவன் நினைவு தரும் துன்பத்தை அன்னையரிடம் புலம்புவதாக அமைந்த இப்பாடலில் அன்னையரே நீங்கள் யாரும் எனக்குத் துணையாக மாட்டீர் நெஞ்சொன்றே எனக்குத் துணை அது உங்களைப் போன்றதன்று, தனிப்பட்டது, என்னுடன் சேர்ந்து உழைப்பது, என் ஆபத்தில் அதுவே என்னைக் காக்கும். அந்தக் கண்ணனும் தன் காரொக்கும் மேனியைக் காண்பித்துக் கர்வத்தினால் அதையும் பிரித்துத் தன்னிடத்தில் சிறைப்படுத்தி விட்டான். இனி அதுவும் நானும் தனி. இந்நிலையில் அபிமன்யுவை அயோக்கியர்களான அரசர்கள் முறையின்றிச் சூழ்ந்து கொண்டு வதைத்தாற்போல் அகிற்புகை முதலானவை என்னை நலிக்கின்றன. தனித்தனியே பிரிந்து போகாதபடி வாடையானது தன்னிடத்தில் எல்லாவற்றையும் அணைத்துக்கொண்டது. புகை கண்ணை மறைகிறது, யாழ் முதலானவை காதைகுடைகின்றன. புகையின் மணம் மூக்கைப் பறிக்கின்றது. குளிர்ந்த மல்லிகைப்பூவின் மணமும் அம்புகள்போலத் தாக்குகின்றன. என்நிலையை என்னவென்று சொல்வது என்று, காதல் மேலிட்டு விரகத்தில் இருக்கும் நாயிகிக்குயாழ் இசை காதைக் குடைவதாகவும், புகையின் மணமும், பூவின் மணமும் இதத்தை தராமல் துன்பத்தை அளிப்பதாக,

"ஆருக்கென் சொல்லுகேனன்னை மீர்காள்
ஆருயிரவனன்றிக்கூர் தண் வாடை
காரொக்குமேனி நங்கண்ணன் கள்வம்
கவர்ந்த அத்தனி நெஞ்சமவன் கணஃதே

சீருற்றவகிற் புகையாழ் நரம்பு பஞ்சமம்
　தண்பசுஞ் சாந்தணைந்து
போருற்ற வாடைத் தண் மல்லிகைப்பூப்
　புதுமண முகந்து கொண்டே றியுமாலோ"[120]

என்று தமது பாசுர வரிகளில் முகர்வுப்பல, கேள்விப்புல உருக்காட்சிகளைப் படைத்துள்ளார்.

**3.3 திருத்துழாய்மணம்**

இறைவனது திருமேனி நறுமணம் உடையது. அத்திருமேனியில் எங்கும் சூடப்பட்டதால், திருத்துழாய் தனக்கேயுள்ள மணத்திலும் மேலான நறுமணத்தைப் பெற்று விளங்குகிறது. இறைவனின் திருமுடியிலும், தோளிணைகளிலும் திருத்தாள்களிலும் சார்த்தப்பட்ட திருத்துழாய் மேலும் மணம் மிகுந்ததாய் தெய்வீக மணம் பெற்று விளங்குவதை,

"மெய்நின்று கமழ் துளவ விரையேறு திருமுடியான்"[121]

என்ற பாசுரவரி முகர்வுப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது.

**3.4 கற்பூரமணமும் கமலப்பூமணமும்**

இறைவனின் கையுடனும் வாயுடனும் அதிகத் தொடர்பு கொண்டது வெண்சங்கு. அந்தச் சங்கு இறைவனின் வாயமுதத்தைப் பருகி மணத்தை அனுபவித்து வாழும் பேறு பெற்றது. காதல் மீதூறப் பெற்ற ஆண்டாள் மாதவன்தன் பவளம் போன்ற செவ்வாய் கருப்பூரமணம் கொண்டதாக இருக்குமா அல்லது தாமரையின் மணம் வீசுமா என்று மணத்தையும், செவ்வாயின் சுவை இனிப்பாக இருக்குமா என்று சுவையையும் வெண்சங்கிடம் வினவுகிறார்.

"கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"[122]

என்ற பாசுரவரிகள் முகர்வுப்புல, நுகர்வுப்புல உருக்காட்சிகளாய் விளங்குகின்றன.

### ஈர்ப்புத் தன்மை

கண்ணனின் கண்கள் மற்றவர் கண்களைக் கவரும் ஈர்ப்பு சக்தி கொண்டவை. அத்தன்மையை,

> "கார்த்தண் கமலக் கண்ணென்றும் நெடுங்கயிறு படுத்து என்னை
> ஈர்த்துக்கொண்டு விளையாடும் ஈசன்" [123]

என்று விளக்கி உணர்த்துகிறார்.

## 4. நுகர்வுப்புல உருக்காட்சி

உயிர்வாழ்வுக்கு உதவும் உணர்வு பொருட்கள் உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன, என நான்கு வகையினவாகவும் இனிப்பு, உறைப்பு, புளிப்பு, கசப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என ஆறு சுவையுடையனவாகவும் உள்ளன. இந்த ஆறு சுவைகளில் இனிப்புச் சுவை அனைவராலும் விரும்பக் கூடியதாக உள்ளது. பால், நெய், தேன், கன்னல் சாறு, அமுது ஆகிய இனிய சுவைகளை, குழந்தைகளையும் அவர்கள் பேசும் மொழியையும், இளம்பெண்களையும், இறைவனையும் சிறப்பிக்க மக்கள் பயன்படுத்துகின்றனர். ஆழ்வார்கள் மருந்து, நஞ்சு ஆகிய நுகர்வுப் பொருட்களையும் எடுத்தாள்கின்றனர்.

### 4.1 கரும்புச்சாறு

எல்லோருக்கும் பயன்பட வேண்டுமென்று நடுவானம் சென்று பெய்யும் மழை போன்றவன் இறைவன். அனைவரிடமும் அன்பு கொண்டவன். அவன் உறையும் மலையில் தேனீக்கள் சேர்த்த தேனையே இடமாகக் கொண்டு வளர்ந்த கரும்பின் சாறென்றால் அதன் சுவை எவ்வாறு இருக்குமோ அவ்வாறு உள்ளவன் என்று ஆழ்வார் காட்டுகிறார் இச்சுவையை,

> "வானிடைப் புயலை மாலை வரையிடைப் பிரசமீன்ற
> தேனிடைக் கரும்பின் சாற்றைத் திருவினை மருவிவாழார் [124]

என்ற பாசுர வரிகளில் அமைத்துக் காட்டுகின்றார். ஒருவரது உருவத்தைக் காட்சிப்படுத்த கண்ணால் காணக்கூடிய பொருட்களைக் கொண்டு உணர்த்த முடியும். குரலைப்பற்றிக் கூறுவதற்கு இசைக் கருவிகள் கொடுக்கும் இசை, இடிமுழக்கம்

போன்ற வற்றால் உணர்த்த முடியும் ஒருவரது குணத்தை மற்றவருக்கு எடுத்துக் கூறுவது என்பது சற்றுக் கடினமான காரியமாகும். ஒப்புமைக்கு அப்பாற்பட்ட இறைவனது குணத்தை உணர்த்துவதற்கும் அவனது கருணையைக்குறிப்பிடுவதற்கும் மழையைப் பயன்படுத்துகின்றனர். மழையானது மக்கள் அனைவரும் உய்யும்படி வேண்டுவார் வேண்டாதார் இல்லாமல் பெய்வது. தேன் இனிமையானது. பலமலர்களில் இருந்து தேனீக்களால் சேகரிக்கப்பட்ட தேன் கூட்டிலிருந்து பெறப்படுவது. உடலை உறுதிப்படுத்தவும், நோய் தீர்க்கவும் பயன்படுவது. கரும்பின்சாறு இனிமை மிக்கது. இத்தகைய பொருட்கள் இறைவனின் குணத்தை அறிவிக்கப் பயன்படுத்தப்படுகின்றன.

**4.2 நஞ்சு**

மனித வாழ்வு அவரவர் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப அமைவது தீவினைகள் களையமுடியாதபடி ஆன்மாவை வலிமையாகப் பற்றியிருக்கக் கூடியது. அப்படிப்பட்ட தீவினையை மீண்டும் தோன்றாதபடி அழிக்கும் நஞ்சாக இறைவன் கருதப்படுகிறான்.

"தீவினைக்கரு நஞ்சை நல்வினைக் கின்னமுதத்தினை" [125]

என்ற பாசுர வரி இதனை உணர்த்துகிறது.

கருநஞ்சு என்னும் சொல்லாட்சி தீயசக்திகளை வேரறுக்கும் இறைவனின் அதிவீரத்தன்மையைக் குறிப்பிட்டு இறைவனின் கரிய திருமேனியழகைக் கண்முன் நிறுத்துகிறது. நஞ்சுக்குக் கண்ணால் காணக்கூடிய கருமை நிறத்தை அடையாகக் கூறுவது, அச்சத்தை உடனடியாக எழுப்பத் துணை செய்கிறது. நல்வினைக் கின்னமுது என்று வாழ்விக்கும் தன்மையுடைய அமுது, மனத்தால் உணரக்கூடிய இனிமை என்கின்ற அடைமொழி தாங்கி விளங்குகிறது. இது மனத்தால் உணரும் இறையனுபவத்தை உணர்த்துகிறது.

**4.5 தேன், பால், நெய், அமுது, கன்னல்**

அமரத்துவத்தை அளிக்கக் கூடிய அமுது என்றும் தேன் என்றும் இறைவனைக் குறிப்பிடுவதை,

"என்சிறுக் குட்டன் எனக்கோர் இன்னமு தெம்பிரான்" [126]

என்ற பாசுர வரி அறிவிக்கிறது.

"தேட்டருந்திறல் தேனினை" [127]

என்று குலசேகராழ்வாரும்,

"மாயனே எங்களமுதே
ஆராவமுதனையான்றன்" [128]

என்று ஆண்டாளும் அனுபவிக்கின்றனர்.

தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே [129]

என்றும்

தேனும் பாலுங் கன்னலும் அமுது மாகித் தித்தித்து என்
ஊனிலுயிரி லுணர்வினில் நின்ற வொன்றை யுணர்ந்தேனே [130]

என்றும் நம்மாழ்வார் அனுபவிக்கின்றார் நாம் விரும்பும் பொருளை, நமக்கு விருப்பமான நிகழ்ச்சியை நம் மணம் திரும்பத் திரும்ப நினைந்து மகிழ்வது என்பது நடைமுறையில் காணக்கூடியது. அவ்வாறு நினைந்து நினைந்து இன்புறுவது மட்டுமின்றி ஊனிலும், உயிரிலும், உணர்விலும் கலந்திருந்த ஒன்றை உணர்ந்ததாகக் கூறுகிறார். அமுதாகிய இறைவன் ஆன்ம வளர்ச்சிக்குத் துணையாவது மட்டுமல்ல வல்வினைக்கு நஞ்சாக விளங்குபவன்,

"ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும்
மாயப்பிரானை என் மாணிக்கச் சோதியை
தூயவமுதைப் பருகிப்பருகி என்மாயப் பிறவி மயர்வறுத்தேனே" 131

என்ற பாசுரவரிகள் இறைநாமம் ஆழ்வாருக்கு நினைக்க நினைக்கத் தெவிட்டாத இனிமையைத் தருவதாக இருப்பது, அமுதாகி ஆன்மாவை வளர்ப்பது, நஞ்சாகி வல்வினையை அழிப்பது தூய அமுதாகிய எம்பெருமான் திருநாமத்தை மனத்தால் பருகியதால் பிறவித்துன்பம் நீக்கியதாகக் கூறுகிறார்.

இறைவனைப் பற்றிய நினைவு எத்தகைய சுவை மிக்கது என்பதை மாணிக்க வாசகர்,

"ஞானக்கரும்பின் தெளிவைப் பாகை
நாடற்கரிய நலத்தை நந்தாக்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
சித்தம் புழுந்து தித்திக்க வல்ல
கோனை"[132]

என்று நுகர்வுப்புல உருக்காட்சியாகப் படைத்தளிப்பது ஒப்பிட்டு நோக்கத் தக்கது.

### 4.4 மருந்து

உடலுக்கு நோய் வந்தால் அந்த நோய்தீர மருந்து உண்ணுவது உலக இயல்பு. ஆன்மாவைப் பற்றும் வினை என்னும் நோய்க்கு மருந்து எம்பெருமானின் திருநாமம் என்று,

"வினையேன் வினைதீர் மருந்தானாய்"[133]

என்றும்

"அறிந்தனவேத அரும்பொருள் நூல்கள்
அறிந்தன கொள்க அரும் பொருளாதல்
அறிந்தன ரெல்லாம் அரியை வணங்கி
அறிந்தனர் நோய்கள றுக்கும் மருந்தே"[134]

என்றும் பிறவிப் பிணியைத் தீர்க்கும் மருந்து என்பதை நம்மாழ்வார் தாம் அனுபவித்தபடி உணர்த்துகிறார்.

### 4.5 குளிர்ச்சி, தன்மை, மென்மை

கண்ணனின் விழிகள் நல்லோர் மாட்டு அருளை வாரி வழங்குவது அந்த அருள் நோக்கு அடியார் மனத்தை அமைதிப்படுத்துகிறது. இந்த உணர்வைக் குளிர்ச்சி என்ற ஊற்றுப்புல உணர்வைக் கொண்டு,

"வண்ணஞ் சிவந்துள வானாட மருங் குளிர் விழிய"[135]

என்ற பாசுர வரியால் விளக்கப்படுகிறது.

இறைவனின் திருப்பாதங்களை உணர்த்துவதற்கு ஆழ்வார்கள் தாமரை மலரையே உவமையாகக் கொண்டனர். தாமரைமலர் என்பதில் மலர்ச்சி, குளிர்ச்சி, மென்மை, நறுமணம் சிவந்த நிறம் ஆகிய அனைத்தையும் உணர்த்தும்

ஆனால் ஆழ்வாரோ அதில் நிறைவடையாமல்,

தண்மென் கமலத் தடம் போற் பொலிந்தன என்று குளிர்ச்சி, மென்மை ஆகிய இரண்டு சொற்களையும் சிறப்பு அடைமொழியாகச் சேர்த்துக்கூறி விளக்குகிறார்.

### 5. ஊற்றுப்புல உருக்காட்சி

ஐம்புல உணர்வுகளில் ஒன்றான ஊற்றுப்புல உணர்விற்குரிய உருக்காட்சிகள் ஆழ்வார் பாசுரங்களில் ஆளப்பட்டுள்ளன. வெம்மை, வாடை, குளிர், மென்மை, வியர்த்தல், வேதனை, நடுக்கம் ஆகிய ஊற்றுப்புல உணர்வுகள் ஆளப்பட்டுள்ளன.

### 5.1 வெப்பம்

நாம் ஒவ்வொரு பிறவியிலும் செய்த நல்வினைகளும் தீவினைகளும் மட்டுமே ஆன்மாவிற்குச் சொந்தமானது. ஒவ்வொரு பிறவிக்கும் தொடர்ந்து வரக்கூடியது. ஒருவன் வாழ்வில் அடையும் துன்பங்களுக்கு அவனது தீவினைப் பயனே காரணம். ஒரு மனிதனின் மனவேதனையை ஒப்பிட்டுக் காட்டக்கூடிய பொருட்கள் உலகில் இல்லை. உடலால் அடையும் வேதனையைக் கொண்டு மனவேதனை உணர்த்தப்படுகிறது. நெருப்பு உடலில் பட்டு விட்டால் உடல் துடிதுடிக்கிறது. எனவே வெம்மை என்பது வேதனைக்கும் துன்பத்திற்கும் குறியீடாக அமைகிறது. இது உடல், மனம் ஆகிய இரண்டுக்கும் பொருந்தும் இங்கு மனத் துன்பத்தைக் குறித்து,

> "வினையார் தரமுயலும் வெம்மையஞ்சி
> என்று ஆழ்வார் உணர்த்துகிறார்.
> இக்கருத்தையே ஆண்டாள்
> செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா" [136]

என்று துன்பத்தைக் குறிப்பிடுகிறார்.

### 5.6 புண்ணில் புளிப்பெய்தல்

கண்ணன் சிறுகுழந்தையாய்க் கோகுலத்தில் வளர்கிறான். ஒவ்வொரு ஆய்ச்சியர் வீட்டிலும் நுழைந்து அவன் செய்யும் குறும்புகள் எண்ணிலங்காதன அவன் செய்த குறும்புகளைப்

பொருக்க மாட்டாத ஆய்ச்சியர்கள் யசோதையிடம் முறையிடுகின்றனர். அவன் செய்த தீமை எவ்வாறு துன்பம் தந்தது என்பதை,

"புண்ணிற் புளிப்பெய்தா லொக்குந் தீமை" [137]

என்ற சொற்களால் விளக்குகிறார்.

அதுபோல ஒருவரைப்பற்றி அவருக்குத் தெரியாமல் மற்றவரிடம் குறை கூறுவது புறங்கூறல் எனப்படும். இவ்வாறு புறங்கூறல் புறங்கூறப்பட்டவருக்கு எவ்வளவு மனத்துன்பத்தையளிக்கும் என்பதை,

"புண்ணிற் புளிப்பெய்தாற்போல புறநின்றழகு பேசாதே" [138]

என்ற பாசுர வரிகள் மனவேதனையையும் துன்பத்தையும் விளக்குவதாக உள்ளது.

### 5.3 நடுக்கம்

அச்சத்தினடியாகப் பிறப்பது நடுக்கம். அச்சம் எண்வகை மெய்ப்பாடுகளில் ஒன்று திருமாலின் அதிவீரத்தன்மையை நினைத்த மாத்திரத்தில் பகைவர்களின் மனத்தில் அச்சத்தை ஏற்படுத்துகிறது. போர்க்களத்தில் போர் தொடங்கு முன்பும் வெற்றியைக் குறிக்கவும் வெண் சங்கு ஊதப்படும். அந்தச் சங்கின் முழக்கத்தைக் கேட்ட மாத்திரத்தில் பகைவர் அச்சத்தால் நடுங்குவர் என்பதை,

"கடலில் பிறந்து கருதாது பஞ்சசான
னுடலில் வளர்ந்து போய் ஊழியான் கைத்தலத்
திடரில் குடியேறித் தீய வசுரர்
நடலைப் பட முழங்கும் தோற்றத்தாய் வெண்சங்கே" [139]

என்றும்

"ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத் துன் பாஞ்ச சன்னியமே" [140]

என்று பகைவரின் நடுக்கத்தைக்குறிப்பிடுகிறார்.

### 6. மனவுணர்வு உருக்காட்சி

ஐம்புலனுக்குரிய உருக்காட்சிகளைப் படைத்தளிக்கும்

ஆழ்வார்கள், புலனுணர்வுக்கு அப்பாற்பட்ட மனவுணர்வை உணர்த்தும் உருக்காட்சிகளையும் படைத்துள்ளனர். பாவம், புண்ணியம், இன்பம், துன்பம், கவலை, ஏக்கம், அச்சம், மகிழ்ச்சி, சொர்க்கம், நரகம், காதல் போன்றவை மனம் சார்ந்த உணர்வுகள், மண்ணில் ஊறிய முற்றிய விதை வளர்ந்து மரமாவதுபோல், ஒருமுகப்படுத்தப்பட்ட மனத்தில் ஊறிய நினைவு ஞானமாக விளங்குகிறது. இது தியானநிலை எனப்படும். மனம் எந்தப் பொருளைப்பற்றி நீங்காமல் நினைக்கிறதோ அந்தப் பொருளை அடைகிறது என்பர் மனத்துக்கு உள்ள சக்தி புலன்களைத் தாண்டியது. இக்கருத்தை

"உய்த்துணர் வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி
வைத்தவனை நாடி வலைப்படுத்தேன் - மெத்தெனவே
நின்றானிருந்தான் கிடந்தானென் னெஞ்சத்து
பொன்றாமை மாயன் புகுந்து" [141]

என்ற பாசுர வரிகளில் உணர்த்துகிறார். இறைவனை உணர்வதற்கு, மனத்தை உயிர்த்துகளில் நிலைநிறுத்தி மெய்ப்பொருளை உணரும் ஞானநிலையை அடையும் போது என் மனம் அறியாமல் அவ்விறைவன் என்னுள்ளத்தில் மெத்தென புகுந்து நின்றகோலம், இருந்தகோலம், கிடந்த கோலம் அனைத்தும் காட்டி நின்றான் என்று தான் உணர்ந்த வாறே எடுத்துரைக்கிறார்.

ஐம்புலன்களால் அறியமுடியாத மனத்தினால் மட்டுமே அறியக் கூடியதாய் விளங்குவது ஞானம். இதனை,

"தளர்வின்றி யேஎன்றும் எங்கும் பரந்த
தனிமுதல் ஞானமொன்றாய்
அளவுடை யைம்புலன் கள் அறியாவனை
யாலரு வாகி நிற்கும்" [142]

என்று ஐம்புலன்களைக் கொண்டு அறியமுடியாதது ஞானம் என்று மனவுணர்வை வெளிப்படுத்துகிறார். இறையனுபவம் பெற்றிருக்கும்போதே அவனை விட்டு மனம் வேறிடம் செல்கிறதே என்று வருந்துகிறார். இவ்வாறு மனமானது வேறிடம் செல்வதால் அதாவது குறிக்கோளிலிருந்து மாறுவதால் அவனது அனுபவத்திற்குக் குறையுண்டாகிறதே என்று வருந்தும் மனவுணர்வு கூறப்படுகிறது. எத்தனை பிறவிகள் பிறப்பித்தாலும் பிறகும் நீதான் துணை. இப்போதே

பிறவிகள் பிறப்பித்தாலும் பிறகும் நீதான் துணை. இப்போதே அவ்வாறு துணையாய் இருந்து இப்பிறவிகளை நீக்கலாமே என்று கருதும் மனவுணர்வை,

"உள்ளமோ ஒன்றினில்லாது ஓசையினெரி நின்றுண்ணும்
கொள்ளிமேலெ றும்புபோலக் குழையுமாலென்ற னுள்ளம்
தெள்ளியீர் தேவர்க்கெல்லாம் தேவராயுலகங் கொண்ட
ஒள்ளியீர் உம்மையல்லால் எழுமையும் துணையிலோமே" [143]

என்று விளக்குகிறார்.

### 6.1 இறைவனுடன் கொண்ட உறவு

இறைவனோடு ஆழ்வார்கள் பலவகைகளில் தொடர்பு கொண்டுள்ளனர். தன்னை அடிமைகொள்ளவேண்டும் என்று கதறுவதும் உனக்குக் குற்றேவல் செய்யும் தகுதி கிட்டுமா என்றெல்லாம் கூறும் ஆழ்வார்கள், தங்களை நாயகியாகவும் எம்பெருமானை நாயகனாகவும் கொண்டு பாடும் நிலையும் காணக் கிடைக்கின்றது. இவைதவிர பல வகைகளில் உறவு கொண்டு தன் மனவுணர்வைக் கூறுவது பாசுரங்களால் அறிய முடிகிறது.

### 6.2 தாய்சேய் உறவு

இறைவன் தன்னிடம் பாராமுகமாக இருப்பதை, சினம் கொண்டு தாயானவள் குழந்தையை அகற்றினாலும் அந்தக் குழந்தை அவள் அருளுக்காக ஏங்கி அழுது காத்திருக்கும் அதுபோன்ற நிலையில் தான் இருப்பதாக,

"அரிசினத்தாலீன்றதாய் அகற்றிடினும்
மற்றவள்தன் அருள் நினைந்தேயழுங்குழவி
அதுவே போன்றிருந்தேனே" [144]

என்று இறைவனைத் தாயாகவும் தான் தாயின் அருள் வேண்டி நிற்கும் குழந்தையாகவும் தன் மனவுணர்வு இருப்பதாகக் கூறுகிறார்.

### 6.3 கணவன் - மனைவி உறவு

ஒரு குலமகள் தன் கணவனால் துன்பத்துக்காளானாலும், கணவன் பார்ப்பவர்கள் இகழும்படியான காரியங்களைச்

இருப்பவள். அதுபோல உன் திருவடிகளைச் சரணடைந்துள்ளேன் என்று,

"கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும்
கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல்
விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக் கோட்டம்மா நீ
கொண்டாளாயாகினும் உன் குறைகழலே கூறுவனே" [145]

என்ற பாசுரவரிகளில் குறிப்பிடுகிறார்.

### 6.4 வேந்தன் - குடிமக்கள் உறவு

தான் இறையருளை நோக்கிக் காத்திருந்ததை, அரசனின் நீதியை நோக்கி வாழும் குடிகள் போல் இருந்ததாக,

"......... ......... தார் வேந்தன்
கோல்நோக்கி வாழும் குழவிபோன்றிருந்தேனே" [146]

என்று குறிப்பிடுகிறார்.

### 6.5 கொடிமரம் - பறவை உறவு

கப்பலின் கொடிமரத்தில் அமர்ந்துள்ள பறவை அதைவிட்டு பறந்து சென்று கரையை அடையவேண்டி வெகுதூரம் பறந்து சென்றது. எங்கே சென்றாலும் கரையைக் காணாத அப்பறவை மீண்டும் கொடிமரத்தின் மீதே வந்து அமர்வது போல் உன்னையன்றி உய்வு நெறியறியாத நான் உன்னையே சரணமாகப் பற்றினேன் என்று அகங்குழைந்து ஆழ்வார்,

"வெங்கண்டின் களிறடர்த்தாய் வித்துவக் கோட்டம்மானே
எங்கு போயுங்கேனுன் இணையடியே அடையலல்லால்
எங்கும் போய் கரைகாணா தெரிகடல்வாய் மிண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே" [147]

என்ற பாசுரத்தில் தனது மனவுணர்வைக் கூறுகிறார்.

### 6.6 கதிரவன் - தாமரை உறவு

கதிரவனின் வெப்பம் தரும் கதிர்கள் துன்பம் தருவதாக இருப்பினும் தாமரைமலர் அந்தக் கதிரவன் வருகையால் தான் மலரும் அதுபோல தன் மனதுக்கினிய இறைவனின்

அருளுக்குக் காத்திருப்பதை,

"செந்தழலே வந்தழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம் சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக் கோட்டம்மாஉன்
அந்தமில் சீர்க்கல்லால் அகங்குழைய மாட்டேனே" [148]

என்ற பாசுரவரிகளால் உணர்த்துகிறார்.

**6.7 மழை - பயிர்கள் உறவு**

வானம் சில சமயங்களில் மழை பெய்ய மறந்து விடுகிறது. நீர் கொண்ட மேகங்கள் வானில் பரவியிருக்கும் மழைபெய்யாமல் இருப்பதால் பயிர்கள் நீரின்றி வாடும் நிலை ஏற்படுகிறது. இருப்பினும் பைங்கூழ்கள் வானருள் நோக்கியே வாடிநிற்கின்றன அதுபோல் தனது மன உணர்வு இருப்பதாகத்தன் மனவுணர்வை அழகிய காட்சிப்புல உருக்காட்சியாக,

"எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூல்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவை போல்
மெய்த்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா உன்
புக்கிலங்கு சீரல்லால் புக்கிலன் காண் புண்ணியனே" [149]

என்ற பாசுரத்தில் காட்டுகிறார்.

இவ்வாறு தாய் - சேய், கணவன், மனைவி, வேந்தன்-குடி, கொடிமரம் - பறவை கதிரவன் தாமரை முகில் - பைங்கூழ்கள் ஆகியவற்றுக்கிடையேயுள்ள உறவுபோல இறைவனுக்கும் தனக்கும் உள்ள உறவு அமைந்துள்ளது என்று இறைவனைச் சரணடைந்த நிலையைத்தனது மனவுணர்வாகக் குறிப்பிடுகிறார்.

**6.8 தாயின் இரக்கவுணர்வு**

கண்ணனின் தாய் அசோதையாகத் தன்னைக் கற்பித்துக்கொண்டு கண்ணனின் குழந்தைப் பருவ விளையாட்டை அனுபவித்த பெரியாழ்வாரின் மனவுணர்வுகள் அவர்தம் பாசுரங்களில் மலர்ந்துள்ளன கண்ணனை வயிற்றில் சுமந்து பெற்றுப் பாலூட்டி வளர்த்த நான், வெம்மையளிப்பதும், கல்லும்முள்ளும் பொன்னடிகளை

நோகச் செய்வதுமான கானகத்திற்குக்கன்றுகளை மேய்க்க இளஞ்சிங்கம் போன்ற குழந்தையை அனுப்பினேனே என்று மனம் வருந்துவதை,

"பன்னிருதிங்கள் வயிற்றிறல் கொண்டவப் பாங்கினால்
என்னிளங் கொங்கை அமுதமூட்டி யெடுத்தியான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின் பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினேன் எல்லே பாவமே"[150]

என்ற இப்பாசுரவரிகள் விளக்குகின்றன.

கன்றுகளை மேய்க்க அனுப்பினாலும் குடையும் செருப்பும் கொடுத்து அனுப்பியிருந்தால், சுட்டெரிக்கும் சூரியனின் வெப்பம் தாக்காமல் குடையும், பரற்கற்களால் நோகாமல் செருப்பும் பாதுகாப்புத் தந்திருக்கும். இப்படிச் செய்யாமல் விட்ட நான் எவ்வாளவு கொடியவள் என்று வருந்தும் அசோதையின் மனவுணர்வை,

"குடையுஞ் செருப்புங் கொடாதே தாமோதரனை நான்
உடையுங்கடியான ஊன்று வெம்பரற்களுடை
கடிய வெங்கானிடைக் காலடிநோவக் கன்றின் பின்
கொடியேனென் பிள்ளையைப் போக்கினேன்ன எல்லேபாவமே"[151]

என்று தன்னைத் தானே நொந்து கொள்ளும் உணர்வைக் காட்சிப்படுத்துகிறார்.

கண்ணனைப் பெற்ற தாயாக இருந்தும் குழந்தையைப் பேணி வளர்க்கும் பேற்றை இழந்த தேவகி, கண்ணனின் குழந்தைப் பருவக் குறும்புகளையும் தொல்லைகளையும் தான் அனுபவிக்க இயலவில்லையே என்ற ஏக்கவுணர்வை,

"தண்ணந்தாமரைக் கண்ணனே கண்ணா
தவழ்ந்தெழுந்து தார்ந்ததோர் நடையால்
மண்ணில் செம்பொடியாடிவந்து என்தன்
மார்வில் மன்றிடப் பெற்றிலே னந்தோ
வண்ணச் செஞ்சிறு கைவிரலனைத்தும்
வாரிவாய்க் கொண்டடிசிலின் மிச்சல்
உண்ணப்பெற்றிலேன் ஓ கொடுவினையேன்"[152]

என்ற பாசுர வரிகளில் உணர்த்துகிறார். அவ்வாறு

நிகழ்ந்ததற்குத் தன் கொடிய வினையே காரணம் என்று வினையை நொந்து கொள்ளும் மனவுணர்வும் வெளிப்பட்டுள்ளமையை உணரமுடிகிறது.

கண்ணனைக் கண்டு காமுறும் கன்னியின் தாயாக நின்று அத்தாயின் மனவுணர்வை வெளியிடுகிறார். என் ஒரே மகளை திருமகள் போல வளர்த்தேன் திருமால் மேல் மனம் வைத்துக் கிடந்த அவளை மணம் முடித்துச் சென்று விட்டான். அங்கே பெருங்குடிப் பெண்ணான அசோதை புகழ்பெற்ற மகனையீன்றவள், மருமகளை உவப்போடு அரவணைத்துக் கொள்வாளா என்ற கவலையுணர்வை,

"ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்தபுகழால்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனான்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளை
பெற்றவசோதை
மருமகளைக் கண்டுகந்து மணாட்டுப்புறஞ் செய்யுங் கொலோ"[153]

என்ற பாசுரவரிகளில் உணர்த்துகிறார். இப்பாசுரத்தின் முதல் இரண்டு வரிகளை வாசிக்கும் போது சுரம் தாழ்ந்து ஒலிக்கும்படியாகத் தாய்மை உணர்வு படிப்பவர்களையும் பற்றிக் கொள்கிறது.

### 6.9 ஏக்கவுணர்வு

முன்செய்த புண்ணியத்தால் பேடையொடு கூடிக் களித்திருக்கும் அன்னங்களே தன் மதியின் நுட்பத்தால் வாமன உருவனாய் வந்து பூமியை இரந்து பெற்ற எம்பெருமானுக்கு குற்றேவல் செய்ய இயலாமல் இருப்பது என் வல்வினையால் தானோ என்று கலங்கும் பராங்குச நாயகியாய்த் தன் மனவுணர்வை,

"விதியினால் பெடை மணக்கும் மென்னடைய வன்னங்காள்
மதியினால் குறள்மாணாய் உலகிரந்த கள்வர்க்கு
மதியிலேன் வல்வினையே மாளாதோ வென்று ஒருத்தி
மதியெல்லா முள்கலங்கி மயங்குமா லென்னீரே"[154]

என்ற பாசுர வரிகளில் அமைத்துக் காட்டுகிறார். அன்னங்கள் தங்கள் பெடையுடன் களித்திருப்பது அவைகள் செய்த புண்ணியம் என்று குறிப்பிடும் ஆழ்வார் மனத்தில்

அன்னங்களைப் பார்த்து ஏற்பட்ட ஏக்க உணர்வு தெள்ளெனப் புலப்படுகிறது.

### 6.10 பழவினைகள்

குயிலைத் தூதுவிட்டு செந்தாமரைபோன்ற திருக்கண்களையுடைய எம்பெருமான் என்னை யீடுபடவைத்தவன் நான் சொல்லும் செய்தியை தூதுசென்று அறிவித்தால் உங்களுக்கு என்ன தீங்கு நேர்ந்துவிடும்? முற்பிறப்பில் செய்த பாவத்தினால் அல்லவா எம்பெருமான் திருவடிகளைப் பற்றி குற்றேவல் செய்ய இயலாதவளாய் இருக்கின்றேன் இன்னமும் விலகி இருப்பது தகுமா என்று தன் மனவுணர்வைக் குயிலிடம் கூறுவது போல் அமைத்து,

> "என்செய்ய தாமரைக்கண் பெருமானார்க் கென்தூதாய்
> என் செய்யு முரைத்தக்கால் இனக்குயில்காள் நீரிவிரே
> முன் செய்த முழு வினையால் திருவடிக்கிழக்குற்றேவல்
> முன் செய்ய முயலாதென் அகல்வதுவோ விதியினமே" [155]

என்று வினைக் கோட்பாட்டையும் விதியையும் இணைத்துக் காட்டுகிறார். பிரிவாற்றாமையால் மேலும் கிளியைப்பார்த்து பூவையே நீயும் பாராமுகமாகி விட்டாயே எம்பெருமானிடம் தூதுசென்று என்பிரிவாற்றாமையைச் சொல்லாமல் வாளா இருந்திட்டாய் ஒளியோடு கூடிய என் அழகை இழந்தேன். நான் உன்னிடம் எவ்வளவோ அன்பு பாராட்டினேன் உன் வாயலகில் இன்னடிசிலை ஊட்டி மகிழ்ந்தேன். ஆனால் பிரிவாற்றாமையினால் தளர்ந்து உடல் மெலிந்து விட்டேன். இனிமேல் உனக்கு இரையிடுவாரை நீயே தேடிக்கொள் என்ற கருத்தை,

> "நியலையே சிறுபூவாய் நெடுமாலார்க் கென்தூதாய்
> நோயெனது நுவலென்ன நுவலாதேயிருக் கென்தூதாய்
> சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான் இனியுனது
> வாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே" 156

என்ற இப்பாசுரத்தில் அமைத்து பிரிவாற்றாமையை வெளிப்படுத்துகிறார். தன்மனவேதனையைக் கூறி, தனக்கும் இறைவனுக்கும் நம்பிக்கையான தூதாகக் குயிலையும் கிளியையும் கற்பித்துக் கொள்வது நாயகிபாவத்தில் ஆழ்வாரது

மனவுணர்வைப் புலப்படுத்துகிறது.

**வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே**

என்று கூறுவது ஒரு அழகிய மனவுணர்வு உருக்காட்சி நான் உன்னிடம் எவ்வளவோ அன்பு பாராட்டினேன். இன்னடிசிலை உன் வாயலகில் ஊட்டி மகிழ்ந்தேன் ஆனால் நீயோ என் காரியத்தில் பாராமுகமாக இருந்து விட்டாய் என்ற உட்பொருள் தேக்கி ஆனால் கிளிக்காக வருந்துவது போல் அமைந்ததாக அமைந்துள்ளது.

## 6.11 மேகத்தின்யோகம்

மேகங்களைக் கண்ட பாராங்குச நாயகிக்குத் திருமாலின் திருமேனியைப் போல் இருப்பதாகத் தோன்றுகிறது. மேகங்களே நீங்கள் செய்த யோகம் தான் என்ன? திருமாலின் திருமேனி யொத்து விளங்குகிறீர்களே. திருமாலின் திருமேனியின் நிறம் கொண்டதால் அவனுடைய குணம் உங்களுக்கும் வந்தது போலும் உப்புக் கடல் நீரை முகந்து அதைப்பக்குவப்படுத்தி நன்னீராக்கி உங்கள் துன்பம் கருதாது சுமந்து திரிகின்றீர்கள். அனைவரும் பயன்பெறும் படி உதவுகின்ற மேகத்தின் இயல்பை,

> “மேகங்களே வுரையீர் திருமால் திருமேனி யொக்கும்
> யோகங்கள் உங்களுக் கெவ்வாறுபெற்றீர் உயிரளிப்பான்
> மாகங்க ளெல்லாம் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்தம்
> ஆகங்கள் நோவ வருந்தும் தவமாமருள் பெற்றதே” [157]

என்ற பாசுரத்தில் அமைத்துள்ளார். இறைவனை எப்போதும் நினைந்துருகும் ஆழ்வாருக்கு நாயகியாய் காதல் மீதூரப் பெற்று விளங்கும் போது கார்மேகத்தைக் கண்டவுடன் திருமாலின் உருவும், குணமும், நினைவுக்கு வருகின்றன.

## 6.12 இறைவனை அடையும் யோகம்

அழகிய கைவளைகளையுடைய பெரிய பிராட்டியாருடன் அவளுடைய நாயகனாகிய நீயும் களித்து வாழ்கிற அழகிய இருப்பை இப்போது காணப்பெற்று காண்பது, கேட்பது, முகர்வது, தொடுவது, உட்கொள்வது ஆகிய வேலைகளைச் செய்து கொண்டு அலைகின்ற ஐந்து

இந்திரியங்களுக்கான சுகங்கள் தவிர்க்கப் பெற்று உனது திருவடிகளை அடையும் பேறு பெற்றேன் என்ற கருத்தை,

> "கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்குருவி
> கண்டவின்பம் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம்
> ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப
> கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே"[158]

என்ற பாசுரத்தில் அமைத்துக் காட்டுகிறார். ஐம்புலன்களால் அடையக்கூடிய இன்பங்களிலேயே வாழ்வைச் செலவழித்து அதுவே வாழ்க்கை என்று கருதி அதிலே ஆழ்ந்து கிடப்பது மனிதனின் வழக்கம். அதனால் அறிவானது உயர்ந்து, மனத்தை அறிய முடியாமல் தவிக்கிறது. அந்நிலையை மாற்றி மனத்தை யோகப்பயிற்சியிலீடுபடுத்தி உன் திருவடியை அடைந்தேன் என்று கூறுவது. புலன்களின் வழியே மனத்தைச் செல்லவிடாமல் இறைவன் திருவடிகளில் ஒருமுகப்படுத்திய வெற்றியுணர்வு வெளிப்படுகிறது.

மனம் குரங்கு போன்றது ஒன்றில் நிலைத்து நிற்காது என்று வாய்மொழீ இலக்கியங்களில் கூறப்படுவதுண்டு,

> "நம்முடைய மனத்தை நம்முடைய விருப்பப்படி நடத்தி
> நாம் அடைய வேண்டிய எல்லாப் பேறுகளையும்
> எல்லா இலட்சியங்களையும் வாழ்க்கையிலே அடைய
> முடியும் அதற்குரிய பயிற்சியைத்தான் யோகம் என்றும்
> அகத்தவம் என்றும் லயம் என்றும் சொல்வார்கள்"[159]

எல்லாப்பொருளிலும் இறைவன்

பூவை, காயா, நீலம், காவி ஆகிய மலர்கள் மலர்வதைக் காணும் போதெல்லாம் எம்பெருமானின் உருவமாகவே மனம் உணர்கிறது. அதனால் என்உயிர் மகிழ்ச்சி கொள்கிறது என்ற கருத்தை,

> "பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
> காவிமலரென்றும்காண்தோறும் - பாவியேன்
> மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
> எல்லாம் பிரானுருவே என்று"[160]

என்ற பாசுரத்தில் வெளிப்படுத்துகிறார்.

ஐம்புலனுக்கு எட்டிய ஒன்றைத்தான் நினைத்துப் பார்ப்பது மனதுக்கு பழக்கம். கடவுள் நிலை என்பது ஐம்புலனுக்கு எட்டியதன்று ஐம்புலனுக்கு எட்டாத ஒன்றை ஆறாவது அறிவைக் கொண்டு அடைய விழைதல் இயற்கை. அதற்குப் புலன்களையே படியாகக் கொண்டு ஆழ்வார் அடைய விழையும் மனவுணர்வு உருக்காட்சியாக விளங்குகிறது.

### 6.15 யோகசக்தி

ஒரு பொழுதும் வெளிக் கண்ணால் காணப்பெறாத அந்தத் திருமேனியை மனம் என்கின்ற உள்ளே இருக்கின்ற கண்ணால் உணர்ந்து தியானம் செய்து காணப்பெற்றால் அப்போதே நமது வெளிக் கண்ணும் இறைவனின் கரிய திருமேனியைக் காணமுடியும் என்று,

"அற்றே நம் கண்காணு மாழியான் காருருவம்
இன்றே நாம் காணாதிருப்பதுவும் - என்றேனும்
கட்கண்ணால் காணாதவவ்வுருவை நெஞ்சென்னும்
உட்கண்ணால் காணுமுணர்ந்து" [161]

என்ற பாசுரத்தில் விளக்குகிறார்.

ஆழ்வார்கள் பெரும்பாலும் அவனது திருமேனியின் தியானத்திலே ஈடுபட்டவர்கள். மனக் கண்ணால் பரமாத்ம ஸ்வரூபத்தைக் கண்டால் பிறகு யோக சக்தியின் மூலம் வெளி யிந்திரியங்களாலும் காண்பர் [162] என்று கருதப்படுகிறது.

இயம, நியம, ஆசன, பிராணாயாம ப்ரத்யாகார, தாரணா, தியான, சமாதி என்பவை அஷ்டாங்க யோகம் இவற்றில் இயம, நியமங்கள் தியான காலத்தில் சேர்ந்தவையல்ல. எப்போதுமுள்ளவை. ஆசனத்தில் அமர்வது முதல், மூச்சினை சீராக்கும் பிராணாயாமம் வழக்கமான காரியங்களில் ஓடிக்கொண்டிருக்கும் மனத்தை அதன் ஓட்டத்திலிருந்து மாற்றியமைக்கும் பிரத்தியகாரா, தன் விருப்பம் போல் ஏதோ ஒரு பொருள்மீது செயல்மீது நினைவின் மீது மனத்தை நிறுத்திவைக்கப் பழகும் தாரணா முறை இதை என்பர் இந்த மனம் எங்கிருந்து புறப்படுகின்றதோ, அது புறப்படுகின்ற

இடத்திலேயே மனத்தைக் கொண்டு வந்து நிலை நிறுத்தப்பழுவது என்கின்ற தியானமுறை அதன் பிறகு எல்லா வற்றிற்கும் மேலான மெய்ப்பொருளோடு மனத்தை ஒன்றவைத்துத் தானும் அதுவாகவே மாறிவிடுகின்ற சமாதி நிலையையும் பயன்படுத்தி மெய்ம்மையைக் காணும் முறையைக் கூறுவதைக் காண முடிகிறது. [163]

### 6.14 பக்தியோகம்

யோககாலத்தில் பசியின் வாதைக்கு இடமிராதபடி உட்கொள்வதால் மெலிவு ஏற்படாமல் நீக்குகிறது ஆசனம் அசையாமல் உறுதியானதாக இருக்கவேண்டும் அவ்வாறு அமர்ந்து மேலிமையை கீழிமையின் அருகில் சேர்த்து, ஐந்து இந்திரியங்களையும் உட்புறமாக்கி எம்பெருமானிடமே அன்பு மயமான நெஞ்சை ஒருமுகப் படுத்தித் தொடர்ச்சியான தியானம் செய்ய வேண்டும் பக்தியோகத்தில் இதயம், கண், சூர்யமண்டலம் போன்ற பல இடங்களும் கூட வேண்டும். அப்போது சமாதி நிலை யோகத்தில் பக்தியோக விதிகளில் ஒன்றுக்கு இணங்க ஒளிப்பிழப்பான பரமாத்மாவை சுத்தமான மனத்தினால் அனுபவிப்பார்கள். [164] உண்மையாகவே அவனது உருவைக் காணவல்லவராவர் என்ற பக்தியோக முறைகளை விரித்துரைப்பதை,

> "இளைப்பினை இயக்கம் நீக்கியிருந்து முன்னிமையைக் கூட்டி
> அளப்பிலைம் புலனடக்கி அன்பவர்கண்ணே வைத்து
> துளக்கமில் சிந்தைசெய்து தோன்றலும் சுடர் விட்டாங்கே
> விளக்கினை விதியிற் காண்பார் மெய்ம்மையே காண்கிற்பாரே" [165]

என்ற பாசுரத்தில் காணமுடிகிறது.

### 6.15 வேட்கையில் அனுபவம்

நாம் அனுபவிக்கும்படி அவன் கிட்டும்போது அந்த அமுதத்திற்கும் மேலான இன்பம் ஏற்படுகிறது. எம்பெருமான் தனக்குள்ளே அமுதத்தைக் கொண்டவன் எனலாம். கனவு போன்ற நிலையில் இறைவனைக் கண்டதாகவும், பல நாட்களாக ஏங்கியிருந்து இறைவனைக் கண்டதால் பசித்தவன் உணவை அள்ளி விழுங்குவதுபோல் உன்னையனுபவித்தேன் என்று,

"கேட்கயா னுற்ற துண்டு கேழலாயுலகங் கொண்ட
பூக்கெழு வண்ணனாரைப் போதாக் கனவிற் கண்டு
வாக்கினாற் கருமந்தன்னால் மனத்தினால் சிரத்தைதன்னால்
வேட்கை மீதூர வாங்கி விழுங்கினேற் கினிய வாறே" [166]

என்று பாசுரத்தில் தெளிவுபடுத்துகிறார்.

அவ்வாறு பசித்து விழுங்கிய எனக்கு நீராகவும் நீ இருந்தாய், காய்ந்த இரும்பு போல் தாபத்துடன் இருந்த நான் உன்னைப் பருக மிக்க அன்பு கொண்டேன் என் தாபத்தைப் போக்க வந்து பொழியும் மேகம் போல் நீயே என்னை அணுகினாய் உன்னை முழுமையாகப் பருக விரும்பினேன் ஏனென்றால் நீ இனிய கரும்பின் சாறு போலிருப்பதே என்று,

"இரும்பனன்றுண்ட நீர்போல் எம்பெருமானுக்கு என்றன்
அரும்பெறலன்பு புக்கிட்டடிமை பூண்டுயந்து போனேன்
வரும்புனல் வண்ணனாரை மருவி யென்மனத்து வைத்து
கரும்பினின் சாறுபோலப் பருகினேற் கினியவாறே" [167]

என்ற பாசுர வரிகளில் தன் மனவுணர்வைக் காட்டுகிறார். முதலில் விழுங்கிவிட்டேன் என்று கூறியவர் அடுத்து பாசுரத்தில் கரும்பின் சாறு போலப் பருகினேன் என்கிறார். இனிப்பான பொருளைத் துளித்துளியாகச் சுவைத்துப் பருகுவது வழக்கம். முதற் பாசுரத்தில் விழுங்கிவிட்டதால் சுவையைச் சரிவர உணர முடியாத மனவுணர்வு, அடுத்த பாசுரத்தில் கரும்புச் சாறுபோல பருகினேன் என்ற வரியில் துளித்துளியாகச் சுவைத்த மனவுணர்வையும் வெளிப்படுத்துகிறது.

### 6.16 இறையனுபவம்

கனவு போன்றதொரு யோக நிலையில் இறைவனின் திருமேனியைக் கண்டேன். அவன் திருக்கைகள் கண்டேன். அக்கைகளில் நெருப்புப் போல் ஒளிவிடும் திருச்சக்கரத்தைக் கண்டேன். நோய் போன்ற வினைகளை வேரறுத்து மீண்டும் மீண்டும் பற்றிக் கொள்ளும் தன்மையதாகிய வினை என்னும் நோயை நீக்குபவனின் வலிமையைக் கண்டேன் என்று,

"கண்டேன் திருமேனி யான்கனவில் ஆங்கவன்கைக்
கண்டேன் கனலுஞ் சுடராழி கண்டேன்
உறுநோய் வினையிரண்டும் ஒட்டுவித்து, பின்னும்
மறுநோய் செறுவான் வலி" [168]

என்ற பாசுர வரிகளில் இறைவனையனுபவித்த தன் மனவுணர்வைக் காட்டுகிறார்.

**7. உருக்காட்சி மாலை**

ஒன்றுக்கு மேற்பட்ட உருக்காட்சிகளைக் கையாள்வது. கூறவந்த கருத்தைச் சரியான முறையில் உணர்த்துவதற்கு உற்ற வழியாக உள்ளது. ஒன்றுக்கு மேற்பட்ட உருக்காட்சிகள் அமைந்தால் அவை உருக்காட்சி மாலை என்று கூறப்படுகிறது. கலவை உருக்காட்சி [169] என்றும் குறிப்பிடுவர்.

வளம் கொடுக்கும் மழையானது எவ்வாறு தோன்றுகிறது அதன் உருவம், நிறம், மின்னுதல் ஒலித்தல் போன்றவை எவ்வாறு உள்ளது என்பதையும் காட்டுகிறார். இது உருக்காட்சி மாலையாக அமைந்துள்ளது.

**7.1 மழையின் தோற்றம்**

சூரியனின் வெப்பத்தால் கடலில் உள்ளநீர் முகந்து செல்லப்பட்டு மேகமாகிறது. அம்மேகம் இவ்வுலகத்துக்கே முதல்வனாக விளங்கும் திருமாலின் கரியநிற மேனியைப்போல் கருத்து விளங்குகிறது. மழை பொழியுமுன் மேகம் மின்னல், இடி போன்றவற்றைக் கொண்டிருக்கும். அந்த மின்னல், ஒளி திருமாலின் கையில் உள்ள சக்கரம் போல் உள்ளது இடியின் ஓசை வலம்புரிச் சங்கு ஒலி போல் அதிர்ந்து ஒலிக்கிறது. இறைவனின் சார்ங்கம் என்றும் வில்லிலிருந்து புறப்படும் அம்புகளைப் போல விரைவாகவும் இலக்கு மாறாமலும் மழை பெய்ய வேண்டும் என்ற கருத்தமைவில்,

"ஆழிமழைக்கண்ணா ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்து கொடார்த் தேறி
ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கருத்து
பாழியம் தோளுடை பற்பனாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்" [170]

என்ற பாசுரம் அமைந்துள்ளது. இதில் நிறத்தைக் காட்டும் காட்சிப்புல உருக்காட்சியும், இடிமுழக்கத்தைக் குறிப்பிடும் கேள்விப் புல உருக்காட்சியும் அமைந்துள்ளது. மெய்கருத்தல், ஆழிபோல் மின்னுதல், சரமழை ஆகிய காட்சிப்புல உருக்காட்சிகளும் ஆர்த்தேறி, நின்றதிர்ந்து போன்ற கேள்விப்புல உருக்காட்சிகளையும் கொண்டுள்ளத. இவ்வுலகில் கண்ணால் கண்ட பொருள்களைக் கொண்டு காணாத பொருளைக் காட்சிப் படுத்துதல் இயல்பு. ஆனால் எப்போதும் இறைநிலையிலேயே ஆழ்ந்திருக்கும் ஆண்டாள் இறைவனையே உவமையாக எடுத்தாளும் வல்லமையைப் பெற்றிருப்பதை உணர முடிகிறது.

### 7.2 நப்பின்னையை துயிலுணர்த்தல்

நப்பின்னைப் பிராட்டியை விளித்துத் துயிலுணர்த்தி, கதவைத் திறக்கும்படி கூறும் ஆண்டாள் மணம் மிகுந்தகுழலை உடையவளே என்று முகர்வுப்புல உருக்காட்சியையும் கோழியழைத்தன காண், பல்கால் குயிலினங்கள் கூவினகாண் என்றும் உன் செந்தாமரைபோன்ற கைகளில் அழகிய வளைகள் ஒலி செய்யும்படி வந்து திறக்க வேண்டும் என்பதில் கேள்விப்புல உருக்காட்சியும் அமைந்துள்ளன.

> *கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்*
> *"வந்தெங்கும் கோழி யழைத்தன காண்*
> *மாதவிப் பந்தர்மேல் பல்கால் குயிலினங்கள்*
> *கூவினகாண் பந்தார் விரலீ உன்மைத்துனன் பேர்பாடச்*
> *செந்தாமரைக் கையால் சீரார் வளை யொலிப்ப*
> *வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"* [171]

தாமரை போன்ற கையால் என்று குறிப்பிடாமல் செந்தாமரைக்கையால் எனக்குறிப்பிடுவது சிவந்த நிறம், மென்மைத் தன்மை, குளிர்ச்சி, நறுமணம், அழகு, கைகள் இயங்கும் போது குவிதலும் விரிதலும் ஆகிய தன்மை போன்ற தன்மைகளைப் பெற்றுள்ளமையைக் குறிக்கிறது. செந்தாமரைக்கை என்பது காட்சிப்புல, ஊற்றுப்புல, முகர்வுப்புல, உருக்காட்சிகளை உள்ளடக்கியுள்ளது. அழகிய

வளைகள் ஒலிக்கும்படி வந்து கதவைத் திறக்க வேண்டும் என்று கூறும்போது கைகள் அசையும் போது வளைகள் ஒலிப்பது கேள்விப்புல உருக்காட்சியைப் படைக்கிறது.

மழைக்காலத்தில் மலைக்குகை ஒன்றில் மிகுந்த உடல் களைப்பால் சிங்கம் ஒன்று உறங்கிக் கொண்டிருக்கிறது. அதன் வயிற்றில் தோன்றிய பசி உணர்வு விழிப்பைக் கொடுத்துவிடுகிறது. கோபத்தோடு கண்கள் சிவக்க விழித்து நோக்குகிறது. பிடறி மயிரை உதறிக் கொண்டு எழுந்து நிற்கிறது. இவ்வளவு நேரம் களைப்பால் கிடந்து உறங்கிய சிங்கம் தனது உடலை நிமிர்த்தி முழக்கம் செய்கிறது. பிறகு இறைதேடக் கிளம்புகிறது. காட்டுக்கு அரசனான சிங்கம் உறங்கி விழிப்பது போன்று கண்ணன் உறக்கம் நீங்கி வரவேண்டும் என்றும் பூவைப்பூவின் நிறத்தவனான அவன் தன் இருப்பிடத்திலிருந்து வந்து பெருமைமிகுந்த சிம்மாசனத்தில் அமர்ந்து தாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்து அருள வேண்டும் என்று ஆண்டாளும் ஆயர் குலப் பெண்களும் விண்ணப்பிக்கின்றனர். சிங்கம் கோபத்தோடு கண்கள் சிவந்து பார்ப்பதை தீவிழித்து என்று கோப உணர்வு ஒளிமிகுந்ததும் வெப்பம் உள்ளதுமான தீ என்று காட்சிப் படுத்தப்படுகிறது. உடலைநிமிர்த்தி இயக்கமற்றுக் கிடந்த உடலை இயக்கத்துக்குக் கொண்டுவந்து முழக்கம் செய்வது கேள்விப்புல உருக்காட்சியாகி ஒலிக்குறிப்போடு சேர்ந்த காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளமை,

"மாரிமலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரியசிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா உன்
கோயில் நின்றிங்னே போந்தருளி கோப்புடைய
சீரிய சிங்காசனத்திலிருந்து யாம்வந்த
காரிய மாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்" [172]

என்ற பாசுரத்தில் காட்டப்படுகிறது. கண்ணனின் நிறம் பூவைப்பூவைக் கொண்டு காட்சிப்படுத்தப்படுகிறது. ஆராய்ந்து அருளுதல் என்கின்ற தன்மை அரசனுக்கு உரியது.

ஆகையால் கண்ணனின் தலைமைச் சிறப்பைக் காட்டுகிறது. இப்பாசுரம் பின்னணி இசையோடு கூடிய நாடகக்காட்சியாய், படிப்பவர் மனத்தில் விரிகிறது.

## 8. உருக்காட்சிகளின் வழி இறையனுபவம்

ஆழ்வார்கள் தாங்கள் பெற்ற இறையனுபவத்தை ஐம்புலன்களினடிப்படையில் உருக்காட்சிகளாகப் படைத்துள்ளனர். இப்பாசுரங்களில் இறைவனது தன்மை, உருவ எழில், நிறம், ஒளி, கண்ணனின் குழந்தைப் பருவ விளையாட்டுக்கள், குழலூதும் வடிவம், குழலிசைச் சிறப்பு போன்றவற்றை இயற்கைப் பொருட்களைக் கொண்டு உருக்காட்சிகளாகப் படைத்து உணர்த்துகின்றனர்.

வித்து, முளை, கொழுந்து, கதிரவன், மழை ஆகியவற்றைக் கொண்டு இறைவனின் தன்மையைக் காட்சிப்புல உருக்காட்சியாக்கியுள்ளனர்.

மலை, தாமரை, மலர் போன்றவற்றால் இறைவனது திருவுருவச்சிறப்பு காட்சிப்படுத்தப் பெற்றுள்ளது.

கார்மேகம், காயாமலர், காவிமலர், தாமரைமலர் போன்ற மலர்களைக் கொண்டும் இரத்தினங்களின் ஒளி, கார்மேகத் திடையே தோன்றும் மின்னல் போன்றவற்றைக் கொண்டும் இறைவனின் நிறம் உணர்த்தப் பெறுகிறது.

கண்ணன் குழலூதும் அழகும், குழலூதும் போது உள்ள முகத்தோற்றமும் கேட்பவர் மனத்திரையில் காட்சியாய் விரியும் வண்ணம் படைத்தளிக்கும் அதே வேளையில் அந்தக் குழலோசையின் சிறப்பைக் கறவையினங்கள், மான்கள், பறவைகள் ஆகியவற்றின் செயலைக் கொண்டு விளக்குவது சிறந்த காட்சிப்புல உருக்காட்சியாக அமைகிறது.

ஆழ்வார்கள் இறைவனை உணர்ந்த அனுபவத்தைச் சுவைப் பொருட்களைக் கொண்டு உணர்த்துகின்றனர். மனிதர்கள் காதல்வயப்பட்டால் அவர்களுக்கு சுவைப் பொருட்கள் சுவைதராமல் போய் காதலனுக்குக் காதலி நினைவும், காதலிக்குக் காதலன் நினைவும் இனிமைச் சுவையைத் தருவது இயல்பு. ஆழ்வார்கள் தங்களை

நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் கொண்டு பக்திசெலுத்தியவர்கள். இறையின்பத்தில் புலன்களையும் மனத்தையும் செலுத்தி மெய்யுணர்வை அடைந்து, அதன் மூலம் இறைவனை அகக் . காட்சியாகக் கண்டு, புறக்கண்களாலும் காணும் 'பேறு பெற்றவர்களானார்கள். அந்த இன்பத்தை, கன்னல் சாறு நெய், தேன், அமுது ஆகிய நாவில் இனிக்கும் பொருட்களைக் கூறி சிந்தையில் இனிக்கும் இறைவனின் தன்மையை உணர்த்துகின்றனர்.

கன்னலுக்குள் சாறாகவும், பாலுக்குள் நெய்யாகவும், பூவுக்குள் தேனாகவும், அமுதாகவும் இருக்கும் இறைவன் முயன்று பெற்று அனுபவிக்கப்பட வேண்டியவன் என்பதையும் குறிப்பாகக் கொண்டுள்ளது.

முதலாழ்வார் மூவரும் தங்கள் தொண்டு நெறிக்கேற்ப இறைவனைப் பாடி இன்புறும் மனவுணர்வை வெளிப்படுத்தியுள்ளனர். திருமழிசையாழ்வார் பாசுரங்களில் இறைவனைப் பாடிப்பரவும் மனவுணர்வு உருக்காட்சிகள் அமைந்துள்ளன.

நம்மாழ்வார், படிப்படியாக மனம் இறைவனை அணுகுவதற்குப் பக்குவப்படும் நிலையையும் பயிற்சியையும் கூறி இறையன்பில் தம் மனம் தோய்ந்து இன்புறும் தன்மையை வெளிப்படுத்துகிறார்.

குலசேகராழ்வார், வாத்சல்யம், மதுரம், நிஷ்காமியம் என்னும் தொண்டுநெறி ஆகிய மூன்று நிலைகளிலும் இருந்து ராமனுக்குத் தாலாட்டும், தேவகியின் புலம்பலாகவும் ஒரு தாயின் மனவுணர்வை ஏனைய ஆழ்வார்களிடம் காணப்படாத புதிய கோணத்தில் அணுகி மனவுணர்வு உருக்காட்சியைப் படைக்கிறார். இறைவனுக்கு மட்டுமன்றி அவனடியார்க்கும் தொண்டு செய்யும் புதியவகை மனவுணர்வும் கூறப்படுகிறது.

பெரியாழ்வார் கண்ணனுக்குத் தாயாகவே மாறிவிட்ட மனவுணர்வு அவரது பிரபந்தம் முழுவதிலும் காணப்படுகிறது.

ஆண்டாள் பாசுரங்கள், கண்ணனைக் காதலனாக மட்டுமே கண்ட அவளது மனவுணர்வைப் பிரதிபலிக்கிறது.

தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகியோர் பாசுரங்களில் இறைவனைப் பாடிப்பரவும் மனவுணர்வு வெளிப்படுகிறது.

திருமங்கையாழ்வார் பரகால நாயகி என்ற சிறப்புப் பெயருடன் நாயக நாயகி நிலையில் பாடிய மனவுணர்வு உருக்காட்சிகள் பாசுரங்களில் காணக்கிடக்கின்றன.

## தொகுப்புரை

ஆழ்வார்கள் தங்கள் மனத்தை உள்முகமாகத்திருப்பி இறைவனைக் கண்டு அனுபவித்தனர். அவ்வாறு பெற்ற இறை அனுபவத்தை உற்றது உற்றவாறு பாசுரங்களாய் மொழிந்தனர்.

பாசுரத்தைக் கேட்டவுடன் கேட்பவர் மனத்திரையில் ஓவியமாக விளங்குவதற்கு ஒலி, ஒளி, மணம், நுகர்வுப் பொருட்கள், ஊற்றுப்புல உணர்வுகளைக் காட்டும் சொற்கள் ஆகியவை முன் நிற்கின்றன.

இவைதவிர மனவுணர்வு உருக்காட்சிகளும் ஆழ்வார்களது அனுபவங்களை நமக்கு உணர்த்துகின்றன. இறைவனது பெருமையையும், உருவ எழிலையும் இறைவனின் தன்மையையும் அவன் குடிகொண்டிருக்கும் திவ்விய தேசங்களின் நகர்வளம் மலைவளம் ஆகியவற்றையும் இறைவனை உணர்ந்து அனுபவிக்கும் வழிமுறைகளையும் ஆழ்வார்கள் நமக்குக் காட்டுகின்றனர்.

மனிதர்கள் எதையும் புலன்களின் வழியாகவே உணர்வர் என்பதனால் ஆழ்வார்கள் தங்கள் இறையனுபவத்தைப் புலன்களின் அடிப்படையில் படைத்துள்ளனர்.

கதிரவன், நிலவு, பிறை, மேகம், மலை, மழை வித்து, முளை கொழுந்து, மலர் பால், கன்னல், அமுது, மருந்து நஞ்சு ஆகியவற்றைக் கொண்டு இறைவனின் நிறம், உருவம், அங்கங்கள், தன்மை, சிறப்பு ஆகியவை உணர்த்தப்பட்டுள்ளன. வான், அருவி, மழை, ஒளி போன்றவற்றைக் கொண்டு அணிகலன்கள், ஆடைகள், நிறம் போன்றவை உணர்த்தப்பட்டுள்ளன. யானை, குரங்கு, மலர்கள் போன்றவற்றில் இறைவன் உறையும் நகர்வளம், மலைவளம் சிறப்பு போன்றவையும் காலைப்பொழுது பகற்பொழுது

இரவுப்பொழுது ஆகியவையும், பறவை, விலங்கு, மலர், உணவுப் பொருட்கள் போன்ற கருப்பொருட்களும் ஐம்புலனடிப்படையிலான உருக்காட்சிகளில் காட்சிப்படுத்தப் பெற்றுள்ளன.

கண்ணனின் குறும்புகள், குழலிசைச் சிறப்பு, தோற்றம், தொல்லையின்பத்தின் இறுதிகண்ட அசோதையின் மனவுணர்வு, கண்ணனைப் பெற்ற தாயாக இருந்தும் அவன் பிள்ளைமைக்குறும்புகளை அனுபவியாத தேவகியின் மனவுணர்வு ஆழ்வார்கள் இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் கொண்டு காதல் மீதூரப்பெற்ற நிலையில் கொண்ட மனவுணர்வு ஆகிய உணர்வுகள் கூறப் பெற்றுள்ளன.

ஆழ்வார்கள் மனத்தை உள்முகமாகத்திருப்பி எவ்வாறுயோகப் பயிற்சியினை அடைந்தனர் என்றும், அம்மனப் பயிற்சியினால் இறைவனை உணர்ந்த விதத்தையும் மனவுணர்வு உருக்காட்சிகளாகக் கூறி இப்பாசுரங்களைக் கேட்பவர்களும் முயலும் விதத்தில் அமைத்துள்ளனர்.

ஆழ்வார்களின் உருக்காட்சிகள் நிலம், பொழுது என்ற முதற்பொருளும், உணவு, மலர், புள், பறை, விலங்கு, மரம் போன்ற கருப்பொருளும் இருத்தல், இரங்கல், ஊடல், கூடல், பிரிவு போன்ற உரிப்பொருளும் தோன்றுமாறு அமைந்துள்ளன.

இப்பாசுரங்களைப் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் ஆழ்வார்கள் அடைந்த அனுபவங்களை அவர்களும் அடைந்தாற் போன்ற உணர்வை ஏற்படுத்த வல்லனவாய் உள்ளன.

ஐம்புலன்களினடிப்படையில் ஆழ்வார்கள் உருக்காட்சிகளைப் படைத்திருப்பினும் மனவுணர்வை வெளிப்படுத்தும் உருக்காட்சிகளே அதிகம் காணப்படுகின்றன. மனவுணர்வு உருக்காட்சிகள் பன்னிரு ஆழ்வார்களின் பக்தி நெறிக்கேற்ப அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 1- 1
2. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 4 -9-11
3. மேலது 1-8-5
4. மேலது 4-1-11
5. நம்மாழ்வார், திருவிருத்தம் பா. 82
6. ஆண்டாள், திருப்பாவை பா. 22
7. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 14-6
8. நம்மாழ்வார், திருவாய்மொழி 8-9-2
9. கம்பராமாயணம் பா. 1977
10. திருமங்கையாழ்வார், திருநெடுந்தாண்டகம் பா. 4
11. நம்மாழ்வார், திருவாய்மொழி 3-6-5
12. மாணிக்கவாசகர், திருவாசகம் பா. 15
13. கம்பராமாயணம் பா. 3060
14. புறநானூறு 3-5-9
15. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-7-2
16. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 7-4
17. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 7-3
18. மேலது 7-4
19. மேலது 8-1
20. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 2-7-2
21. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 1-6
22. மேலது 14-5
23. திருமழிசையாழ்வார், நாக்முகன் திருவந்தாதி பா.23
24. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 4-8-9
25. தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை பா.2
26. நம்மாழ்வார், திருவாய்மொழி 2-5-3
27. மேலது 2-5-1

28. மேலது 2-6-3

29. மேலது 2-7-5

30. கம்பராமாயணம் பா. 1926

31. உத்தமூர் வீரராகவாசாரியன் திருவிருத்தம் பிரபந்தரக்ஷை ப.73

32. நம்மாழ்வார், திருவாய்மொழி பா. 8-9-1

33. நம்மாழ்வார் திருவிருத்தம் பா. 39

34. திருப்பாணாழ்வார் அமலனாதிபிரான் பா.8

35. கம்பராமாயணம் பா. 7550

36. உத்தமூர், வீரராகவாசார்யன், திருவிருத்தம் பிரபந்தரக்ஷை, ப. 139

37. நம்மாழ்வார், திருவிருத்தம் பா. 88

38. நம்மாழ்வார், திருவாசிரியம் பா. 1

39. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 6-6-3

40. நம்மாழ்வார், திருவாய்மொழி 7-3-8

41. நற்றினை பா. 1

42. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-7-8

43. பேயாழ்வார், மூன்றாந் திருவந்தாதி பா.59

44. நம்மாழ்வார், திருவாசிரியம் பா.4

45. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-5-4

46. ஆண்டாள், திருப்பாவை பா.6

47. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 2-5-1

48. நம்மாழ்வார், திருவாய்மொழி 2-8-10

49. சர்வபள்ளி இராதாகிருஷ்ணன், கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் வரலாறு ப. 194

50. நம்மாழ்வார், திருவாய் மொழி 1-5-2

51. மேலது 10-5-3

52. மேலது 8-9-4

53. கம்பராமாயணம், சிறப்புப்பாயிரம் - 1

54. கம்பராமாயணம் பா. 102

55. ஆண்டாள், திருப்பாவை பா. 17

56. தொண்டரடிப் பொடியாழ்வார், திருமாலை பா.2

57. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-2-1

58. நம்மாழ்வார், திருவாய்மொழி 5-7-7

59. கம்பராமாயணம் பா.2616

60. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 12-6

61. கம்பராமாயணம் பா. 1650

62. நம்மாழ்வார், திருவாசிரியம் பா. 5

63. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-5-10

64. மேலது 1-8-2

65. ஆண்டாள், திருப்பாவை பா. 4

66. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-4-1

67. திருக்குறள், அறத்துப்பால் 77

68. ஆண்டாள் திருப்பாவை பா. 20

69. மேலது பா. 25

70. நம்மாழ்வார் திருவாய்மொழி 2-7-1

71. மேலது 2-5-9

72. பேயாழ்வார், மூன்றாந்திருவந்தாதி பா.57

73. திருமங்கையாழ்வார், திருக்குறுந்தாண்டாகம் பா. 10

74. நம்மாழ்வார், திருவாய்மொழி 3-4-4

75. ஆண்டாள், திருப்பாவை பா. 8

76. மேலது பா. 12

77. திருமங்கையாழ்வர், பெரிய திருமொழி 1-7-4

78. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 7-8

79. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-4-9

80. மேலது 3-7-8

81. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 6-2

82. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-6-8

83. மேலது 3-6-9

84. ஆண்டாள், திருப்பாவை பா.3

85. திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி 1-2-1

86. மேலது 1-2-5

87. பூதத்தாழ்வார், இரண்டாந்திருவந்தாதி பா. 75

88. கம்பராமாயணம் பா. 844

89. பேயாழ்வார், மூன்றாந்திருந்தாதி பா. 70

90. பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதி பா. 40

91. கம்பராமாயணம் பா. 2045

92. திருக்குறள், பொருட்பால் 616

93. பூதத்தாழ்வார், இரண்டாந்திருவந்தாதி பா. 22

94. பேயாழ்வார், மூன்றாந்திரவந்தாதி பா. 68

95. மேலது பா. 58

96. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி பா. 38

97. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 1-7-3

98. மேலது 9-8-1

99. மேலது 9-8-2

100. மேலது 9-8-6

101. மேலது 2-1-4

102. மேலது 2-10-7

103. மேலது 3-8-6

104. மேலது 9-3-10

105. மேலது 9-3-6

106. ஆண்டாள் திருப்பாவை பா.7

107. கம்பராமாயணம் பா. 59

108. ஆண்டாள், திருப்பாவை பா.6

109. மேலது பா. 18

110. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 9-8

111. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-2-20

112. மேலது 2-2-10

113. மேலது 1-6-1

114. மேலது 1-7-1

115. மேலது 1-8-1

116. திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி 1-7-2

117. மேலது 1-7-8

118. மேலது 1-7-9

119. நம்மாழ்வார், திருவாய்மொழி 10-3-5

120. மேலது 9-9-7

121. மேலது 10-6-8

122. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 7-1

123. மேலது 14-4

124. திருமங்கையாழ்வார், திருக்குறுந்தாண்டபம் பா.8

125. நம்மாழ்வார், திருவிருத்தம் பா. 89

126. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-4-2

127. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 2-1

128. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 3-2

129. நம்மாழ்வார், திருவாய்மொழி 4-4-10

130. மேலது 8-8-4

131. மேலது 1-7-3

132. மாணிக்கவாசகர், திருவாசகம், திருப்பொற்கண்ணம் பா. 15.

133. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-5-6

134. மேலது 9-3-3

135. நம்மாழ்வார், திருவிருத்தம் பா.63

136. நம்மாழ்வார், பெரியதிரவந்தாதி பா. 45

137. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 2-9-1

138. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 13-1

139. மேலது 7-2

140. ஆண்டாள், திருப்பாவை பா. 26

141. பேயாழ்வார், மூன்றாந்திருவந்தாதி பா. 94

142. நம்மாழ்வார், திருவாய்மொழி 3-10-10

143. திருமங்கையாழ்வார் திருக்குறுந்தாண்டகம் பா.9

144. குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி 5-1

145. மேலது 5-2

146. மேலது 5-3

147. மேலது 5-5

148. மேலது 5-6

149. மேலது 5-7

150. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-2-8

151. மேலது 3-2-9

152. குலசேகராழ்வார், பெருமாள்திருமொழி 7-6

153. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 3-8-4

154. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-4-3

155. மேலது 1-4-2

156. மேலது 1-4-8

157. நம்மாழ்வார், திருவிருத்தம் பா. 32

158. நம்மாழ்வார், திருவாய்மொழி 4-9-10

159. யோகிராஜ் வேதாத்ரிமகரிஷி, மனவளக்கலை ப. 7

160. திருமங்கையாழ்வார், பெரியதிருவந்தாதி பா. 73

161. மேலது பா. 28

162. உத்தமூர் வீரராகவாசார்யன் திருக்குறுத்தாண்டவம், பிரபந்தரக்ஷை ப. 203

163. யோகிராஜ் வேதாத்ரி மகரிஷி, மனவளக்கலை பக். 7,8

164. உத்தமூர் வீரராகவாசார்யன், திருக்குறுந்தாண்டவம் பிரபந்தரக்ஷை 203

165. திருமங்கையாழ்வார், திருக்குறுந்தாண்டவம் பா. 18

166. மேலது பா.4

167. மேலது பா. 13

168. பூதத்தாழ்வார், இரண்டாந்திருவந்தாதி பா. 67

169. ந. சுப்புரெட்டியார், சிலநோக்கில் நாலாயிரம் ப. 192

170. ஆண்டாள் திருப்பாவை - 4

171. மேலது 18

172. மேலது 23

# இயல் - 4

## ஆழ்வார்களின் இலக்கியநெறியும் புராண உருக்காட்சியும்

மனித சமுதாயத்தின் வாழ்வியல் பண்பாடுகள் காலந்தோறும் மாறிவரும் இயல்புடையவை அவ்வக் காலங்களில் நிலவிய பண்பாட்டு நெறிகளை இலக்கியங்கள் எதிரொலிக்கின்றன. இலக்கிய நெறிகளை வகைமைப்படுத்தி மொழி வளத்தைக் காத்து நிற்பவை இலக்கணங்கள் பண்பாடு. இலக்கியம், இலக்கணம் என்ற முக்கோணத்தில் சமுதாய நெறிகள் இழைகளாக ஊடுருவி நிற்கின்றன. [1] காலந்தோறும் சூழலுக்கும் பண்பாட்டுக்கும் ஏற்றவகையில் பல்வேறு இலக்கியங்கள் எழுந்துள்ளன. பொருண்மை அமைப்பாலும், வடிவ நிலையாலும், நோக்கு நெறியாலும் ஒன்றுபட்டு விளங்கும் இலக்கியங்கள் பலப்பல. இலக்கியத்தில் பொருண்மை முதன்மையுடையது. என்ற அடிப்படையில் அதனை மையமாகக் கொண்டு மேற்செல்லுதல் கொள்கையாய்வின் இயல்பாகிறது. பொருண்மையைத் தேர்ந்தமை, அதன் குறிக்கோள், அப்பொருளை ஆசிரியன் அணுகும்முறை, அதனை இலக்கியத்தில் புலப்படுத்திய நெறி, அல்லது அமைத்தளித்ததிறம், நடைத்தன்மை எனப்பலவாறாக விரிய வழியமைகின்றது. பொருண்மைக் கூறுகள் எல்லாம் கொள்கை ஆகின்றன என்பதற்கில்லை. ஆயின் கொள்கை ஆக்கும் அடிப்படையாக அமைகின்றன. [2]

பன்னிரு ஆழ்வார்களும் அருளிச்செய்த பாசுரங்கள் பக்தியைப் பொருண்மையாகக் கொண்டவை. இறைவனை பக்தி செய்யும் அடியார்கள் தங்களுக்கென்று தனித்த அணுகுமுறையைக் கைக்கொண்டனர். சைவக் குரவர்களின் அணுகு முறைகள் நான்கு வகைப்பட்டன. அவை மகன்மை நெறி, தோழமை நெறி, அடிமை நெறி, சன்மார்க்க நெறி என்பன. இதுபோல ஆழ்வார்கள் கொண்ட அணுகுமுறைகள் மூன்று வகைப்பட்டன.

1. வாத்சல்ய பக்தி நெறி

2. நிஷ்காம்ய பக்தி நெறி

3. மதுர பக்தி நெறி ஆகியவையாகும்

இவ்வகையில் தன்னைத் தாயாகவும் இறைவனைக் குழந்தையாகவும் பாவித்து பக்தி செலுத்துவது வாத்சல்யபக்தி. உலகப் பொருட்கள் எதிலும் விருப்பம் இன்றி, இறைவனிடம் பக்தி செலுத்துவது ஒன்றே குறிக்கோளாகக் கொள்வது நிஷ்காம்ப பக்தி. இது தொண்டு நெறியாகக் கொள்ளப்படும். இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் பாவித்துக் கொண்டு காதல் வயப்பட்டு பக்தி செலுத்துவது மதுர பக்தி.

படைப்போன் தனது சிந்தனைகளை வெளியிடுதல் என்ற நிலையில் இலக்கியம் அதற்குக் களமாக ஊடுபொருளாக அமைகிறது. [3] ஆழ்வார்கள் தங்களது பாடுபொருளும் அணுகுமுறையும் இயைந்த நிற்கும்படி தங்களது இலக்கிய நெறிகளை வகுத்துள்ளமை புலனாகிறது. படைப்பாளனின் இலக்கியக் கொள்கை அல்லது நெறியே இலக்கிய வகைகள் தோன்றக் காரணமாகின்றன.

### 1. இலக்கிய உத்திகள்

ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்குப் பயன்கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது. [4] இது ஆங்கிலத்தில் Techniue என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. இந்த உத்திதான் ஒரு பொருளின் தனித்தன்மையை உருவாக்கிச் சிறப்படையும் படி செய்கிறது. இது பல வகைப்பட்டதாக அமைகிறது. உத்திகளின் வகையும், தொகையும், நிலையும் காலந்தோறும் மாறுபடுவது. படைப்போருக்கேற்ப வேறுபடுவது பாடுபொருளுக் கேற்பவும், பாடல்களுக்கேற்பவும் பாடலின் நோக்கம், பயன், அமைப்பு போன்ற பற்பல வற்றிற் கேற்பவும் விதம் விதமாக அமையக் கூடியது. கவிஞனின் ஆற்றலும், தனித்தன்மையும், புதுமை புனையும் விருப்பும் வகைவகையான புதிய உத்திப் பயன்பாட்டைத் தரக்கூடும். [5] இவ்வகையான பயன்கள் இருப்பினும், உத்தியைப் பயன்படுத்துவதில் கவிஞனின் முதல் நோக்கம்தான் சொல்ல வந்த கருத்தை சரியான முறையில்

புலப்படுத்துவதேயாகும், கவிஞன் ஏதேனும் நோக்கம் பற்றி ஒரு சொல், தொடர், பொருண்மை, கருத்து, பொருள், உணர்வு, பாத்திரம், செயல் நிகழ்ச்சி, இடம், காலம், கனவு, கடிதம், வருணனை, விளக்கம், ஆடல், பாடல், காட்சி, நிறம் என ஏதேனும் ஒன்றை ஆளும்போது அதில் உத்தி தேர முடிகிறது.[6] ஆழ்வார்களது அணுகுமுறைகள் அவர்களது இலக்கிய நெறிகளுக்கு அடித்தளமாக அமைந்துள்ளன என்றால் உருக்காட்சிகள் என்ற உணர்த்துமுறை உத்தியானது அவ்விலக்கியங்கள் கோபுரம் போல் உயர்ந்து விளங்கத் துணை செய்கின்றன.

## 2. முதலாழ்வார் மூவரின் திருவந்தாதி

முதலாழ்வார் மூவர் என்று கூறப்படும் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் அந்தாதியாப்பில் தங்களது பிரபந்தங்களையருளிச் செய்துள்ளனர். இவர்களது பிரபந்தங்கள் யாப்புமுறையால் பெயர் பெற்றவை. ஒவ்வொரு திருவந்தாதியும் நூறு நூறு பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. இவர்கள் இறைவனை அணுகும் முறை நிஷ்காம்ய பக்தியாகிய தொண்டுநெறியாக உள்ளது.

### அந்தாதி

அந்தம் என்பது முடிவு ஆதி என்பது துவக்கம் அந்தத்தை ஆதியாக உடையது அந்தாதி ஒரு பாடலின் ஈற்றுச் சொல் அடுத்தபாடலின் முதலாக அமையும்படி பாடப்படுவது. இதுவே அந்தாதி எனப்படுகிறது. உலகமொழிகள் எல்லாவற்றிலும் வாய்மொழி இலக்கியமே முதலில் தோன்றியது என்பர்.[7] இது தமிழுக்கும் பொருந்தும். இவ்வகையான அந்தாதி யாப்பிலே புனையப்படும் செய்யுள்கள் நினைவில் நிறுத்துவதற்கு எளிதான வழியாகப் பின்பற்றப்பட்டது.

### திவ்விய பிரபந்தத்தில் அந்தாதிக் கூறுகள்

முதலாழ்வார் மூவரைத்தவிர திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதி என்று தொன்னூற்றாறு பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்தையும், நம்மாழ்வார் திருவிருத்தம் என்ற

நூறு பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்தையும், பெரிய திருவந்தாதியில் எண்பத்தியேழு பாசுரங்களைக் கொண்ட பிரபந்தத்தையும், திருவாய்மொழி என்ற ஆயிரத்து நூற்று இரண்டு பாசுரங்களைக்கொண்ட பிரபந்தத்தையும், மதுரகவியாழ்வாரின் பதினொரு பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்தையும் பெரியாழ்வாரின் பெரியாழ்வார் திருமொழி என்னும் பிரபந்தத்தில் போய்ப்பாடு என்னும் தலைப்பில் அமைந்த பதின்மூன்று பாசுரங்களையும் திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழியில் மன்னிலங்கு என்ற தலைப்பிலமைந்த பத்துப் பாசுரங்களையும் அந்தாதி அமைப்பில் காணமுடிகின்றது.

### 3. திருமழிசையாழ்வார் பிரபந்தங்கள்

திருமழிசையாழ்வார் இரண்டு பிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். நான்முகன் திருவந்தாதி மற்றும் திருச்சந்த விருத்தம் ஆகியன. திருச்சந்த விருத்தம் இசைப்பா பிரிவில் உள்ளது. முதலாயிரத்தில் ஆறாவது பிரபந்தமாகவும் நான்முகன் திருவந்தாதி இயற்பா பிரிவில் நான்காவது பிரபந்தமாகவும் அமைந்துள்ளது.

### 3.1 நான்முகன் திருவந்தாதி அமைப்பு

இப்பிரபந்தம் திருமழிசையாழ்வாரின் முதல் பிரபந்தமாகும். இது தொன்னூற்றாறு பாசுரங்களைக் கொண்டு விளங்குகிறது. இந்தப் பிரபந்தத்தில் ஆழ்வார் நாராயணனே பரம்பொருள் என்ற பரத்துவ ஸ்தாபனத்தையும் இதர சமய கண்டனத்தையுமே உத்தேசித்தா ரென்று நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தா னென்றதால் விளங்கும் [8] என்று குறிப்பிடுகிறார்.

### 3.2 திருச்சந்த விருத்தம்

திருச்சந்த விருத்தம், விருத்தயாப்பில் இனிய சந்தத்துடன் திகழும் பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. திரு என்ற அடைசேர்த்து திருச்சந்த விருத்தம் எனப்படுகிறது. இதனை சாத்திரங்களின் சாரம் என வைணவர்கள் போற்றிக் கூறுவர். இதிலுள்ள பாக்கள் எழுசீர்க் கழிநெடிலழ ஆசிரிய விருத்தம்

எனவும் அவ்வகைப் பாவினத்தால் ஆகிய இந்நூல் விருத்தம் என்னும் பொதுப் பெயராற் குறிக்கப்பட்டது. [9] என்றும் கூறுவர்.

### 3.3 அமைப்பு

இப்பிரபந்தம் நூற்று இருபது பாடல்களைக் கொண்டுள்ளது இனிய ஓசையழகு பெற்று விருத்தப்பாவில் பாடப்பட்டுள்ளது. ஒன்றுமுதல் பத்து வரையிலான எண்கள் எழு கூற்றிருக்கை போல பயின்று வருகின்றன. இப்பிரபந்தம் இறைவனின் பெருமையைப் போற்றும் தோத்திரப் பாடலாக விளங்குகிறது. ஆழ்வார் தனக்கென எதையும் வேண்டி இறைவனிடம் கேட்காமல் இறைவனைப் பாடிப் பரவுவதையே நோக்கமாகக் கொள்கிறார்.

### 4. நம்மாழ்வார் பிரபந்தங்கள்

நம்மாழ்வார் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி ஆகியவை இயற்பாவாகவும், திருவாய்மொழி இசைப்பாவாகவும் உள்ளது. இவரது பிரபந்தங்கள் நான்கும் அந்தாதி யாப்பில் அமைந்துள்ளன. இவைநான்கும் முறையே ருக்வேதம், யஜிர்வேதம், அதர்வணவேதம், சாமவேதம் என்ற வேதங்களின் சாரமென்பர்.

ஆழ்வாருடைய நூல்கள் உறுதிப்பொருள்களை விளங்கக் கூறுகின்ற நூல்களில் முதன்மையானவை. இறைவனுடைய எழில் நலன்களை நுகர்ந்து உண்டான அளவில்லாத பெருமகிழ்ச்சியானது வலியச் சொல்லுவிக்கப் பிறந்த நூல்கள் அவை. இறைவனுடைய திருவருளால் பிறந்த ஞானமே காரணமாகப் பிறந்தவை அவை [10] என்ற கருத்துக்கள் நம்மாழ்வாரின் பிரபந்தங்களின் சிறப்பை விளக்குகிறது. நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களினூடே ஆழ்வாரின் மனவளர்ச்சியை நுண்ணிதின் உணர்ந்து வெளிப்படுத்துகிறார் நம்பிள்ளை. திருவிருத்தத்தில் இறை நுகர்ச்சிக்குத் தடையான உடல் தொடர்பினை வெறுத்து அதைப் போக்குமாறு

வேண்டுகிறார். திருவாசிரியத்தில் அங்ஙனம் வேண்டிய ஆழ்வாருக்கு இறைவன் தன்னுடைய எழிலைக்காட்ட, அதனை அனுபவிக்கிறார். பெரிய திருவந்தாதியில் அவ்வனுபவத்தால் ஆசை கரைபுரண்டு பெருகப் பேசுகிறார். திருவாய் மொழியில் - இறைவன் தனக்குச் சுவையைப் பிறப்பித்த படியையும் அது பரம பக்தியாகப் பக்குவமான படியையும் பின்னர் உடல் தொடர்பு முற்றும் அறப்பெற்றுப் பேற்றோடு தலைக் கட்டிய படியையும் பேசுகிறார்.[11]

## 4.1 திருவிருத்தம்

தமது விண்ணப்பத்தைக் கேட்டருளுமாறு எம்பெருமானைப் ப்ரார்த்திக்கும் வகையில் தம் திவ்யப்பந்தத்தினை தொடங்குகின்றார்.

விருத்தம் என்ற சொல் வட்டம், கிழத்தனம், இடையூறு என்ற வெவ்வேறு பொருள்களை உடையாது, விருத்தம் என்பது விருத்தாந்தம், நடவடிக்கை, செய்தி என்ற பொருளையும் தருகிறது. [12]

## 4.2 திருவிருத்தம் அமைப்பு

இப்பிரபந்தம் நூறு பாடல்களைக் கொண்டுள்ளது. தன் நிலையை எம்பெருமானுக்கு உணர்த்த இப்பிரபந்தமென்பது மெய்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே என்று தொடக்கத்திலும் மாறன் விண்ணப்பம் செய்த என்ற முடிவிலும் அருளிச் செய்ததால் இவரது வேண்டுகோளே இங்கு விருத்தமெனப்படலாம். இது நேராக எம்பெருமான் விஷயமாகவும், அவனையே பெறுவதென்று பரமபுருஷார்த்த விஷயமாகவுமிருப்பது பற்றி மேன்மை பொருந்தியிருப்பதால் திருவிருத்தம் [13] எனக் கூறப்படுகிறது. எம்பெருமானை அடைவதற்கு நாயக நாயகி பாவத்தைக் கைக்கொண்டு காதல் விருத்தத்தையே இத்திருவிருத்தத்தில் ஆதரித்தருளினார் [14] என்பர்.

## 4.3 திருவாசிரியம் அமைப்பு

நம்மாழ்வார் அருளிச் செய்த பிரபந்தங்களில் இரண்டாவதாகவும் இயற்பாவில் ஆறாவதாகவும் திருவாசியம்

விளங்குகிறது. இது ஆசிரியப்பாவால் அமைந்து யாப்பு முறையால் பெயர் பெற்றது. திருவாசிரியத்தில் ஆழ்வார் இறைவனது அனுபவத்திலே ஆழ்ந்து நிற்கிறார். முதற்பாசுரத்தில் சேவடியோய் என விளிச்சொல்லோட லொன்றையும் வெளியிடாமலிப்பதிலிருந்தே இவன் அவனுடைய அனுபவத்திலே ஆழ்ந்து நின்றாரென்பது தெளிவாகின்றது. [15] என்று கூறுவதிலிருந்தும் அறியலாம் இப்பிரபந்தம் ஏழு பாசுரங்களைக் கொண்டுள்ளது.

### 4.4 பெரிய திருவந்தாதி அமைப்பு

நம்மாழ்வாரின் மூன்றாவது பிரபந்தமான பெரியதிருவந்தாதி இயற்பாவில் ஏழாவது பிரபந்தமாக உள்ளது. இது எண்பத்தேழு பாசுரங்களைக் கொண்டுள்ளது. ஒரு பாசுரத்தின் முடிவில் சற்றேறக்குறைய இருக்கும் சொல் மேற்பாசுரத்தின் முதலாவதால் அந்தாதி எனப்படுகிறது. மற்றதிருவந்தாதிகளைக் காட்டிலும் இதற்கு ஏற்றத்தைக் கருதி பெரிய திருவந்தாதி என்கிறது. [16] திருவிருத்தத்திலே பரக்ருத்தியாம் பொய்நிலத்தினின்று விடுபட்டு அஞ்ஞான விபரீத ஞானாதிகளுக்கு ஆளாகாமலிருக்க ஆசைப்பட்ட ஆழ்வாருக்கு ப்ரக்ருதியினுள்ளே பூர்ணானுபவத்தைக் கொடுத்து எம்பெருமான் ஆறுதல் செய்தருளின போது திருவாசிரியம் தோன்றிற்று... இனி லோகஹிதத்திற்காக அவன் ஸங்கல்பித்த படி அவனது குணானுபவம் பண்ணுவதே தமக்கும் நற்போது போக்கென நன்கு தெளிந்து தம்பிரயத்தன மின்றியே... தமக்குள்ள பரமபக்தியை இதில் வெளியிடுகிறார் [17] என்பதன் மூலம் இப்பிரபந்தம் ஆழ்வாரின் பக்தி வெளிப்பாடாக விளங்குகிறது எனத் தெரிகிறது.

### 4.5 திருவாய்மொழி அமைப்பு

நம்மாழ்வாரின் நான்காவது பிரபந்தமான திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்களைக் கொண்டுள்ளது. மிகவும் சிறப்பு வாய்ந்தது என ஆசார்யர்களால் கருதப்பட்டது. உரைகள் பல பெற்றது. இறைநிலை, உயிர்நிலை, நெறிநிலை, தடைநிலை, வாழ்வுநிலை ஆகிய ஐம்பெரும் பொருள்களைத்

தெளிவுபடுத்தி விரித்துரைப்பதே திருவாய் மொழிக்குச் சிறப்பு என்பர். அவற்றுள்ளும் பேரின்பப் பெருவாழ்வாகிற திருத்தொண்டினை வலியுறுத்துவதே முதன்மை நோக்கம் என்றும் அதனை விளக்கிக் காட்டும் முறையில் மற்றவற்றையும் விரிக்க நேர்ந்தது [18] என்பர். திருவாய் மொழியின் அமைப்புச் சிறப்பினை திருவாய்மொழி முழுவதன் சுருக்கம் முதல் திருவாய்மொழி அதன் சுருக்கம் முதற்பாசுரம் அதன் சுருக்கம் முதல் அடி இச்சுருக்க - விரிவு உறவினை நம்பிள்ளை வலியுறுத்துகிறார். ஒரு நூலின் தொடக்க வரிகள் அருவியாகத் தொடங்கி நூல் முழுவதும் பெருகிப்பாயும் ஆறாக வெள்ளமிட வேண்டும் என்பது அவருடைய நூல் அமைப்புக் கொள்கை [19] என்பர்.

### 5. குலசேகராழ்வார் பிரபந்தம்

குலசேகராழ்வவர் பாடிய பாடல்கள் பெருமாள்திருமொழி என்றழைக்கப்படுகிறது. பெருமாள் திருமொழி நூற்றியைந்து பாசுரங்களைக் கொண்டுள்ளது. இவரது பாசுரங்கள் நிஷ்காம்ய பக்தியையும், வாத்சல்ய பக்தியையும், மதுரபக்தியையும் கொண்டதாக உள்ளது. இவரது அணுகுமுறை மற்ற ஆழ்வார்களிலிருந்து வேறுபட்டுள்ளது.

### 5.1 பெருமாள்திருமொழி அமைப்பு

இப்பிரபந்தம் கிருஷ்ணாவதாரம் மற்றும் இராமாவதாரத்தைப் போற்றுகிறது. ஒன்று முதல் ஏழு திருமொழிகளில் கிருஷ்ணாவதாரத்தைப் பாடுகின்றார். எட்டு ஒன்பது பத்தாந் திருமொழிகளில் இராமாவதாரத்தைப் பாடுகின்றார். ஒன்று முதல் ஐந்து வரையுள்ள திருமொழிகள் குலசேகராழ்வாரத்து திருமால் பக்தி வெளிப்பாடாகத் திகழ்கிறது. ஆறாந்திருமொழி கண்ணனிடம் ஆயர்குலப் பெண்கள் ஊடல் கொண்டு பேசுவதாக அமைந்துள்ளது. ஏழாந்திருமொழி தேவகி யசோதைக்குக் கிடைத்த பேறு தனக்குக் கிடைக்க வில்லையே என்று கழிவிரக்கம் கொள்வதாக அமைந்துள்ளது. இராமாவதாரத்தைக் கூறும்போது இராமனுக்குத் தாலாட்டாக எட்டாந்திருமொழி

அமைகிறது. ஒன்பதாந் திருமொழியில் தசரதரனின் புலம்பலாகவும் பத்தாந் திருமொழியில் இராமாயணக் கதைகளும் பாடப்பட்டுள்ளன.

**5.2 பெருமாள் திருமொழியின் சிறப்பு**

ஏனைய பிரபந்தங்களில் இல்லாத சிறப்பு பெருமாள் திருமொழியில் இடம் பெறுகிறது. மற்ற ஆழ்வார்கள் இறைவனை மட்டுமே போற்றிப் பாட குலசேகரர் திருமாலடியார்களையும் போற்றுகிறார் என்பதை,

"ஆடிப்பாடி யரங்கவோ வென்
றழைக்குந் தொண்ட ரடிப்பொடி
ஆட நாம் பெறிந் கங்கை நீர் குடைந்
தாடும் வேட்கை யென் னாவதே"[20]

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இரண்டாந்திருமொழி முழுவதும் திருமாலடியார்களை ஏற்றிப் பாடுவதே காணப்படுகிறது.

**6. பெரியாழ்வார் பிரபந்தங்கள்**

பெரியாழ்வார் இரண்டு பிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். திருப்பல்லாண்டு மற்றும் பெரியாழ்வார் திருமொழி ஆகியன. இவ்விரண்டும் இசைப்பாபிரிவில் முதலாயிரத்தில் இடம் பெற்றுள்ளன.

**6.1 திருப்பல்லாண்டு பெயர்க்காரணம்**

நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில் முதலாவது பிரபந்தமாகத் திருப்பல்லாண்டு அமைந்துள்ளது. பல்லாண்டு என்பதன் பொருள் பல ஆண்டுகள் என்பதாகவும் நீடுவாழ்க என்று வாழ்த்துப் பொருளுடையதாகவும் விளங்குகிறது. இறைவனுக்குப் பாடப்பட்ட வாழ்த்தாகையால் திரு என்ற அடை சேர்த்துத் திருப்பல்லாண்டு என்று வழங்கப்படுகிறது. பெரியாழ்வாரின் முதற்பிரபந்தமான திருப்பல்லாண்டு பாடல் முதற்குறிப்பால் பெயர் பெற்றது. பாட்டியல் நூல்களில் பன்னிரு பாட்டியல் மட்டுமே யாண்டு நிலை என்னும் பெயரில் இவ்விலக்கிய வகையைப் பற்றி நினைக்கிறது.[21]

### 6.2 திருப்பல்லாண்டு அமைப்பு

பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாசுரங்களைக் கொண்டுள்ளது. முதற்பாசுரம் இரண்டு அடிகளையும், ஏனைய பதினொரு பாசுரங்களும் நான்கு அடிகளைக் கொண்டவையாகவும் உள்ளன. முதற்பாசுரம் இறைவனுக்குக் காப்புச் செய்கிறது. மற்ற பாசுரங்கள் ஒரேமாதிரியான மகுடம் பெறாமல் பல்லாண்டு கூறுதுமே பல்லாயிரத்தாண்டேன்மினே பல்லாயிரத்தாண்டென்று பாடுதுமே பல்லாண்டு கூறுவனே எனப் பலவகை மகுடங்களைப் பெறுகின்றன. ஆழ்வார் தான் ஒருவராகப்பாடும்போது தரமான தன்மையில் தன்மை ஒருமையிலும், அடியார் கூட்டத்தாரையும் உளப்படுத்தித்தன்மைப் பன்மையிலுமாகத் திருப்பல்லாண்டுப் பாடல்களைப் பாடியதே இதற்குக் காரணம் ஆகும்.

இறைவனுக்கு மங்களம் உண்டாகும்படி வாழ்த்தியதால் வைணவ மரபில் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டுக்கு மங்களாசாசனப் பிரபந்தம் என்னும் பெயரும் உண்டு. [22] மற்றைய ஆழ்வார்களும் தங்கள் பேரன்பினால் இறைவனுக்கு மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள். பெரியாழ்வாரின் மங்களாசாசனம் திருப்பல்லாண்டு என்று தனிப்பிரபந்த மாகும். அளவிற்கு சிறப்புடையதாயும், அளவிற்பெரிதாயும் விளங்குகிறது. விஷ்ணுசித்தர் என்ற இயற்பெயர் கொண்டிருந்த இவரைப் பெரியாழ்வார் என்று பெயர் பெறச் செய்த பிரபந்தம் திருப்பல்லாண்டு ஆகும். இறைவனிடத்தில் பொங்கிப் பெருகிய பரிவினால் இறைவனுக்கே வாழ்த்துக் கூறி தனது தாய்மை நெஞ்சத்தை வெளிப்படுத்துகிறார் ஆழ்வார். இத்திருப்பல்லாண்டில் பொங்கும் ஆழ்வாரது பரிவை சோராத காதற் பெருஞ்சுழிப்பு [23] என அமுதனார் குறிப்பிடுகிறார். பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர் பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர் [24] என்று மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் கூறியுள்ளார். மற்ற ஆழ்வார் பாசுரங்களிலும் பல்லாண்டுக் கூறுகள் அமைந்துள்ளன.

### 6.3 மற்ற பிரபந்தங்களில் பல்லாண்டுக்கூறுகள்

பெரியாழ்வாரைப் போல தனிப்பிரபந்தமாக ஏனைய

ஆழ்வார்கள் பாடவில்லையாயினும் அவர்களது பாசுரங்களில் இப்பல்லாண்டு கூறும் பண்பை இனங்காண முடிகிறது. வீற்றிருந் தேழுலகும். [25] என்னும் திருவாய் மொழியில் நம்மாழ்வார் போற்றியென்றே கைகளாரத் தொழுது என்றும் அங்கும் இங்கும் என்ற பாசுரத்தில் சங்கு சக்கரக் கையவனென்பர் சரணமே [26] என்று முடியும் பாசுரமும் நம்மாழ்வாருடைய திருப்பல்லாண்டு எனக் கூறுவர் உரையாசிரியர். ஆண்டாளது திருப்பாவையிலும் பல்லாண்டு பாடும் மரபு காணப்படுகிறது. திருப்பாவை 10,21,24,26 போன்ற பாசுராங்களில் இப்பல்லாண்டுக் கூறுகளைக் காண முடிகிறது. போற்ற என்றும் போற்றி என்றும் பாசுரங்களில் இடம்பெறுகை பல்லாண்டெனக் கருதப்படுகிறது.[27] அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி என்னும் 24-ம் பாசுரத்தைப் பல்லாண்டுப் பாசுரமாகவே கொள்வர். இதனைப் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டுப் பிரபந்தத்துடன் தொடர்பு படுத்திக் காட்டுவர். இறைவனுக்குப் பல்லாண்டு பாடியவரின் திருமகளாராதலால் ஆண்டாளுக்கும் பல்லாண்டு பாடும் தன்மை குடிப்பிறப்பால் வாய்த்தது என்றும் சிறப்பித்துக் கூறுவர் [28] திருச்சந்த விருத்தம் 61 வது பாடலில் திருமழிசையாழ்வார் பேசுவாழி கேசனே என்று மங்காளசானம் செய்கிறார். பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு புராண உருக்காட்சிகளையும் கொண்டுள்ளது.

### 6.4 பெரியாழ்வார் திருமொழியின் அமைப்பு

இது பெரும்பாலும் பிள்ளைத்தமிழ் என்ற கூறும் அளவுக்குச் சிறப்புப் பெற்று விட்டது. இதுவே பிள்ளைத்தமிழுக்கு முன்னோடி என்பர். கண்ணனது பிள்ளைமைச் செயல்களை விரித்துப் பாடியதன் மூலம் பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்குத் தொடக்கம் செய்துள்ளார் என்றும் கூறுவர். அவரது பிள்ளைத்தமிழ் இருவகைக் கூறுகளைக் கொண்டுள்ளது. ஒன்று கண்ணனின் பிள்ளைப்பருவம் பற்றியவை. மற்றொன்று கண்ணனின் இளமைப் பருவம் பற்றியவை.

பெரியாழ்வார் திருமொழி கண்ணனின் பிள்ளைப்பருவம் கூறுவனவாக அமைந்துள்ளது பிறப்பு, தாலாட்டு அம்புலி,

செங்கீரை, சப்பாணி, தளர்நடை, அண்மை வருகை, புறம்புல்கள், அப்பூச்சி காட்டல், அம்மம் உண்ணல், காதுகுத்தல், நீராட்டல் குழல்வாரல், பூச்சூட்டல், காப்பிடல் போன்ற நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

கண்ணனைக் குறித்து ஆய்ச்சியர் முறையிடல், அன்னை அம்மம்தர மறுத்தல், கன்றின்பின் போகவிட்டு இரங்கல், கன்றுகளோடு வருவதைப் பார்த்து மகிழ்தல், குன்று குடையாய் எடுத்தல் குழல் ஊதல் என்பன கண்ணனின் இளமைப்பருவ நிகழ்ச்சிகள் ஆகும்.

கண்ணனைக் குழந்தையாகக் கண்டு கனிந்துருகிய பெரியாழ்வாரின் தாய்மை உள்ளம், அவனைக் காதலனாகவும் தன்னைக் காதலியாகவும் கொண்டும் சுவை சேர்க்கின்றது. [29] அவ்வாறு அகத்துறையாக அமைந்தவை. காலிப்பின் வரும் கண்ணனைக் கண்டு கன்னியர் காமுறல், மாயவன் மேல் மகள் மாலுறு கோலம் தாயவள் கூறல், மாயவன் பின் சென்ற மகளைத் தாயவள் உன்னி அதவுதல் ஆகியன. பெரியாழ்வாரின் இப்பிரபந்தம் சிறப்பு வாய்ந்த தாகக் கருதப்படுகிறது.

### 6.5 பெரியாழ்வார் திருமொழியின் சிறப்பு

பெரியாழ்வார் திருமொழிப் பாசுரங்கள் மிகவும் இயல்பாய் அமைந்தவை. ஒரு அமைப்புச் சட்டத்தை வைத்துக் கொண்டு நிரப்பப்பட்ட கவிதைகள் அல்ல. கிருஷ்ணாவதாரக் கதைகளும் அழகுக்கும் அருளுக்கும் முதன்மையான குழந்தைத் தெய்வம் எனப் போற்றுகின்றன. கண்ணனை பாலகிருஷ்ணனாக வழிபடும் மரபு வேரூன்றி விட்டதற்கு பாகவதக் கதைகளும், பாரதக் கதைகளும், கோகுலக் கதைகளும் காரணம் என்று துணியலாம். அணுகுவதற்கு எளிமையானதும் எளிதில் அன்புக்கு ஆட்படக் கூடியதுமான குழந்தை வடிவில், தெய்வத்தைக் காண்பது, பக்தியில் ஓர் அணுகுமுறை. குழந்தை நிலையில் கண்ணன் அணுகுவதற்கு எளியவனாகிறான். இதனால்தான் பெரியாழ்வாரும் யசோதையாகி அவனை அனுபவித்தார் என்பது வெளிப்படை அவ்வனுபவமே குழந்தையனுபவம் பற்றிய அரிய

பாடல்களைத் தந்திருக்கிறது. கண்ணன் பிறந்தது முதலாக அவனது பிள்ளைமை இன்பங்களையும் குறும்புகளையும் ஒன்று விடாமல் பாடி அனுபவித்தவர் பெரியாழ்வார் என்றே வியாக்கியானச் சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையும் கருதுகின்றார். போகத்தில் வழுவாத புதுவையர் கோன் என்னும் நாச்சியார் திருமொழித் தொடருக்கு, அவர்கூறும் உரையால் அறிய முடிகிறது. மேலும் கண்ணன் என்னும் குழந்தையோடு வாழ்ந்ததாக நினைந்துபாடும் இவரது கற்பனா சக்தி மிக இயல்பானதாக அமைந்துள்ளது. பெரியாழ்வார் கொண்ட வாத்சல்ய பக்திநெறியும் அவரது இலக்கிய நெறியும் இயைந்துள்ளமையை அறிய முடிகிறது.

### 6.6 பிற ஆழ்வார்களிடம் பிள்ளைத்தமிழ்க் கூறுகள்

பெரியாழ்வார் பாடிய பிள்ளைத்தமிழ்ச் செய்திகளுட்சில திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியிலும் ஆண்டாளின் நாச்சியார் திருமொழியிலும் இடம்பெறக் காணலாம். அம்புலியைப் பெற்றுத் தருவதாகக் கூறுதல்.

> "செக்கரிளம் பிறை தன்னை வாங்கி நின்கையில் தருவன்
> ஒக்கலை மேலிருந்தம்மம் உவந்தினிதுண்ண நீ வாராய்"[30]

என்றும், சப்பாணி கொட்டுமாறு வேண்டுவதனை,

> "ஏங்கியிருந்து சிணுங்கி விளையாடும்
> ஓங்கோத வண்ணனே
> சப்பாணி ஒளி மணி வண்ணனே
> சப்பாணி" [31]

என்றும், சிற்றில் சிதைத்தல் என்னும் பொருளில்,

> "துளையர் கருமென் குழலாய்ச்சியர்தம்
> துகில்வாரியும் சிற்றில் சிதைத்தும்" [32]

என்ற பாசுரவரியும், நாச்சியார் திருமொழியில் சிற்றில் சிதையேல் என்று,

> "வண்டல் நுண்மணல் தெள்ளி யாம்வளைக்
> கைகளால் சிரமப்பட்டோம் தென்டிரைக்
> கடற்பள்ளியாய் எங்கள் சிற்றில் வந்து சிதையேலே" [33]

என்ற பாசுரவரியும் சான்றாகும்.

## 7. ஆண்டாள் பிரபந்தங்கள்

ஆண்டாள் கண்ணன் மீது கொண்ட காதல் பாவைப்பாடல், தூது போன்ற இலக்கிய வகைகளையும், கனவுக் காட்சிகளையும் தந்துள்ளது. ஆண்டாள் இரண்டு பிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். இவ்விரண்டும் அகத்துறை சார்ந்தவைகளாகவே உள்ளன. ஆண்டாளின் பாடல்களில் பாவனையான காதலையன்றி உண்மைக் காதலையே காண்கின்றோம் மானுடப்பெண் தன்னோடு ஒத்த ஒருமானுடனைக் காதலிக்கும் பண்டை அகமும் ஒரு சாதாரணப் பெண் தன்னோடு ஒவ்வாத ஆனால் மனிதனான அரசனைக் காதலிக்கும் முத்தொள்ளாயிரம் அகமும், மானிடப் பிறவி பிறந்தும் மாயவனைக் காதலிக்கும் ஆண்டாளின் இறைக்காதலும் தலைவனைப்பற்றிய அடிப்படையில் பெரிதும் மாறுபடுகின்றன.[14] மற்ற ஆழ்வார்கள் இறைவனைப் பலவழிகளில் அணுகினாலும் ஆண்டாள் காதலனாக மட்டுமே அணுகும் நிலையும் மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்[15] என்பதும் தனித்தன்மையாகும். இவரது பக்தி மதுரபக்தி நெறியைச் சார்ந்தது. இவரது பக்தி நெறிக்கேற்ப இவரது இலக்கிய நெறியும் இயைந்துள்ளமையைக் காண முடிகிறது.

### 7.1 திருப்பாவை அமைப்பு

பழங்காலத்தில் மகளிர் கடற்கரையில் மணலாற்பாவை செய்து விளையாடுவர். இது பாவையாடல் எனப்படும். மணலாற் செய்யப்படும் பாவை,

> "நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த
> வண்டற் பாவை" [36]

என்று குறிப்பிடப்படுகிறது. இது நெய்தல் நிலத்து மகளிர் பாவையாடல் நிகழ்த்தியது என்பதை அறியமுடிகிறது.

> "பொய்கை சூழ்ந்த பொழில் மனை மகளிர்
> கைசெய் பாவை" [37]

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் நீர்நிலைகளை ஒட்டிய இடத்தே பெண்களால் இப்பாவையாடல் மேற்கொள்ளப் பட்டமையும் அறியப்படுகிறது. இவ்வாறு பழந்தமிழரின்

பாவை விளையாட்டின் அடிப்படையில் திருப்பாவையும் அமைந்துள்ளது. திருப்பாவை முப்பது பாடல்களைக் கொண்டுள்ளது. அனைத்துப் பாடல்களும் எம்பாவாய் என்ற முடிவைப் பெறுகின்றன. திருப்பாவையில் முதல் பாடல் செல்வச் சிறுமீர்காள் எனவிளித்து மகளிரை நீராடுவதற்குப் பொதுவாக அழைப்பதாக உள்ளது. இரண்டாம் பாடல் நோன்பு நோற்கும் முறையினை விளக்குகிறது. மூன்றாம் பாடல் நோன்பின் பயனை விளக்குகிறது. நான்காம் பாடல் மழை வேண்டுகிறது. ஆறிலிருந்து பதினைந்து வரையுள்ள பாடல்களில் கண்ணனைத் துயிலுணர்த்தும் நிலை காணப்படுகிறது. இவ்வாறு வரம் வேண்டல், நீராடல், மழைவேண்டிப் பாடுதல் போன்ற வகைகளாக அமைகின்றன.

### 7.2 நாச்சியார் திருமொழி

கண்ணனைத் தலைவனாகக் கொண்டு காதல் வயப்பட்ட மானிடப் பெண்ணான ஆண்டாளது அணுகுமுறையும் வெளியீட்டுத் திறனும் வேறுபட்டுள்ளது. கண்ணனை அடைவதற்குப் பாவை நோன்பு நோற்ற ஆண்டாள் பின்னர் காமனை வழிபடத் தொடங்கினாள் என்பதை,

> "சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே தொல்பாவை
> பாடியருளவல்ல பல்வளையாய் நாடி நீ
> வேங்கடவற் கென்னை விதி என்ற இம்மாற்றம்" [18]

என்ற தனியன் வழி உணரமுடிகிறது.

சிலப்பதிகாரத்தில் கணவனை மீண்டும் பெறச் சோமகுண்டம், சூரிய குண்டம் ஆகியன ஆடலைப் பீடன்று என மறுத்தாள் கண்ணகி என்றும் சீவக சிந்தாமணியில் சுரமஞ்சரி சீவகனை எண்ணிக் காம கோட்டத்திற்குச் சென்று வழிபட்டாள் என்றும் அறிகிறோம். இங்கு கண்ணனைக் கணவனாகப் பெற காமனைக் குறித்து ஆண்டாள் நோன்பு நோற்றமையை,

> "தையொரு திங்களும் தரைவிளக்கித்தண்
> மண்டலமிட்டு மாசிமுன்னாள்
> ஐயநுண் மணற் கொண்டு தெருவணிந்து
> அழகினுக்கலங்கரித் தனங்க தேவா
> உய்யவுமாய் கொலோ வென்றுசொல்லி
> உன்னையுமும் பியையும் தொழுதேன்
> வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
> வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே" [39]

என்ற பாடல்வழி உணரமுடிகிறது. நற்கணவனைப் பெறல் என்ற மனித வாழ்வு நோக்கத்தினை நிறைவேற்றும் நெறிமுறைகளான இத்தெய்வ வழிபாடுகள் இறைவனைக் கணவனாகப் பெறலுக்கும் ஏற்றி மொழியப்பட்டு இயல்பு நெறிவழி இயற்கை நெறி அணுகப்படலைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். [40]

### 7.3 கனவு

ஆண்டாளுடைய திருமணக் கனவு இலக்கியத்தில் புதுமை வாய்ந்தது. காதலர் வாழ்வில் கனவு காண்பது இயல்பானது. தொல்காப்பியத்தில் கனவும் உரித்தால் அவ்விடத்தான் [41] என்று குறிக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்திலும் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. திருக்குறளில் கனவுநிலை யுரைத்தல் எனும் அதிகாரம் உள்ளது. ஆனால் மணவினை நிகழ்வதாக, விரிவானதாக அமைந்ததில்லை தொடர்ந்த மணப் பாடலாக அமைவதாலும் மதுசூதனன் கைத்தலம் பற்றல் என இயற்பெயர் உறுவதாலும் புதுமை நலம் பொருந்துகின்றது. [42] நாயக நாயகி பாவனையில் பிற ஆழ்வார்கள் பாடியுள்ளனர். அவர்களது பாடல்களில் திருமணக்கனவு இடம்பெற வில்லை. திருமாலையே மணம்புரிந்து கொள்ள வேண்டும் எனும் ஆவல் பெரிதும் கொண்டிருந்தமையால் திருமால் இத்தகைய காட்சியை கனவில் காட்டக்கண்டதாகப் பாடுகிறார் ஆண்டாள்.

### 7.4 கனவுப்பாடல் அமைப்பு

ஆயிரம் வாரணங்கள் வலம் வருதல், தோரணம் நாட்டல், மணநாள் குறித்தல், தேவர்கள் வந்து பெண் கேட்பது, கோடியுடுத்தல், மணமாலை சூட்டுதல், காப்பு நாண்கட்டுதல், தீபமும் கலசமும் ஏந்தி சதிர் மங்கையர் எதிர் கொண்டழைத்தல் மந்திரம் ஓதி தீவலம் செய்தல் மதுசூதனன் ஆண்டாளின் தாள் பற்றி அம்மி மிதிக்கச் செய்தல் பொரிமுகந்தட்டுதல், மஞ்சன மாட்டுதல் என்று ஒரு முழு திருமண நிகழ்ச்சியைக் கனவில் காட்டக்கண்டு பாடியுள்ளமை கண்ணன் மீது அவள் கொண்ட காதலை நன்கு விளக்குகிறது. இது ஆண்டாளை மற்ற ஆழ்வார்களிடமிருந்து

வேறுபடுத்திக் காட்டுகிறது. மேலும் ஆண்டாள் பாடியுள்ளவை முழுவதும் அகப்பாடல்களே என்ற நிலையில் ஆண்டாள் கொண்ட மதுர பக்தி நெறியும் அவரது இலக்கிய நெறியும் இயைந்துள்ளமையை உணர முடிகிறது.

### 7.5 தூது இலக்கியம்

ஒருவர் கருத்தை மற்றொருவருக்குத் தெரிவிக்க இடையில் பிரிதொருவரை அனுப்புவது தூதாகும். புறத்திணைக் கண்ணும் அகத்தினைக் கண்ணும் தூதுப் பொருண்மை இடம் பெறுதல் உண்டு தூது என்னும் இலக்கிய வகை அகத்திணை சார்ந்தது. தலைவன் தலைவியிடத்தும், தலைவி தலைவனிடத்தும் தூது விடுதல் உண்டு என்பதையும் இருவருக்கிடையில் தூது செல்வோர் வாயில்கள் என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுவார். தொல்காப்பியத்தில் மட்டுமின்றி தூதுப் பொருண்மை பயின்ற பாடல்கள் பலவற்றைச் சங்க இலக்கியத்திலும் பக்தி இலக்கியத்திலும் காண்கிறோம். காப்பியங்களும், காப்பியப் பொருண்மையில் ஒன்றாகத் தூதுப் பொருண்மையைச் சுட்டுகின்றன.[43]

ஆண்டாள் குயிலை தூது விடுகிறாள், மேகத்தைத் தூது விடுகிறாள், கடல், மழை, கணமயில், கார்க்கோடல்பூ, தோன்றிப்பூ, முல்லை போன்றவற்றையும் தூது விடுகிறாள். நாயக நாயகி பாவத்தில் அகப்பாடல்களைத் தந்த பரகால நாயகி என்று அழைக்கப்படும் நம்மாழ்வாரும் தூது இலக்கியம் படைத்துள்ளனர். ஆண்டாள் கண்ணனிடம்,

> "புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப்
> பொதுப்பினில் வாழும் குயிலே
> பன்னியெப் போதுமிருந்து விரைந்து
> என்பவள வாயன் வரக்கூவாய்" [44]

> "போதலர்காவில் புதுமணம் நாறப்
> பொறிவண்டின் காமரங்கேட்டுஉன்
> காதலியோடுடன் வாழும் குயிலேயென்
> கருமாணிக்கம் வரக்கூவாய்" [45]

> "அன்புடையாரைப் பிரிவுறுநோய் அது நீயுமறிதி
> குயிலே பொன்புரை மேனிக்கருளக் கொடியுடைப்
> புண்ணியனை வரக்கூவாய்" [46]

என்று தூது அனுப்புகிறாள். பின் மேகத்தைப் பார்த்து.

"சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்கார் மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்கள்
உலங்குண்டன் விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்த
என்னை நலங்கொண்ட நாரணற்கு என் நடலை நோய்
செப்புமினே" [47]

என்று மேகத்தைத் தூது விடுக்கின்றாள்.

"பராங்குச நாயகி என்னும் நம்மாழ் வாரோ
அம்சிறைய மடநாராய்" [48]

என்று நாரையையும்,

"விதியினால் பெடை மணக்கும்
மென்டைய அன்னங்காள்" [49]

என்று அன்னத்தையும்,

"வைகல் பூங்கழிவாய் வந்து
மேயும் குருகினங்காள்" [50]

என்று குருகினத்தையும்

"போற்றியானிரந்தேன் புன்னை
மேலுறை பூங்குயில்காள்" [51]

என்று பூங்குயில்களையும்,

"வேறு கொண்டும்மை யானிரந்
தேன்வெளி வண்டினங்காள்" [52]

என்று வண்டினத்தையும் தூது விடுகிறார்.

8. தொண்டரடிப்பொடியாழ்வார் பிரபந்தங்கள்

தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்று இரண்டு பிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். இரண்டு பிரபந்தங்களும் திருவரங்கத்தில் உறையும் திருவரங்கன் மீதுபாடப்பட்டுள்ளது. இப்பாசுரங்கள் ஆழ்வாருக்கு அரங்கன் மீதுள்ள ஆழ்ந்த பக்தியினைப் புலப்படுத்துகின்றன.

### 8.1 மாலை இலக்கியம்

ஒருவகை மலரால் அல்லது பலவகை மலர்களால் தொடுக்கப்படுவது மாலை எனப்படும். அதுபோலவே ஒருவகைச் செய்யுள் அல்லது பலவகைச் செய்யுள்களால் தொடுக்கப்படும் பிரபந்தங்கள் மாலை என்றழைக்கப்படுகின்றன, மாலை என்பது பலவகைப் பிரபந்தங்களுள் ஒன்று இது திவ்விய பிரபந்தத்தில் திருமாலை என்ற பிரபந்தமாக உள்ளது. ஒரு பொருளைக் குறித்து பல செய்யுள் பாடுவதே மாலை என்னும் பிரபந்தமாகும்.[53] என்று கூறப்படுகிறது.

### 8.2 ஏனைய ஆழ்வார்களிடம் மாலை இலக்கியக் கூறுகள்

தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியது திருமாலை இது நாற்பத்தியைந்து பாடல்களைக் கொண்டு ஏழாவது பிரபந்தமாக விளங்குகிறது. இப்பிரபந்தம் திருவரங்கத்தில் உறையும் அரங்கனைப் பாடுவதன் சிறப்புக் கருதி திரு என்ற அடைசேர்த்துத் திருமாலை என்று வழங்கப்படுகிறது. திருமாலையறியாதவன் பெருமாளையறியான் [54] என்று வழங்கப்படும் பழமொழியின் மூலம் இதன் சிறப்பை அறிய முடிகிறது. இப்பிரபந்தம் விஷ்ணுதர்மம் என்னும் நூலின் சாரம் [55] என்பர்.

### 8.3 திருமாலை அமைப்பு

இப்பிரபந்தத்தில் இறைவனது திருநாமத்தின் பெருமையையும் அவனது திவ்விய தேசமான திருவரங்கத்தின் சிறப்பையும் இறைவனின் யோக நித்திரையையும் அடியார்களின் பிறப்புகளையும் பக்தியோடு பாடியுள்ளார். இப்பிரபந்தம் மற்ற ஆழ்வார்களின் பிரபந்தங்களிலிருந்து மாறுபடுகிறது. மற்ற பிரபந்தங்கள் திருமாலைப் பற்றிய புராணக் கூறுகளை (Myths) க் கொண்டு விளங்குகின்றன.

தொண்டரடிப்பொடியாழ்வாரைப் போல ஏனைய ஆழ்வார்கள் மாலை என்னும் தனி இலக்கிய வகையைப் படைக்க வில்லையாயினும் தங்கள் பிரபந்தங்களை மாலை என்று குறிப்பிடுகின்றனர். இக்குறிப்பு பிரபந்தம் அல்லது திருமொழியின் இறுதியில் இடம் பெற்றுள்ளது. பெரியாழ்வார்

திருமொழியில் பெரியாழ்வாரும், திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகியவற்றில் ஆண்டாளும், பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வாரும், திருவாய்மொழியில் நம்மாழ்வாரும், முதல் திருவந்தாதியில் பொய்கையாழ்வாரும், இரண்டாம் திருவந்தாதியில் பூதத்தாழ்வாரும் தங்களது பிரபந்தங்களை தமிழ்மாலை என்று குறிப்பிடுகின்றனர். திவ்வியப்பிரபந்தத்தை செய்ய தமிழ் மாலைகள் [56] என்று வேதாந்த தேசிகர் குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கது.

### 8.4 திருப்பள்ளியெழச்சியும் துயிலெடை நிலையும்

தொண்டரடிப்பொடியாழ்வாரின் மற்றொரு பிரபந்தம் திருப்பள்ளியெழுச்சியாகும். இவர் திருவரங்கத்தில் பள்ளிகொள்ளும் திருமாலைத் துயிலெழுப்பும் முறையில் இதனைப் பாடியுள்ளார். தொல்காப்பியர் காலத்தில் பழந்தமிழகத்தில் அரசர் விழித்தெழுகையில் அரசனைப் புகழ்ந்து பாடும்பாட்டு துயிலெடை நிலை எனப்பட்டது. இங்ஙனம் அரசர்க்குப் பாடிவந்த துயிலெடைநிலையே பக்திநெறிக் காலத்தில் கடவுளைத் துயிலெழுப்பும் பாடலாக மாறியது. அப்போது துயிலெடைநிலை என்ற பெயரும் மாறித் திருப்பள்ளியெழச்சி என்ற புதுப்பெயரும் அமைந்துவிட்டது[57] என்பர்.

### 8.5 திருப்பள்ளியெழுச்சி அமைப்பு

தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கன்மீது பாடிய திருப்பள்ளியெழுச்சிப் பிரபந்தம் பத்துப் பாடல்களைக் கொண்டுள்ளது. எல்லாப்பாடல்களும் அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே என்று மகுடம் கொண்டிருக்க ஐந்தாவது பாடல் எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே என்றும் பத்தாவது பாடல் அளியனென்ற குளியுன்னடியார்க் காட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே என்றும் முடிவு பெறுகிறது.

### 8.6 பிற ஆழ்வார்களிடம் பள்ளியெழுச்சிக் கூறுகள்

ஏனைய ஆழ்வார்கள் எவரும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சி போன்று தனிப்பிரபந்தமாக பாடவில்லை. ஆயினும்

ஆழ்வார்கள் சிலரின் பாசுரங்களின் பள்ளியெழச்சிக் கூறுகள் காணப்படுகின்றன.

அரவணையாய் ஆயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே[58] என்றும் பெரியாழ்வார் திருமொழிப் பாசுரம் யசோதை கண்ணனைத் துயிலுணர்த்தும் முறையில் அமைந்துள்ளது.

ஆண்டாள் திருப்பாவையில் பள்ளியெழுச்சிக் கூறுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. 6 முதல் 15 வரையுள்ள பாசுரங்கள் துயிலும் பெண்களை முன்பே துயிலெழுந்த பெண்கள் துயிலெழப்புவதாக உள்ளன. திருப்பாவையில் 17,20,21 ஆம் பாடல்கள் உம்பர் கோமானே உறங்கா தெழந்திராய்[59] திருவே துயிலெழாய்[60] சுடரே துயிலெழாய்[61] என்று துயிலுணர்த்தும் செயல்கள் காணப்படுகின்றன.

நம்மாழ்வார் திருவாய் மொழியில்

"கிடந்தநாள் கிடந்தாய் எத்தனை காலம்
கிடத்தியுன் திருவுடம் பசைய"[62]

என்ற பாடல் பள்ளியெழச்சிக் கூறுகொண்டதாக உள்ளது. தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் நிஷ்காமிய பக்திநெறிக்கேற்ப இவர் படைத்துள்ள இலக்கிய நெறியும் இயைந்து நிற்கின்றமையை அறியமுடிகிறது.

**9. திருப்பாணாழ்வார் பிரபந்தம்**

திருப்பாணாழ்வார் அமலனாதி பிரான் என்ற பிரபந்தத்தையருளிச் செய்துள்ளார். இப்பிரபந்தம் பத்துப் பாசுரங்களைக் கொண்டது பாடல் முதற்குறிப்பால் பெயர் பெற்றது. இப்பிரபந்தம் திருவரங்கத்து இறைவனைப் பற்றிப் பாடப்பட்டுள்ளது.

**9.1 பாதாதி கேசம்**

அடிமுதல் முடிவரை அல்லது முடிமுதல் அடிவரை உடல் உறுப்புக்களை வண்ணித்துக் கூறும் பொருண்மையுடன் அமைந்த இலக்கியங்கள் பாதாதி கேசம், கேசாதிபாதம் என்பன. உறுப்பு நலன்களை விரித்துக் கூறும் பொருண்மையில் அமைந்த இருவகை முறைவைப்பையும்

அடியொற்றிப் பாதாதி கேசம் கேசாதி பாதம் என்ற இருவகை இலக்கியங்களும் பாட்டியல் நூல்களில் கூறப்பட்டுள்ளன.[63]

### 9.2 மூலக்கரு

சங்க இலக்கியங்களின் ஆற்றுப்படை நூல்களில் விறலியின் உறுப்பு நலன் அடிமுதல் முடிவரைச் சிறப்புறக் கூறப்பட்டுள்ளது. காப்பியங்களிலும் பாட்டுடைத்தலை மக்களின் உறுப்பு நலத்தை வருணித்துக் கூறல் காப்பிய உறுப்பாகத் திகழ்கிறது.

பக்திநூல்களில் இறைவன் உறுப்பு நலன்களை வருணித்துக் கூறும் பாதாதிகேச இலக்கியக்கூறு அமைந்திருக்கக் காணலாம். இறைவனைப் பாடும்போது பாதாதி கேசமாக வருணித்தல் மரபு.

### 9.3 திவ்வியபிரபந்தத்தில் பாதாதிகேசம்

பாடல் முதற்குறிப்பால் பெயர் பெற்றிருந்தாலும் இப்பிரபந்தம் பாதாதிகேசம் என்னும் இலக்கிய வகையைச் சார்ந்தது. பாதாதிகேசம் என்னும் இலக்கிய வகையில் முப்பத்தியிரண்டு உறுப்புக்களைப் பாடுவது மரபாயிருப்பினும் இப்பிரபந்தம் பாதம், அரை, உந்தி, திருவயிற்றுதர பந்தம், மார்பு, கண்டம், வாய், கண்கள், நீலமேனி என்று ஒன்பது உறுப்புக்களைப் பற்றி மட்டுமே பேசுகிறத.

### 9.4 ஏனைய ஆழ்வார்களிடம் பாதாதிகேச இலக்கியக்கூறுகள்

பெரியாழ்வார் திருமொழியில் முதற்பத்து இரண்டாம்திருமொழியில் திருப்பாதாதிகேச வண்ணம் பாடப்பட்டுள்ளது. இத்திருமொழியில் பாதங்கள், விரல்கள், கணைக்கால், முழந்தாள், குறங்கு முத்தம், மருங்கு, உந்தி, உதரம், திருமார்பு, தோள்கள், கைத்தலங்கள், கண்டம், தொண்டை, மூக்கு, கண்கள், புருவம், திண்ணம் நெற்றி, குழல்கள் என்று இருபது உறுப்புக்களைப் பாடுகின்றார்.

## 10. திருமங்கையாழ்வாரது பிரபந்தங்கள்

திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம்,

திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரிய திருமடல் ஆகிய ஆறுபிரபந்தங்களையருளிச் செய்துள்ளார். இப்பிரபந்தங்களில் பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகியவை இசைப்பா வகையிலும், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியன இயற்பா வகையிலும் உள்ளன.

### 10.1 தாண்டகம்

தாண்டபம் என்பது ஒருவகைப் பிரபந்தமாகும். காண்டகயாப்பினால் அமைந்தவை. தாண்டகம் என்னும் இலக்கியவகையாகப் பெயர் பெறுகின்றன. இது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தமாகையாலே குறுந்தாண்டக மாகிறது. எண்சீரானபோது நெடுந்தாண்டகமாம் தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய திருமாலையும் இதே விருத்தமே எம்பெருமானின் அருளினால் இவருடைய மனம் சம்சார துக்கத்தை மறந்து அதைத்தாண்டி அவனது அனுபவத்தில் ஆழ்ந்ததின் மேல் வந்த பிரபந்த மாகையாலே தாண்டகமாயிற்றெங்க[64] என்று உரையாசிரியர் விளக்கம் கூறுவர்.

தாண்டகம் என்பது வடமொழி இலக்கணவழி அமைந்த செய்யும் [109] தாண்டகவகை தனியிலக்கியமாக தேவாரத்தில் குறுந்தாண்டகம், நெடுந்தாண்டகம் என்னும் தாண்டகச் செய்யுள்கள் இடம்பெற்றுள்ளன. தாண்டகம் என்னும் செய்யுள்வகையைச் சிறப்புறப்பாடியுள்ளதால் திருநாவுக்கரசருக்குத் தாண்டகவேந்தர் என்ற சிறப்புப் பெயர் வழங்குகிறது.

### 10.2 தாண்டகங்களின் அமைப்பு

திருக்குறுந் தாண்டகத்தில் இருபது பாடல்களும் திருநெடுந்தாண்டகத்தில் முப்பதுபாடல்களும் அமைந்துள்ளன. பாசுர அடிகளின் இடையிலோ முடிவிலோ முற்று இன்றி வினையெச்சமாகத் தொடர்ந்து இறுதியிலேயே முற்று பெறுகின்றன. முதல் நான்கு பாடல்களில் இறைவனைப் புகழ்வதும் புராணக்கதைகளைக் கூறிப் போற்றுவதும் ஐந்தாவது பாடலில் இறைவனைத் தாம் அனுபவித்த வகையை, வேட்கை மீதூர வாங்கி விழுங்கினேற் கினிய வாறே[65]

கரும்பினில் சாறுபோலப் பருகினேற்கினியவாறே[66]

என்றெல்லாம் கூறுகிறார். அடுத்த ஆறு, ஏழு, எட்டாம் பாசுரங்கள் முதல் நான்கு பாசுரங்களைப் போலவே விளங்குகிறது. ஒன்பது முதல் பதினொன்றாம் வரையுள்ள பாசுரங்கள் இறைவனை முன்னிலைப்படுத்திப் பேசும் முறையில் காணப்படுகிறது. பன்னிரண்டு முதல் இருபது முடிய உள்ள பாசுரங்கள் ஆழ்வாரது இறையனுபவங்களைத் தெரிவிக்கிறது.

திருநெடுந்தாண்டகத்தில் முதற்பத்துப் பாசுரங்கள்தாமான தன்மையிலும், அடுத்த பத்துப் பாசுரங்கள் தாய்க் கூற்றிலும் இறுதிப் பத்துப் பாசுரங்கள் மகள் கூற்றிலும் அமைந்தன.[67]

### 10.3 திருவெழுகூற்றிருக்கை

பா, பாவகை பாவினம் முதலான யாப்புவகையாலன்றிச் செய்யுளிற் கையாளப்பெறும் ஒருவகை உத்தி நோக்கி, வகைப்படுத்தப்படும்.

இலக்கியங்களும் தமிழில் தோன்றின.[68] அவ்வகைகளில் ஒன்றாக எழுகூற்றிருக்கை திகழ்கிறது. திவ்வியபிரபந்தத்தில் திருவெழுகூற்றிருக்கை என்று தனிப்பிரபந்தமாக திருமங்கையாழ்வார் பாடியுள்ளார். ஆசிரியப்பாவில், ஒன்று என்னும் எண்ணுப்பெயரில் தொடங்கி, ஒன்று முதலாக ஏழிறுதியாக ஏறியும் இறங்கியும் எண்ணலங்காரம் பாடப்படுவது எழகூற்றிருக்கையாகும்[69] மிக முயன்று பாடும் வகையாக இது உள்ளது.

### 10.4 திருவெழு கூற்றிருக்கை அமைப்பு

திருமங்கையாழ்வாரின் திருவெழு கூற்றிருக்கை நாற்பத்தியாறு அடிகள் கொண்ட நிலைமண்டில ஆசிரியப்பாவாக அமைந்துள்ளது. ஒன்று முதல் ஏழு முடிய உள்ள எண்கள் ஏறி ஏறி இறங்கி, இறுதியில் ஒன்றாய் விரிந்து நின்றனை என்று ஒன்று என்னும் எண்ணுப் பெயரில் நிற்கிறது. இப்பிரபந்தத்தில் பிரபஞ்சப் படைப்பு , பிரம்மாவின் பிறப்பு, தசாவதாரங்கள் முதலிய இறைவனின் பெருமைகளைக்

கூறுமுகமாக ஒன்று முதலாக ஏழு எண்கள் ஏற்றியும் இறக்கியும் காட்டப்படுகின்றன. ஒன்று முதல் முப்பத்தியேழாம் அடியின் முதற்சீர் முடியவுள்ள பகுதிவரை எழு கூற்றிருக்கையாகவும் எஞ்சிய பகுதிதோத்திர வடிவிலும் அமைந்துள்ளது.

### 10.5 மடல் என்னும் இலக்கியம்

அகப்பொருண்மைச் சார்புடன் எழுந்த இலக்கிய வகைகளில் மடல் என்பதும் ஒன்று பாட்டியல் நூல்களில் மடல், இன்பமடல், வளமடல் என வெவ்வேறு பெயர்களில் இந்த இலக்கிய வகை சுட்டப்பட்டுள்ளது. இதுவே பக்தியிலக்கியத்தில் புதிய இலக்கிய வகையாக வளர்ந்துள்ளது.

### 10.6 மடல் இலக்கணம்

மடலேறுவேன் எனத் தலைவன் கூறுவதாக வருவது ஐந்திணையாகிய அகத்திணைக்கு உரியது என்றும் மடல் ஏறியநிலை பெருந்திணைக்கு உரியது[70] என்றும் விளக்குவர் மடல் மாக்கூறும் இடனுமாருண்டே எனவரும் தொல்காப்பிய நூற்பாவையும் ஏறிய மடற்றிறம் இளமைதீர்திறம் என்னும் நூற்பாவையும் சான்றுகாட்டுவர்.

### 10.7 மரபு மாற்றம்

காதலியை அடைதற்பொருட்டுத் தலைவன் மடலேறலாம் என்பது பழைய இலக்கியமரபு. அம்மரபுக்குமாறாக திருமால் மீது காதல் கொண்ட தலைவி அவனை அடைய முடியவில்லையே என்ற ஏக்கத்தில் மடலேறத் துணிந்ததாக இருமடல்களிலும் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

### 10.8 கலித்தொகை காட்டும் மடல்

பெண்கள் மடலூர்வதாகக் கூறும் சிந்தனை ஆழ்வார்காலத்துக்கு முந்தைய காலத்திலேயே எழுந்திருக்கிறது என்பதை,

> "நனவினான் ஞாயிறே காட்டாய் நீ யாயின்
> பணையின்ற மாவூர்ந் தவன்வரக் காமன்
> கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு"[71]

என்ற கலித்தொகை பாடல் வரியினால் அறியலாம். இப்பாடலில் தலைவி மடல்ஊர்தல் பற்றிச் சொல்வதாகக் கூறப்பட்டுள்ளது. தலைவன் வரைவிடைப் பிரிந்து நீட்டித்தபொழுது பிரிவாற்றாத தலைவி நாணுவரையிறந்து கலங்கி மொழிந்ததாகவும், அப்போது தலைவன் வரவே அவள் தெளிவடைந்ததாகவும், இக்காட்சியைக் காண்டோர் கூற்றிலே வைத்து இப்பாட்டு எழுதப்பட்டிருப்பதாகவும் இதன் அடிக்குறிப்பு தெரிவிக்கிறது.

மடல் என்னும் துறையை ஒரு பிரபந்தமாக வளர்த்துப்பாடும் மரபைத் தோற்றுவித்தவர் திருமங்கையாழ்வாரே ஆதல்வேண்டும். இவர் பாடிய சிறிய திருமடல், பெரியதிருமடல் ஆகிய இருமடல்களும் திவ்வியபிரபந்தத்தில் இயற்பா என்னும் பிரிவில் இடம்பெறுகின்றன. இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கருதும் நாயக நாயகி பாவனை உத்தி (Technique of Bridal Mysticism) பழைய அகப்பொருள் மரபினைத் தழுவியதாகும். இவ்வுத்தியைப் பின்பற்றிய ஆழ்வார் பெண்மடலேறுவதாகக் கூறும் புதிய மாற்றம் புதிய இலக்கிய வகையாக ஆயிற்று.

### 10.9 மடல்களின் அமைப்பு

சிறிய திருமடல் என்னும் பிரபந்தம் முதலில் பதினான்கு வரிகளில் பரகால நாயகி கண்ணனைக் குடக்கூத்து ஆடிவரும்போது தெருவிலேகண்டு மையலுற்றமையைக் கூறுகிறது. பின்பதினொருவரிகள் கட்டுவிச்சியைக் கொண்டு தாய்மார்கள் பெண்ணின் நோய்க்குக் காரணம் அறிய முற்பட்டமையைக் கூறுகிறது. அடுத்த இருபத்தெட்டுவரிகள் கண்ணனின் பெருமைகைளைக் கட்டுவிச்சி கூறும் புராணக் கதைகளாக உள்ளது. பிறகு தாய்க் கூற்றாகவும் மகள் கூற்றாகவும் அமைந்து பின் திருமால் உறையும் திவ்விய தேசங்களின் பெயர்களைக் கூறி அப்பதிகளில் இறைவனின் தன்னை ஏற்றுக் கொள்ளாமல் செய்யும் செயல்கள் ஒன்றையும் விடாமல் செல்வேன் என்றும் மடலூராமல் விடேன் என்று சூளுரைக்கும் விதமாக முடிவுபெறுகிறது.

பெரியதிருமடல் என்னும் பிரபந்தத்தில் பரகால நாயகியின் காதலுக்குக் காரணமான திருமாலை பலவிதமாக உருவகித்து வருணிக்கும் போக்கு காணப்படுகிறது. பிறகு புருஷார்த்தம் எது என்று தீர்மானிக்கும் போக்கும் மடலூர்தல் பெண்களுக்கு அதர்மமல்ல தக்கதே என்றும் அதற்கு எடுத்துக்காட்டாக வேகவதி, உலூபி, உஷை, பார்வதி ஆகியோர் கதைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பிரபந்தத்திலும் முடிவில் திவ்விய தேசங்கள் கூறப்படுகின்றன. திருமங்கையாழ்வார் நாயகி பாவனையில் பரகாலநாயகி ஆகிறார். இவரது சிறிய திருமடல் பெரிய திருமடல் ஆகிய இரண்டு பிரபந்தங்களிலும் ஆழ்வார் நாயகி மடலேறத் துணிவதாகக் கூறப்படுகின்றது. இரண்டு திருமடல்களிலும் நாயகி மடலூர்வன், மடலூர்வன் என்று சொல்லி அச்சுறுத்தினாரேயன்றி அச்செயலை முற்ற முடிய நடத்தினதாகக் கூறவில்லை. சிறிய திருமடலில்,

> "ஓர் ஆனை கொம்பொசித்து ஓர் ஆனை கோள்விடுத்த
> சீரானை செங்கண் நெடியானை தேன்துழாய்த்
> தாரானை தாமரைபோல் கண்ணானை எண்ணருஞ்சீர்
> பேரா யிரமும் பிதற்றி பெருந்தெருவே
> ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன் நான்
> வார் ஆர்பூம் பெண்ணை மடல்"[72]

என்று கூறுவதாலும், பெரிய திருமடலிலும்.

> "உலகறிய ஊர்வன்கான்
> முன்னி முளைத் தெழுந்த ஓங்கி ஒளிபரந்த
> மன்னியபூம் பெண்ணை மடல்"[73]

என்று கூறுவதாலும் இதனை அறியலாம்.

### 10.10 ஏனைய ஆழ்வார்களிடம் மடல்

ஏனைய ஆழ்வார்களில் நம்மாழ்வார் மட்டுமே மடல் பற்றி பாடியுள்ளார். திருமங்கையாழ்வாரைப்போல் தனிப்பிரபந்தமாகப் பாடவில்லை. திருவாய் மொழியில் இரண்டு பாசுரங்களில் மட்டுமே நாயகி மடலூரத் துணிந்ததாக அமைந்துள்ளது.

..... தோழி உலகு தோரலர் தூற்ற, ஆம்
கோணைகள் செய்து குதிரியாய் மட லூர்துமே [74]

என்றும்

"யாம்மடல் ஊர்ந்தும் எம்மாழி
அங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர்
கொண்டு சூடுவோம்" [75]

என்றும் நம்மாழ்வார் திருவாய்மொழிப் பாசுரங்களில் பெண் மடலூரத் துணிந்தமை காணப்படுகிறது.

பன்னிரு ஆழ்வார்களும் இறைவனின் பத்து அவதாரங்களைப்பற்றிய புராணங்களைத் தமது பாசுரங்களில் கையாண்டுள்ளனர். ஒவ்வொரு பாசுரத்திலும் ஒருபுராணக் கதை அல்லது பல கதைகள் சேர்ந்து புராண அடுக்குகளாகக் காணப்படுகின்றன. காக்கும் கடவுளாக விளங்கும் திருமாலுக்கு மட்டுமே அவதாரங்கள் உண்டு. இந்த அவதாரங்களைப் பற்றிய கதைகளை பதினெண் புராணங்களும் இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களும் அறிவிக்கின்றன.

### 11. அவதார நோக்கம்

தீய சக்திகளை மாய்த்து நல்லவர்களைக் காத்து அறத்தை நிலைநாட்ட இறைவன் அவதாரங்களை எடுக்கிறார். இதை துஷ்டநிக்ரகம் சிஷ்டபரிபாலனம் என்று வடமொழியில் கூறுவதுண்டு தீமைகள் அதிகரித்து, நல்லோர் துன்புறும்போது அவதாரம் நிகழும் என்பதை,

"நல்லாரைக் கர்ப்பதற்கும், கெட்டவரைக்
கரந்தொடுக்கு வதற்கும் தர்மத்தை நிலைநாட்டுவதற்கும்
யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்" [76]

என்று கீதையில் கண்ணன் கூறுகிறான். இறைவனின் இச்செயல்கள் உலகின் மீதுள்ள கருணையினால் நிகழ்பவை கருணைக்கு உவமையாக மழையைக் குறிப்பிடுவர். உலக மக்கள் அனைவருக்கும் பயன்படும் படியாக மழை பெய்கிறது. அந்த மழை உலகில் ஒரு நல்லவர் இருந்தாலும்

அவர் வாழ்வதற்காக அனைவருக்கும் பெய்கிறது என்ற கருத்தில்,

> "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
> எல்லோர்க்கும் பெய்யும் மழை"[77]

என்ற மழையின் கருணை கூறப்படுகிறது. அந்தமழை கூட சில நேரங்களில் பொய்த்து விடுவதுண்டு அல்லது ஒரு இடத்தில் பெய்தும் ஒரு இடத்தில் பெய்யாமலும் போவதுண்டு. ஆனால் இறைவனின் கருணை, மழையின் கருணையிலும் மேம்பட்டது இந்த உலகம் உய்யும் படியாக அருளை வாரி வழங்குவது. இதையே காரேய் கருணை என்று குறிப்பிடுகின்றனர். திருமாலின் ஒன்பது அவதாரங்களும் இனிகலியுகத்தில் எடுக்கவிருக்கின்ற கல்கி அவதாரத்தையும் சேர்த்து பத்து அவதாரங்களும் இவ்உலகைத் துன்பத்திலிருந்து காப்பதற்கே எடுக்கப்பட்டதாகும்.

## 12. அவதாரங்களின் உட்பொருள்

### 12.1 மச்சாவதாரம்

பிரளயத்திலிருந்து உலகைக் காப்பாற்றுவதற்காக இந்த அவதாரம் எடுக்கப்பட்டது. சத்யவிரதன் என்னும் ராஜரிஷி ஆற்றில் நீரருந்தும் போது அவர்கைகளில் ஒரு சிறு மீன் அகப்பட்டது. அம்மீன் மிகப்பெரிய வடிவில் வளர்ந்து நின்றது. சத்யவிரதர் அம்மீனிடம் நீயார்? உனது தத்துவத்தை வெளியிட வேண்டும் என்று வேண்டினார். மீனானது, இன்றுமுதல் ஏழு நாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கிவிடப் போகின்றன. அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது அந்தப் படகில் சப்தரிஷிகளுடன் நீயும் மற்றும் அனைத்துத் தேவையான பொருட்களும் பிராணிகளும் ஏறிக்கொண்டு மனத்தில் வருத்தமின்றி இருங்கள் அந்தப் பெருவெள்ளத்தில் எனது தலையில் உள்ள பெரிய கொம்பில் பெரிய பாம்பினால் அந்த ஓடத்தைக் கட்டிவிடுங்கள். பிறகு பிரளயம் மடியும் வரை அனைவரையும் காப்பேன் என்று கூறி அதன்படியே செய்தது. இவ்வாறு மக்களையும் வேதங்களையும் காத்தருளியது மாச்சாவதாரத்தின் வரலாறாகும். இப்புராணத்தை திருமங்கையாழ்வார் ஒருவரே,

"கொழுங் கயலாய் நெடு வெள்ளங் கொண்டகாலம்
குலவரையின் மீதோடி அண்டத்தப் பால் எழுந்தினிது
விளையாடு மீச னெந்தை" [78]

என்றும்,

"வானோரளவும் முது முந்நீர் வளர்ந்த காலம்
வலியுருவின் மீனாய்வந்து வியந்துய்யக்
கொண்டதண்டாமரைக் கண்ணன்" [79]

என்று பெரிய திருமொழியில் விரிவாகக் குறிப்பிடுகிறார். இது அழகிய காட்சிப்புல உருக்காட்சியாகி, அளப்பரிய வெள்ளத்தை கண்ணால் கண்டது போன்ற ஒரு உருத்தோற்றத்தை மனத்தில் ஏற்படுத்துகிறது.

### 12.2 கூர்மாவதார வரலாறு

தேவர்களின் செல்வம் யாவும் துர்வாச முனிவரின் சாபத்தால் கடலுக்குள் சென்று விட்டதால் அசுரர்கள் வந்து போரிட்டு அமரர்களை வென்றனர். இந்திரன் திருமாலைச் சரணடைந்து அவர் கட்டளைப்படி அசுரர்களையும் துணைக்கொண்டு மந்தர மலையை மத்தாக நாட்டி வாசுகி என்னும் நாகத்தைக் கயிறாகப் பூட்டி, பாற்கடலைக் கடையலாயினர். அப்போது மத்தாகிய மந்திரகிரி கடலில் அழுந்திவிட தேவர்களின் வேண்டுகோளின்படி திருமால் பெரியதோர் ஆமை வடிவெடுத்து அம்மலையின் கீழ் சென்று அதனைத் தன் முதுகின் மேல் தாங்கி, அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோக மாகும்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்புராணத்தை திருமழிசையாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாடியுள்ளனர்.

#### திருமழிசையாழ்வார்

"ஆமையாகி ஆழ்கடல் துயின்ற ஆதிதேவ" [80]

என்று ஐம்புலன்களையடக்கி யோகநிலையில் நின்று அமுதம் கடைய உதவிய ஆதிதேவனான திருமாலின் நிலையை காட்சிப்புல உருக்காட்சியாக்கியுள்ளார். திருமங்கையாழ்வார் கூர்மாவதாரமான ஆமையைக் குறிப்பிட்டுப் பாடும்போது,

"செருமிகு வாளெயிற்ற வரவொன்று சுற்றித்
திசை மண்ணும் விண்ணுமுடனே
வெருவர வெள்ளை வெள்ளம் முழுதுங் குழம்ப
இமையோர்க ணின்று கடைய
பருவரை யொன்று நின்று முதுகிற்
பரந்து சுழலக் கிடந்து துயிலும்
அருவரையன்ன தன்மையடலாமையான
திருமால் நமக்கோரரண்ணே"[81]

என்றும்

"மலங்கு விலங்கு நெடுவெள்ளம் மறுக அங்கோர்
வரைநட்டு இலங்கு சோதியாரமுதம் எய்துமள
வோராமையாய் விலங்கல் திரியத் தடங்கடலுள்
சுமந்து கிடந்த வித்தகனை"[82]

என்றும் கூறி வெள்ளத்தின் காட்சி, மலையை நட்டுக் கடைவதால் ஏற்படும் வெள்ளத்தின் சுழற்சி அதனால் ஏற்படும் வெள்ளச் சிதறல் (Spill) ஆகியவையும் ஐம்புலன்களின் அடக்கத்திற்குக் குறிப்பிடப்படும் ஆமையின் யோக நிலையும் காட்சிப்புல உருக்காட்சியாக்கி மனத்திரையில் ஓவியமாக வரைகிறார்.

### 12.5 வராக அவதாரம்

இரண்யாட்சனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக் கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மகா வராக உருவமாய் அவதாரம் செய்து கடலினுள் புகுந்து அவ்வசுரனைக் கொன்று பாதாள உலகில் இருந்த பூமியைக் கோட்டினால் குத்தி அங்கிருந்து மீட்டு அருளினான் என்றும் பிரளயநீரில் மூழ்கியிருந்த பூமியை மேலே எடுப்பதற்கு வராக அவதாரம் எடுத்தனன் என்றும் இருவேறு வரலாறுகள் கூறப்படுகின்றன.

கேழல் என்ற வராக அவதாரத்தை முதலாழ்வார் மூவர். திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய எண்மரும்

பாடியுள்ளனர். பொய்கையாழ்வார்,

"கேழலாய் பூமி இடந்தானை" [83]

என்றும் பூதத்தாழ்வார்,

"உலகு இடந்தாய்" [84]

என்றும் பேயாழ்வார் தனது மூன்றாந்திருவந்தாதியில்,

"கேழலாய் மீளாது மண்ணகலம் கீண்டு" [85]

என்றும் திருமழிசையாழ்வார்

"இடந்தது பன்றியாய்" [86]

என்று குறிப்பிடுகிறார். நம்மாழ்வார் வராக அவதாரத்தைப் பாடும்போது

"ஞாலத்தை கோட்டிடைத்தான் கொண்ட கேழல்" [87]

என்றும் காட்சிப்புல உருக்காட்சியாகப் படைக்கின்றனர். பெரியாழ்வார் வராக அவதாரத்தை

"கேழல் ஒன்றாகி
கோட்டு மண்கொண்ட கொள்கையினானே" [88]

என்றும் ஆண்டாள்,

"பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்கு பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வாரா மானமில்லாப் பன்றியாய்" [89]

என்று கடல் நீரில் மறைந்த பூமியின் பாசி படிந்த நிலையையும் வராகஅவதாரத்தின் தன்மையையும் சொல்லோவிய மாக்குகிறார். திருமங்கையாழ்வார் வராக அவதாரத்தைப் பாடும்போது மிகவும் ஆழ்ந்து அதன் இயல்பு, வடிவம் போன்ற வருணணைகளோடு அதன்புராணத்தை உருக்காட்சியாக அமைத்திருக்கும் விதம் இந்த அவதாரத்தில் அவரது ஈடுபட்ட திறத்தை விளக்குகிறது,

சிலம்பு முதல் கலன் அணிந்து ஓர் செங்கண் குன்றம்
திகழ்ந்த தெனத் திருவுருவம் பன்றியாகி [90]

என்று அணிகலன், வராகத்தின் வடிவ அமைப்பு, கண்களின் வருணனை போன்றவற்றைப் பல பாசுரங்களில் விளக்கிச்

சொல்லோவியம் படைத்துள்ளனர்.

### 12.4 நரசிம்ம அவதாரம்

இரணியன் என்பவன் தேவர், மனிதர், மிருகம் போன்ற எவ்வுயிர்களாலும் பகலிலும், இரவிலும் வீட்டின் உள்ளேயும் வெளியேயும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்றான். இவன் தேவர் முதலிய யாவர்க்கும் பற்பல கொடுமைகளைப் புரிந்து அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்து வந்தான். அவன் மகனான பிரகலாதன் இளமை தொடங்கி மகாவிஷ்ணுவை வணங்கி வந்தான். தன் மகனை வழிப்படுத்தித் தன்னை வணங்கும்படி செய்ய பலவழிகளில் முயன்றான். இயலாததால் கொல்லவும் துணிந்தான். இறையருளால் பிரகலாதன் காப்பாற்றப்பட்டான். ஒரு நாள் மாலை நேரத்தில் இரணியன் தன் மகனை நோக்கி, நீ சொல்லும் நாராயணன் என்பவன் எங்கு உள்ளான்? என்று கேட்டான். பிரகலாதன், தூணிலும் உளன் துரும்பிலும் உளன் என்று கூறினான். இரணியன், எதிரே உள்ள தூணைப் புடைக்க அத்தூண் பிளந்து அதிலிருந்து மனித உடலும் சிம்மத்தின் தலையும் கொண்டு நரசிம்ம வடிவாய்த் தோன்றி வீட்டிற்கு உள்ளேயும் இல்லாமல் வெளியேயும் இல்லாமல் வீட்டுவாசற்படியின் மீது வைத்து இரவிலும் இன்றிபகலிலும் இன்றி மாலைப் பொழுதில் தன்மடி மீது கிடத்தி இரணியன் உடலை நகத்தால் பிளந்து கொன்றான்.

நரசிம்ம அவதாரத்தை முதலாழ்வார் மூவரும் திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை யாழ்வார் ஆகிய ஆழ்வார்களும் பாடியுள்ளனர். பொய்கையாழ்வார், நகத்தால் இரணியனது மார்பைக் கிழித்ததை,

"வடி உகிரால் ஈர்ந்தான் இரணியனது ஆகம்" [91]

என்றும் பூதத்தாழ்வார் அரக்கனின் வலிய நெஞ்சைக் கிழித்ததை,

"தானவனை வன்னெஞ்சம் கீண்ட" [92]

என்றும் பேயாழ்வார் நரசிம்ம உருவில் இரணியனை நகத்தால் கிழித்ததை

"அரி உருவமாகி இரணியனது
ஆகம் உகிரால் கீண்டான்"[93]

என்று உருவத்தைக் காட்சிப்படுத்தி பின் செயலையும் காட்சிப்படுத்தி சொல்லோவியம் படைக்கிறார்.

திருமழிசையாழ்வார், இறைவன் நரசிம்ம அவதாரத்தில் இரணியனின் மார்பைக் கீண்ட புராணத்தை,

"தானவனை வள்ளுகிரால் மார்பு இரண்டு
கூறாகக் கிறிய கோளரியை"[94]

என்றும் நரசிம்மத்தின் இயல்பையும் வடிவத்தையும் கூறி அதன் தோற்றத்தை பாடலைக் கேட்பவர் மனத்தில் காட்சிப் படமாய் விரியச்செய்யும் வகையில்,

"இவையா பிலவாய் திறந்து எரிகான்ற இவையா
எரிவட்டக் கண்கள் இவையா எரிபொங்கிக்காட்டும்
இமையோர் பெருமாள் அரிபொங்கிக் காட்டு மழகு"[95]

என்று காட்சிப்புல உருக்காட்சியாய் அமைத்துள்ளார்.

நம்மாழ்வார் நரசிம்ம அவதாரத்தைப் பாடும்போது நரசிம்மம் தோன்றிய சூழல், அதன் வடிவம் இரணியனின் மார்பைப் பிளந்த புராணச் செய்தி ஆகியவைகளை உள்ளடக்கி,

"அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே,
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்
உளந்தொட்டிரணிய னொண்மார்வகலம்
பிளந்திட்ட கைகள்"[96]

என்று வடிவம் செயல் என்று ஒன்றன்பின் ஒன்றாக அமைத்தளிக்கும் விதம் சிறந்த காட்சிப்புல உருக்காட்சியாய் அமைந்துள்ளது. பாடலைக் கேட்பவர் மனத்திரையில் நாடகக் காட்சிபோல் தோற்றம் பெறுகிறது.

இரணியனைக் கொன்ற விதத்தை பெரியாழ்வார்,

"உரம்பற்றி இரணியனை உகிர்நுதியால் ஒள்ளிய
மார்பு உறைக்க ஊன்றி சிரம்பற்றி முடியிடியக்
கண்பிதுங்க வாய் அலறத் தெழித்தான்"[97]

என்றும்,

"கோளரியின் உருவாய்கொண்டு அவுணன் உடலங்குருதி
குழம்பி எழக் கூர் உகிரால் குடைவாய்" [98]

என்றும் சொல்லோவியமாகப் படைத்துக் காட்டுகிறார்.

திருப்பாணாழ்வார்,

"பரியனாகி வந்து அவுணனுடல் கீண்ட" [99]

என்று ஒரேவரியில், இரணியனை நரசிம்மமாகி வந்து

மாய்த்த புராணத்தைக் கூறுகிறார், திருமங்கையாழ்வார்,

"இரணியனைப் பற்றி வாங்கி அங்கைவாள் உகிர்
நுதியால் அவனது ஆகம் அங்குருதி பொங்குவித்தான்" [100]

என்று ஓவியம் படைத்துள்ளார்.

### 12.5 வாமன அவதாரம்

பிரகலாதனின் பேரனான மகாபலி என்பவன் தவம் செய்து விஷ்ணுபக்தியும் தருமசிந்தனையும் எப்போதும் வழுவாதிருக்க வேண்டும் என்றும் மூவுலகையும் வென்று வாழ வேண்டும் என்றும் வரம் பெற்றான். பற்பல யாகங்களைச் செய்து தான் சகல உலகங்களையும் வெல்லத்தக்கவன் என்று செருக்குற்று ஒருவரையும் மதியாமல் திரிந்து கொண்டிருந்தான் சுவர்க்கத்தை ஆளவும் ஆசை கொண்டான். இந்திரன் முதலானோர் விஷ்ணுவிடம் முறையிட்டனர். மகாபலியை அடக்குவதற்காக விஷ்ணு கசயப முனிவருக்கும் அவர் மனைவி அதிதிக்கும் வாமனனாய் அவதாரம் செய்தார். மகாபலியாகம் நடத்திக் கொண்டிருக்கும் போது இதுவே தருணம் என்று கருதிய வாமனன் மகாபலியின் யாகசாலைக்குச் சென்றான், வாமனனின் அழகிய திருக்கோலத்தைக் கண்ட மகாபலி பெரு மகிழ்ச்சி கொண்டு உபசரித்து, வந்த காரியத்தைப் பணிவுடன் கேட்க, வாமனன், நான் தவஞ்செய்யப் போகிறேன். பிறர் நிலத்திலிருந்து தவஞ்செய்தால் பயனில்லை, ஆகையால் எனக்கு அறுதியாக என் காலால் மூவடி மண் தரவேண்டும் எனக்கு கேட்டான், மகாபலியும் இசைந்தான் வாமனனோ திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால்

பூமியையும் மற்றோரடியால் ஆகாயத்தையும் அளந்து மூன்றாவது அடிக்காக அவன் இசைவின்படி அவன் முடியிற் காலை வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினான். வாமன அவதாரத்தை முதலாழ்வார் மூவர். திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் பாடியுள்ளனர். வாமன அவதாரத்தைப் பொய்கையாழ்வார்.

"நீரேற்று மூவடியால் சென்று திசை அளந்த" [101]

என்றும் பூதத்தாழ்வார்

"குறள் உருவாய் மாவலியின் மண் கொண்டான்" [102]

என்றும் பேயாழ்வார்,

"வாமனனாய் மாவலிபால் மூவடிமண்
நீ அளந்து கொண்ட" [103]

என்றும் காட்சிப் படுத்துகின்றனர்.

வாமனனாய் வந்து மகாபலியிடம் மூன்றடி நிலம் கேட்டு, வானத்தையும் பூமியையும் திரிவிக்கிரமனாகி அளந்தமையை இரக்கம் இல்லாத செய்கையாக திருமழிசையாழ்வார்,

"இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கம் ஒன்றும்
இன்றியே பரக்க வைத்து அளந்து கொண்ட" [104]

என்ற பாசுர வரிகளில் அமைத்து காட்சிப்புல உருக்காட்சியோடு மனவுணர்வு கூறும் உருக்காட்சியையும் இணைத்துள்ளார்.

நம்மாழ்வார் வாமன அவதாரத்தைப் பாடும்போது,

"மணிக்காம்புபோல் நிமிர்ந்து மண்ணளந்தான்" [105]

என்று புதிய சொல்லாட்சியைப் பயன்படுத்திக் காட்சிப் படுத்துகிறார்.

பெரியாழ்வார், குறளுருவாய் வந்து உலகளந்த விந்தையை

"நெடுமையால் உலகு ஏழும் அளந்தாய்" [106]

என்று காட்சிப்படுத்துகிறார். மேலும் உலகளந்த புராணத்தைக் குறிப்பாக வைத்து அம்புலியிடம் கூறுவதாக, சிறியனென் றெண்ணிளஞ் சிங்கத்தை யிகழேல் கண்டாய் சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள் என்ற பாசுர வரிகளைக் காணும் போது உலகளந்த பெருமையில் இவரது நாட்டமும் வியந்த உள்ளமும் தெளிவாகிறது. உலகளந்த புராணத்தை ஆண்டாள்,

"அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகு அளந்த" [107]

என்றும்

"முற்ற மண்ணிடந்தாவி விண்ணுறக் கீண்டு அளந்து
விண்ணுற நீண்டு அடிதாவிய" [108]

என்றும் நடந்து முடிந்த நிகழ்ச்சியை மீண்டும் தன் சொற்களால் நாடகமாய் நிகழ்த்திக் காட்டுகிறார். திருப்பாணாழ்வார்,

"உவந்த உள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற" [109]

என்று உலகளந்த காட்சியைக் காட்சிப்படுத்துகிறார். திருமங்கையாழ்வார் அமரர்கள் குறைதீர்க்கக் குறளுருவாய்த் தோன்றி, மகாபலியிடம் மூவடி மண்வேண்டி இரந்து, திரிவிக்கிரமனாகி வளர்ந்து விண்ணும் மண்ணும் ஈரடியால் அளந்த புராணச் செய்தியை,

"மூவடி என்று இரந்திட்டு அண்டமும் இவ்வலைகடலும்
அவனிகளும் எல்லாம் அளந்த பிரான்" [110]

என்று காட்சிப்படுத்துகிறார்.

### 12.6 பரசுராமன்

உலகத்தில் எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத்திரிந்து கொடுமை இயற்றிவந்த சத்திரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்தற் பொருட்டு, மகாவிஷ்ணு ஜமதக்னி முனிவருக்கும் அவரது மனைவி ரேணுகைக்கும் இராமனாய் அவதரித்தார். பரசு என்னும் கோடாலிப் படையை ஆயுதமாகக் கொண்டதனால் பரசுராமன் என வழங்கப்பெற்றார் ஒரு நாள் கார்த்தவீரியார்ச்சுனனும் அவனது

மைந்தர்களும் ஜமதக்னியின் ஆசிரமத்தில் இளைப் பாறப்புகுந்தனர் அங்கே அம்முனிவனது ஹோமதேனு என்னும் பசு வேண்டிய பொருட்களை எல்லாம் மிகுதியாக அளித்துக் கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப்பசுவைக் கவர்ந்து சென்றனர். அம்முனிவரையும் கொன்றனர். இதன் காரணமாக பரசுராமன் கார்த்த வீரியார்ச்சுனனையும் அவனது மைந்தர்களையும் கொன்று சத்ரிய வம்சம் முழுவதும் அழிக்க முடிவு செய்து இருபத்தியொரு தலைமுறையை அழித்தான். பரசுராம அவதாரத்தை, நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய இருவரே பாடியுள்ளனர். நம்மாழ்வார், பரசுராமன் இருபத்தொரு தலைமுறை அரசு அழித்த புராணத்தை,

> "இருபத்து ஓர்கால் அரசுகளைக்
> கட்டவென்றி நீண் மழவர்" [111]

என்றும் திருமங்கையாழ்வார், கார்த்தவீரியார்ச் சுனனைக் கொன்றதை,

> "உலக முன்னாண்ட பாழியந்தோள் ஆயிரம்
> வீழப்படை மழு பற்றிய வலியோ" [112]

என்று காட்சிப்படுத்துகிறார்.

### 12.7 இராமாவதாரம்

இராவணன் என்ற அரக்கன் பிரம்மாவிடம் தேவர், கந்தருவர், ராட்சசர்களால் தனக்கு மரணமுண்டாகக் கூடாது என்று வரம் பெற்றான். அந்த வரத்தின் கர்வத்தால் அனைவரையும் அவமதித்தும் கொடுமை செய்தும் வந்தான். அவனது கொடுமையை முடிவுக்குக் கொண்டுவரத் தேவர்கள் விரும்பினர், மகாவிஷ்ணுவைச் சரணடைந்தனர். அவன் அமரத்துவம் கேட்டுப் பெற்ற வரத்தில் மனிதனால் தனக்கு மரணமில்லை என்று கேட்கப்படவில்லை ஆகையால் மகாவிஷ்ணு மனிதப் பிறவி எடுத்து மக்களைக் காக்க முடிவு செய்தார். எனவே தசரத மகாராஜனின் மூன்று மனைவியரின் கர்ப்பத்தில் நான்கு குழந்தைகளாக அவதரித்தார். இதுவே ராமா வதாரத்தின் நோக்கமாகும். இராமாவதாரத்தை முதலாழ்வார் மூவர், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார்,

பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆகிய பதினொரு ஆழ்வார்களும் பாடியுள்ளனர்.

பொய்கையாழ்வார் சீதையைச் சிறைவைத்த இராவணனை ராமன் அழித்ததை நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான் முரண் அழிய என்று காட்சிப்படுத்திக் காட்டுகிறார் பூதத்தாழ்வார்.,

"தென்னிலங்கை நீறாக எய்து அழித்தாய்" [113]

என்று பாடலைக் கேட்பவர் மனத்திரையில் இலங்கை எரிந்து சாம்பலான நிகழ்ச்சி தோன்றும்படி காட்டுகிறார். பேயாழ்வார்

"எய்ததுவும் தென்னிலங்கைக் கோன்வீழ" [114]

என்று இராமனின் பாணங்களின் வலிமையும் இலங்கை யரசன் வீழ்ச்சியையும் புலப்படுத்திக் காட்டியுள்ளார்.

திருமழிசையாழ்வார் இராமனின் வெற்றியை உவந்து,

"இலங்கை மன்னன் ஐந்தொரு ஐந்து பைந்தலை
நிலத்துக் கலங்க அன்று சென்று கொன்று
வென்றி கொண்ட வீரனே" [115]

என்று இராவணனின் பத்துத் தலைகள், இலங்கை நகர் போரில் சிதைந்தது, இராமன் போருக்குச் சென்றது, இலங்கை அரசனைக் கொன்றது பின் வெற்றிகொண்டது ஆகிய செய்திகள் ஒவ்வொன்றாக மனத்திரையில் ஓவியம் போல் பதியும் வண்ணம் படைத்துள்ளார். நம்மாழ்வார் இராமனது வலிமையை,

"வல்லரக்கன் இன்னுயிரை வாழாவகை வலிதல் நின்வலியே" [116]

என்று வலிமையை காட்சிப் படுத்துகிறார்.

குலசேகராழ்வார் இராமன் இலங்கையை அழித்தன்மையை,

"வளைய ஒருசிலை யதனால் மதில் இலங்கை அழித்தவனே" [117]

என்று இராமனின் வில்வலியையும் இலங்கையின் அரண்வலிவையும் காட்டி வலுவான இலங்கையை அழித்த

இராமனின் வீரத்தையும் ஒற்றை பாசுரவரியால் உணர்த்துகிறார். பெரியாழ்வார்,

> ...இராக்கதர் வாழ் இலங்கை பாழாளாகப் படை
> பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே [118]

என்று இலங்கை சென்று போரிட்டு அழித்ததையும், பரசுராமனின் வலியடக்கிய விதத்தையும்,

> என்வில்வலி கொண்டு போவென்று எதிர்வந்தான்
> தன் வில்லினோடும் தவத்தை எதிர் வாங்கி [119]

என்று சொல்லோவிய மாக்குகிறார்.

ஆண்டாள், இராமன் இராவணனைக் கொல்லும் காட்சியை,

> மாதலி தேர்முன்பு கோல் கொள்ள
> மாயன் இராவணன் மேல்
> சரமாரிதாய் தலை அற்று அற்று
> வீழத் தொடுத்த தலைவன் [120]

என்ற பாசுர வரிகளில் இராவணனின் பத்து தலைகளும் இராமபாணத்தால் அற்று விழும் காட்சி நாடகம் போல் மனத்திரையில் காட்சிப்படுத்த வல்லதாய் உள்ளது. தொண்டரடிப் பொடியாழ்வார், இராமன் கடலில் அணைகட்டி இலங்கை சென்று இராவணனை அழித்ததை,

> ஒரு வில்லாலோங்கு முந்நீர் அடைத்துல கங்களுய்ய
> செருவிலே யரக்கர் கோனைச் செற்ற நம் சேவனார் [121]

என்று சொல்லோவியம் படைக்கிறார்.

திருப்பாணாழ்வார்

> சதுரமா மதிள்சூழிலங்கைக் கிறைவன் தலைபத்து
> உதிரவோட்டி ஓர் வெங்கணை யுய்த்தவனோத வண்ணன் [122]

என்று இரண்டு வரிகளில் இலங்கையின் அமைப்பு, இராவணன் பத்து தலைகள் கொண்ட உருவம், இராம பாணத்தின் சிறப்பு அதனை எய்த இராமனின் நிறம் ஆகிய அனைத்துச் செய்திகளையும் கொடுத்து ஒரு தெளிவான நாடகக் காட்சியையும் கேட்பவர் மனத்திரையில் தோன்றும்

படி அமைந்துள்ளார்.

**திருமங்கையாழ்வார்**

> இலங்கை வாள் அரக்கர் தலைவன்
> தலைபத்து அறுத்து உகந்தான் [123]

என்று இராமனின் வலிமையையும் இராவணனின் பத்து தலைகளை அறுத்த பலராம அவதாரம் குறிப்பிட்டு காட்சிப்புல உருக்காட்சியாய் அமைத்துள்ளார். பலராமன் அவதாரத்தை, பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய இருவரும் பாடியுள்ளனர்.

பலராமர் கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணனுக்குத் தமயனாகப் பிறந்தவர். இவர் ஆதிசேஷனின் அவதாரம் என்று கூறப்படுகிறது. ராமாவதாரத்தில் ஆதிசேஷனது அம்சமாகத் தோன்றிய லட்சுமணன் தனக்குச் செய்த அரிய பணி விடைக்கு உவந்து ஸ்ரீமந் நாராயணன் ஆதிசேஷனை நோக்கி மற்றோரவதாரத்தில் உமக்கு நான் தம்பியாகப் பிறந்து உம்மை பூசிப்பேன் என்று வரமளித்திருந்தார். கிருஷ்ணாவதாரம் எடுக்கும்போது ஆதிசேஷன் பலராமனாக வசுதேவருடைய முதல் மனைவியான ரோகிணியின் வயிற்றில் அவதரித்தார். இவரது ஆயுதம் கலப்பை ஆகும் இவரது அழகு

> வெள்ளிப் பெருமலைக்குட்டன் [124]

என்று அனுபவிக்கப்படுகிறது.

வெள்ளிப் பெருமலைக் குட்டன் என்று அவரது நிறத்தையும் உருவ அமைப்பையும் காட்சிப்படமாய் உணர்த்தி சொல்லோவியம் படைத்துள்ளனர்.

### 12.8 கிருஷ்ணாவதாரம்

துவாபர யுகத்தில் பிறந்த கம்சன், சிசுபாலன் முதலிய அசுரர்களின் கொடுமைகளைப்பொறுக்காத பூமிதேவியானவள் இவர்களை யழித்துத் தன்னைக் காக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ள திருமால் வசுதேவருக்கும் தேவகிக்கும் எட்டாவது மகனாக அவதரித்தார். கம்சவதம் நிகழ்ந்தது.

கிருஷ்ணாவதாரத்தை திருப்பாணாழ்வார் தவிர

பதினொரு ஆழ்வார்களும் பாடியனுபவிக்கின்றனர். கண்ணனின் பிறப்பு, தந்தையின் லிலங்கு ஒழித்தல் ஆயர் பாடியில் வளர்தல், பூதனையின் முலையுண்டு கொல்லுதல், சகடம் உதைத்தல், மண், வெண்ணெய், தயிர் ஆகியவற்றை உண்ணுதல், திருடுதல், அடிபடுதல், கட்டுண்ணுதல், கண்ணன் குறும்புகள், மருதமரம் இறுத்தல், கன்று மேய்த்தல், காளியன் மீது பாய்தல், நடனமாடுதல், தேனுகாசுரனைக் கொல்லுதல் நப்பின்னையை மணக்க ஏழு காளைகளை அடக்குதல், பின்னையை மணம்புரிதல், கேசியின் வாயைக்கீண்டது. கொக்கின் வாயைக் கிழிந்தது, கன்றினால் விளவெறிந்தது, குருந்தமரம் ஒசித்தல், இந்திரவிழா உண்ணுதல், மலை எடுத்து மழைதடுத்து ஆநிரைகாத்தல், குடக்கூத்து, மரக்கால் கூத்து குரவை பிணைந்து ஆடுதல், ஆயமகளிர் ஆடைகளைக் கவர்தல், வில் விழா அழித்தல், குவலயாபீடம் என்னும் யானையைக் கொல்லுதல், மல்லர்களைக் கொல்லுதல், கம்சனை கொல்லுதல், நரகன், முரன் ஆகியோரைக் கொல்லுதல் கற்பக மரம் கொணர்தல், சிவன் ஆகியோரை வெல்லுதல், வாணன் தோள்களை அறுத்தல், பௌண்டரக வாசு தேவனைக் கொல்லுதல், தந்த வக்ரனைக் கொல்லுதல், காண்டாவனத்தை எரி ஊட்டுதல், பாண்டவர்க்காக துரியோதனனிடம் தூது செல்லுதல், பேருருவம் கொள்ளுதல், பாரதப் போரில் பார்த்தனுக்குத் தேர் ஓட்டுதல், பாரதப் போரில் படை எடுத்தல், பாரதப் போரில் சங்கு ஊதுதல், இரவியை ஆழியால் மறைத்து சயத்திரதனைக் கொல்ல உதவுதல், கண்ணனும் பார்த்தனும் கண்ணனும் பாஞ்சாலியும் பஞ்சவர்க்கு அருளுதலும் நூற்றுவரை அழித்தலும் ஆகிய கிருஷ்ணாவதாரக் கதைகளை புராண உருக்காட்சிகளாக எடுத்தாள் கின்றனர்.

பொய்கையாழ்வார், கண்ணன் கம்சனை அழித்ததை,

'கடந்தது கஞ்சனை முன் அஞ்ச [125]

என்றும் பூதத்தாழ்வார்

கதவிக் கதஞ்சிறந்த கஞ்சனை முன் காய்ந்து [126]

என்றும் பேயாழ்வார்

*கஞ்சைக் கடந்தவன்* [127]

என்றும் சொல்லோவியம் படைக்கின்றனர்.

நப்பின்னையை மணக்க ஏழு எருதுகளை அடக்கிய செய்தியை திருமழிசையாழ்வார்,

*இடைக் குலங்கள் ஏழ் அடர்த்து வென்றிவேற்கண்*
*மாதரார் கடிக் கலந்த தோள் புணர்ந்த* [128]

என்ற பாசுர வரிகளில் காட்டுகிறார். முல்லை நில வழக்கப்படி கொல்லேறு தழுவல் பெண்ணின் திருமணத்திற்கு முன் நிகழ்வது. காளையை அடக்கிய ஒருவனே அப்பெண்ணை மணக்கத் தகுதியுடையவன் ஆகிறான். கண்ணன் நப்பின்னையை மணக்க ஏழு காளைகளை அடக்கி வெற்றிபெற்ற அந்தக் காட்சியை திருமழிசையாழ்வார் சொல்லோவிய மாக்கியுள்ளார்.

நம்மாழ்வார், கண்ணன் பூதனையின் முலையுண்டு அவளைக் கொன்ற விதத்தை,

*ஒக்கலை வைத்து முலைப்பால் உண்ணென்று*
*தந்திட வாங்கி செக்கஞ் செக அன்று அவன்பால்*
*உயிர் செகவுண்ட பெருமான்* [129]

என்று காட்சிப் படுத்துகிறார்.

தம் குருவான நம்மாழ்வாரையன்றி வேறு தெய்வமறியாத மதுரகவியாழ்வாரும் கண்ணனைப் பாடுகிறார். தான் அவதாரம் செய்யும் காலத்தில் தெய்வம் என்ற உணர்வை தானும்அடையாமல் மற்றவர்க்கும் உணர்த்தாமல் விளங்கிய தன்மையைச் சுட்டி கண்ணிகள் பலவுடைய கயிற்றினால் தன்னைக் கட்டும்படி செய்த அவன் மாயத்தை,

*கண்ணினுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்*
*பண்ணிய பெருமாயன்* [130]

என்று யசோதை உரலில் பிணித்த புராணக்கதையை சொல்லோவியமாக்குகிறார்.

குலசேகராழ்வார் கண்ணனின் லீலைகளை ஒரே பாசுரத்தில் அடுக்கிக் கூறுகிறார்.

குன்றினால் குடை கவித்ததும் கோலக் குரவை
கோத்ததும் குடமாட்டும் கன்றினால் விளவெறிந்ததும்
காலால் காளியன் தலைமிதித்ததும் [131]

என்று பலவகை லீலைகளைக் கூறி சொல்லோவியம் படைத்துள்ளார்.

பெரியாழ்வார், கண்ணன் வாணன் என்னும் அரக்கனின் ஆயிரந்தோள்களையும் அறுத்ததை,

மாயப் பொருபடை வாணனை ஆயிரந்தோளும்
பொழிகுருதி பாய சுழற்றிய [132]

என்று காட்சிப்புல உருக்காட்சியை அமைத்துள்ளார்.

இந்தப் புராணச் செய்திகளால் இறைவனின் அதிவிர அற்புதத் தன்மையானது, காட்சிப்புல உருக்காட்சியாகி படிப்பவர் மனத்தில் தீய சக்திகள் மாய்க்கப்படும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தி, பாதுகாப்புணர்வைக் கொடுக்கின்றது கண்ணனின் பிறப்பை,

மக்கள் அறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன்
வயிற்றில் சிக்கென வந்து பிறந்து நின்றாய் [133]

என்று தேவகியின் இழப்பையும், ஆறு குழந்தைகளைக் கல்லில் மோதிக்கொன்ற கம்சனின் கொடுந்தன்மையும் இடர்கள் தீர வந்து பிறந்த கண்ணனின் சிறப்பையும் ஒரே வரியில் அமைத்து (ஒரு நாடகக் காட்சி போல்) கேட்பவர் மனத்தில் விரியும் படி அமைத்துள்ளார். ஆண்டாள், கிருஷ்ணன் தேவகிக்கு மகனாகப் பிறந்து யசோதையிடம் வளர்ந்த கதையை,

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர [134]

என்று காட்சிப் படுத்துகிறார்.

தொண்டரடிப் பொடியாழ்வார், கண்ணன் குன்றெடுத்து ஆநிரைகளைகக்காத்த புராணத்தை,

மழைக்கன்று வரைமுனேந்தும் மைந்தனே [135]

திருமங்கையாழ்வார், பாரதப் போரில் கண்ணன் பார்த்தனுக்குத் தேர் ஒட்டிய வரலாற்றை,

பாரதத்து ஒருதேர் ஐவர்க்காய்ச்
சென்று இரங்கி ஊர்ந்து [136]

என்ற பாசுரவரிகளில் அமைந்து காட்சிப்புல உருக்காட்சியை அமைத்துள்ளார்.

**12.9 கல்கியவதாரம்**

கலிகாலத்தில் இறுதியில் அதர்மங்கள் மிகுந்து மனிதர்கள் குறைந்த வயது உடையவர்களாய், உடல் வளர்ச்சி குன்றி, வலிவு குறைந்து அழகும் தெளிவும் இழக்கப் போகிறார்கள். அற்பப்புத்திக்காரர்களாகவும் கல்வியற்றவர்களாகவும் ஆகப் போகிறார்கள். பாவிகள் எல்லையின்றிப் பெருகப் போகின்றனர். அப்போது நில மங்கை எம்பெருமானிடம் முறையிடுவாள். மகாவிஷ்ணு மீண்டும் அவதரிப்பார். குதிரையிலேறி கையில் பிடித்த கத்தியினால் போர் செய்து பாவிகளை அழிப்பார் என்பது கல்கியவதாரம் பற்றியக் கருத்து.

மற்ற அவதாரங்களைப் பற்றி பல ஆழ்வார்களும் பாடியனுபவிக்க கல்கி அவதாரத்தை திருமங்கை யாழ்வார் மட்டுமே பாடியுள்ளார். இறைவனின் பத்து அவதாரங்கள் பற்றிய புராணங்களை தனித்தனியாக பல்வேறு பாசுரங்களில் பாடிய திருமங்கையாழ்வார்,

மீனோ டாமை கேழலரி
குறளாய் முன்னு மிராமனாய்த்
தானாய்ப் பின்னு மிராமனாய்த்
தாமோ தரனாய்க் கற்கியும்
ஆனான் றன்னை, கண்ணபுரத்
தடியன் கலிய னொலி செய்த
தேனா ரின்சொல் தமிழ்மாலை
செப்ப பாவம் நில்லாவே [137]

என்று பத்து அவதாரங்களையும் ஒரே பாசுரத்தில் அமைத்துப் பாடுகிறார் இவற்றுள் மீன், பன்றி ஆகிய அவதாரங்கள் வித்யாவதாரங்கள் அதாவது சாத்திரங்களுக்குக் காரணமாக அமைந்தவையாகும். இராமன் கிருஷ்ணன் ஆகிய அவதாரங்கள் ஒழுக்கத்தைக் கடைபிடித்துக் காட்ட வந்தவையாகும் [138] என்று கூறுவர்.

இப்பிறப்புக்கள் சிலவற்றால் விளங்கும் இறைவனின் உயரியல்புகளாகச் சில தெரிவிக்கப்பட்டுள்ளன. பன்றி, ஆமை, மீன் முதலியன செயற்கை கடந்த தன் நிலை அழிய மாறி, விலங்குகளுக்கு நிகராக்கிக் கொண்டு, உலகைக் காத்த நீர்மையைக் காட்டுகின்றன என்றும் குறளாய் எல்லை நடந்து மகாபலியிடமிருந்து மண்ணை மீட்டது தன்னுடைமையைப் பெறுதற்குத் தானே இரப்பாளனாய் வருபவன் என்பதனைப் புலப்படுத்துகிறது [139] என்றும் திரிவிக்கிரமத்தோற்றம் ஆண்டவன் - அடிமை உறவினைத் தெரிவிக்கின்றது என்றும், இராமனாய்த் தோன்றி இராவணனை அழித்து அவனாலே துன்புற்ற உயிரினங்களைக் காத்தது இவ்வுலகிற்கு அவனே காப்பாளன் என்பதனை அறிவிக்கின்றது என்றும் கிருஷ்ணன் தூது நடந்தது அவன் அடியார்க்கு வயப்பட்டிருத்தலாகிய பண்பினை விளக்குகின்றது என்றும் குறிக்கப்படுகின்றன [140] இவ்வாறு பத்து அவதாரங்களைப்பற்றிய கருத்துக்கள் நிலவுகின்றன. இப்பத்து அவதாரங்களும் இறைவனுக்குப் புகழ் சேர்த்துள்ளன. இதற்குக் காரணம் தன்விருப்பத்தினால் பிறர் நலன் காப்பதற்காக ஏற்பட்டதால் ஆகும். பிறப்பு நிலையில் பெருமான் உலகினர்க்கு இணையான திருமேனியோடு தோன்றி, வழிபடுவோர்க்கு நற்சார்பாகவும் தன்னை வழியாகப் பற்றினோரைப் பிற பயன்களினின்றும் மீட்டு அவர்களுக்கு இன்பப் பொருளாகவும், மேலான இறையன்பு உடையார்க்கு எல்லாவித இன்பமுமாகவும் இருக்கிறான் [141] என்று இறைவனின் அவதாரப் பெருமை பேசப்படுகிறது.

## 13. புராண உருக்காட்சிகளுக்கான காரணங்கள்

### 13.1 காலச்சூழல்

ஆழ்வார்களது பாசுரங்களில் புராணங்கள் மட்டும் அல்லாமல் அவர்கள் காலத்து வரலாற்றுப் பதிவுகளும் காணப்படுகின்றன இதனால் பௌத்த, சமண சமயங்களின் ஆளுகை மிகுந்து இருந்த காலகட்டம் என்பதை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. இக்கருத்தை,

> வெறுப்பொடு சமணர் முண்டர்
> விதியில்சாக் கியர்கள் [142]

என்றும்

புலையற மாகி நின்ற
புத்தொடு சமண மெல்லாம் [143]

என்றும் தொண்டரடிப் பொடியாழ்வாரும்

அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர் [144]

என்று திருமழிசையாழ்வாரும் குறிப்பிடுவதிலிருந்து உணரலாம். எனவே புராணங்கள் அதிக அளவில் பாசுரங்களில் காணப்படுவதற்கு காலச்சூழல் ஒரு காரணமாகக் கருத இடமிருக்கிறது. மற்ற மதங்களின் தத்துவங்களை மறுத்துக் கூறி வைணவ மதக்கருத்துக்களை எடுத்துச் சொல்லவும், நாராயணனே பரம்பொருள் என்பதை மக்களுக்கு உணர்த்தவும் புராணக் கதைகளை கையாண்டிருக்கின்றனர் என்று உணரலாம்.

### 13.2 அறவியல் கோட்பாடு வலியுறுத்தல்

அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற அறக்கோட்பாட்டை வலியுறுத்தி துன்பப்பட்ட மக்கள் மனத்தில் நம்பிக்கையை ஏற்படுத்தி மக்கள் தீயவழியில் செல்லாமல் தடுக்கவும் புராணக் கதைகள் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். தீய சக்திகளை இறைவன் வேரறுப்பான் நல்லோர்களைக் காப்பான். இந்த நம்பிக்கையை மக்கள் மனத்தில் ஆழமாக நிறுவுவதற்கு இறைவனின் அவதாரங்களைப் பற்றியும் அவதாரகாலங்களில் நிகழ்த்திய அற்புதங்களையும் இறைவனின் அதிவீர அற்புதத் தன்மையையும் கூறும் புராணங்களைப் பயன்படுத்தினர் என்று அறியப்படுகிறது. உளவியல் அறிஞரான யுங் என்பவர் மனத்தை புறமுகத்தவை (Estrovert) அகமுகத்தவை (Introvert) என்றும் ஒருவனுடைய தனித்தன்மையைப் பொறுத்து அவற்றை மேலும் எட்டு பிரிவுகளாகவும் பிரித்தார். இம்மனத்திற்கு மனித இனத்திற்குப் பொதுவான ஒரு சுய நினைவற்ற பகுதியுண்டு இதுவே மனிதனின் மரபுரைக் கோவைக்கும் (Mythological) அண்டப்படைப்புக் கோட்பாட்டிற்கும் (Cosmological) வற்றாத ஒரு கருவூலமா, நனவிலியிலிருந்து எழும் மரபுரைக் கோவை எண்ணங்கள், கதைகள், பகற்கனவில் ஏற்படுவது போன்று ஈடுசெய்தாலோ

அல்லது வேட்கைத்தீர்வோ இல்லை. ஆனால், இது மனித இனத்திற்கே ஓர் அழியாத ஆழமான அர்த்தத்தைக் கொடுக்கிறது. இப்புராணப் பொருள் முன்னோக்குக் கொண்டதாகும் அதாவது, வாழ்க்கைப் போராட்டத்தில் காயமுற்ற மனித உள்ளத்திற்குத்தானே குணப்படுத்தும் அருமருந்தாக மட்டுமல்லாமல், எதிர்காலத்திற்குத் தகுந்தவாறு மனத்தை மாற்றியமைத்துக் கொள்ளவும் இது உதவி செய்கிறது.[145] என்பதற்கேற்ப புராணச் செய்திகளின் பயன்பாடு இலக்கியங்களில் இடம்பெறுகின்றன.

### 13.3 மனஈடுபாட்டை வளர்ப்பது

மக்களிடையே இறைவனைப்பற்றிய பலவகைப் புராணங்கள் கூறப்படுகின்றன. மக்கள் நன்மைக்காக இறைவன் பத்து அவதாரங்களை எடுத்தது, தீய சக்திகளை மாய்த்து நல்லோர்களைக் காத்தது ஆகியவை திரும்பத் திரும்பக் கூறப்படுவது மக்களின் மன ஈடுபாட்டை இறைநிலையிலிருந்து மாறாமல் வைப்பதற்காக என்று கருத இடமிருக்கிறது.

ஆழ்வார்கள் தங்கள் பாசுரங்களில் புராண உருக்காட்சிகளை அதிகமாகக் கையாண்டிருப்பது ஆழ்வார்களின் பிரபத்தி நெறியையும் தாண்டிய அவர்களது சமுதாய உணர்வை நமக்கு உணர்த்துகிறது.

### தொகுப்புரை

பன்னிரு ஆழ்வார்களும் அருளிச்செய்த பாசுரங்கள் பக்தியைப் பொருண்மையாகக் கொண்டவை. ஆழ்வார்கள் இறைவனை வழிபட வாத்சல்யபக்திநெறி, மதுரபக்திநெறி, நிஷ்காமிய பக்திநெறி ஆகிய மூன்று வகை அணுகுமுறைகளைக் கடைபிடித்துள்ளனர். ஆழ்வார்களது அணுகுமுறைகளுக்கேற்ப அவர்களது இலக்கிய நெறி அமைந்துள்ளது. இவ்விலக்கிய நெறிகளுக்கேற்ப பல்வேறு இலக்கிய வகைகள் தோற்றம் பெற்றுள்ளன.

ஆழ்வார்களது பிரபந்தங்களில் அந்தாதி வகை அதிகமாகக் காணப்படுகிறது. ஆசிரியம், விருத்தம், வெண்பா, கலிப்பா ஆகிய பாவகைகளில் பாடப்பட்டுள்ளன. ஆழ்வார்

பாசுரங்களில் புராண உருக்காட்சிகள் மிகுந்து காணப்படுகின்றன. இவ்வுருக்காட்சிகள் திருமாலின் பத்து அவதாரங்களையும், அவதாரகாலங்களில் நிகழ்த்திய அதிவீர அற்புதங்களையும் உள்ளடக்கியதாக உள்ளன.

ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார் தமது குருவான நம்மாழ்வாரைப் பற்றி மட்டுமே பாடியவர் பிரபந்த முதல் வரியில் கண்ணனைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். வேறு புராண உருக்காட்சியோ இறைவனைப் பற்றிய குறிப்போ காணப்படவில்லை. மற்ற ஆழ்வார்கள் கிருஷ்ணாவதாரத்தை அதிகம் பாடியுள்ளனர். குலசேகராழ்வார் இராமாவதாரம் கிருஷ்ணாவதாரம் ஆகிய இரண்டு அவதாரங்களை மட்டுமே பாடியிருக்கிறார். திருமங்கையாழ்வார் ஒருவரே பத்து அவதாரங்களையும் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆழ்வார்கள் புராண உருக்காட்சிகளை அதிக அளவில் கையாண்டிருப்பது சிந்திக்கத்தக்கதாக உள்ளது. இதற்கு ஆழ்வார்களின் பிரபத்திநிலை, பௌத்தமும் சமணமும் மேலோங்கியிருந்த அவர்களது காலச்சூழல், அறக்கோட்பாட்டை வலியுறுத்தும் நோக்கம், மக்களின் மன ஈடுபாட்டை இறைவன்பால் வளர்ப்பது போன்றவை காரணமாக இருக்கவேண்டும் என்று கருத்த இடமேற்படுகிறது.

## சான்றெண் விளக்கம்


1. ந.வீ. ஜெயராமன், பாட்டியலும் இலக்கிய வகைகளும் ப.9.
2. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கியக் கொள்கை ப.113
3. மேலது ப.7
4. மு.கா.ஆ. இளங்கோவின் இலக்கிய உத்திகள் ப.6
5. மேலது ப. 8
6. மேலது ப. 6
7. தே.லூர்து நாட்டார் வாழ்க்காற்றியல் ஓர் அறிமுகம் ப.124
8. ஸி.ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார், ஆழ்வார்கள் சரித்திரம் ப. 28
9. பி.ப அண்ணங்கராசாரியார் (உ.ஆ.) திருச்சந்த விருத்தம்

தீபிகையுரை ப.4

10. ஸி.ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார், ஆழ்வார்கள் சரித்திரம் ப.71

11. கி.ரா. அரங்கராஜன், நம்பிள்ளை உரைத்திறன் ப.71

12. உத்தமூர், வீரராகவாசார்யன் (உ.ஆ) பிரபந்தரக்ஷை எனும் உரையுடன் ப.3

13. மேலது ப.2

14. மேலது ப.3

15. மேலது ப.157

16. மேலது ப.171

17. மேலது ப. 171

18. கி.ரா. அரங்கராஜன் நம்பிள்ளை உரைத்திறன் ப.74

19. மேலது பக் 74, 75

20. குலசேகராழ்வார், பெருமாள்திருமொழி 2-2

21. ச.வே.சுப்பிரமணியன் தமிழ் இலக்கியவகையும் வடிவும், ப. 384

22. பி.ஸ்ரீ. பகவானை வளர்த்த பக்தர் 54

23. திருவரங்கத்தமுதனார், இராமானுச நூற்றந்தாதி பா15

24. மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலை பா. 18

25. நம்மாழ்வார், திருவாய்மொழி 4-5-1

26. மேலது 8-3-1

27. மயிலைமாதவதாஸன் (ப.ஆ.) திருப்பாவை வியாக்யானஸ், பக். 294, 295, 324, 327, 329, 336, 337

28. பெரியவாச்சான்பிள்ளளை, நாச்சியார்திருமொழி வியாக்யானம் ப.187

29. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும் ப.94

30. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 10-4-4
31. மேலது 10-5-1
32. மேலது 3-8-8
33. ஆண்டாள் நர்சியார் திருமொழி 2-3
34. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும் ப. 95
35. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 1-5
36. புலியூர்கேசிகன் (உ.ஆ) நற்றிணை ப. 191-2-3
37. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ) அகநானூறு 181-19-20
38. உய்யக்கொண்டார் நாலாயிரதிவ்வியப்ரபந்தம் தனியன்
39. ஆண்டாள் நாச்சியார்திருமொழி ப.1
40. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவம் ப. 193
41. தொல் பொருள் 3
42. ச.வே. சுப்பிரமணியன் மு.கா.னூ. ப. 96
43. ந.வீ. ஜெயராமன் பாட்டியலும் இலக்கிய வகைகளும் ப. 365
44. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 5-1
45. மேலது 5-3
46. மேலது 4-3
47. மேலது 8-5
48. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-4-1
49. மேலது 4-4-7
50. மேலது 6-1-1
51. மேலது 6-1-6
52. மேலது 6-1-10

53. வை.மு. கோபாலகிருஷ்ணமாசார்யார் (உ.ஆ) அஷ்டபிரபந்தம் இரண்டாம் தொகுதி ப.3

54. பி.ப. அண்ணங்கராசாரியார் (உ.ஆ) திருமாலைதீபிகையுரை ப.4

55. மேலது ப.4

56. கொமாண்டூர் அனந்தாசாரியார் (ப.ஆ.) தேசிகப்பிரபந்தம், அதிகாரசங்கிரகம் ப.1

57. மு.வரதராசன், காலந்தோறும் தமிழ் ப.94

58. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 2-2-1

59. ஆண்டாள், திருப்பாவை ப.17

60. மேலது ப.20

61. மேலது ப.21

62. நம்மாழ்வார், திருவாய்மொழி 9-2-3

63. ந.வீ. ஜெயராமன் பாட்டியலும் இலக்கிய வகைகளும் ப.341

64. உத்தமூர் வீரராகவாசாரியன் (உ.ஆ) பிரபந்தரஷை எனும் உரையுடன் ப.1

65. நம்மாழ்வார், திருகுறுந்தாண்டகம் பா.4

66. மேலது பா.5

67. பெரியவாச்சான்பிள்ளை (உ.ஆ) திருநெடுந்மதாண்டகம் வியாக்யானம் ப.104

68. அன்னிதாமசு, யாப்பு = பாட்டியல், தமிழ் இலக்கிய கொள்கை 2 ப.147

69. மு. அருணாசலம் தமிழ் இலக்கிய வரலாறு 10-ம் நூற்றாண்டு ப. 314

70. ந.வீ. ஜெயராமன் பாட்டியலும் இலக்கிய வகைகளும் ப. 271

71. நச்சினார்க்கினியர் (உ.ஆ) கலித்தொகை 147 58-60

72. திருமங்கையாழ்வார், சிறியதிருமடல்

73. மு.கா.ஆ. பெரியதிருமடல்

74. நம்மாழ்வர், திருவாய்மொழி 5-3-9

75. மேலது 5-3-10

76. சுவாமிசித்பவானந்தர் (உ.ஆ) பகவத்கீதை ப.241

77. புலவர் குழந்தை (தொ.ஆ) நீதிக்களஞ்சியம் ஔவையார், வாக்குண்டாம் ப. 867

78. திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 6-6-2

79. மேலது 9-1-3

80. திருமழிசையாழ்வார், திருச்சந்தவிருத்தம் ப.14

81. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 11-4-2

82. மேலது 8-8-2

83. பொய்கையாழ்வார், முதல்திருமொழி ப.25

84. பூத்தாழ்வார், மூன்றாம் திருமொழி ப. 54

85. பேயாழ்வார், மூன்றாம் திருமொழி ப. 54

86. திருமழிசையாழ்வார், திருச்சந்த விருத்தம் ப. 48

87. நம்மாழ்வார், திருவாய்மொழி 7-5-5

88. பெரியாழ்வார், பெரியாழ்வார்திருமொழி 5-1-5

89. ஆண்டாள், நாச்சியார்திருமொழி 11-8

90. திருமங்கையாழ்வார், முதல்திருமொழி 7-8-4

91. பொய்கையாழ்வார் முதல் திருமொழி ப. 17

92. பூதத்தாழ்வார், இரண்டாம்திருமொழி ப.95

93. பேயாழ்வார் மூன்றாம் திருமொழி ப.42

94. திருமழிசையாழ்வார், நான்முகன் திருவந்தாதி ப.18

95. மேலது ப.21

96. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-6-9

97. பெரியாழ்வார், பெரியாழ்வார்திருமொழி 4-3-8

98. மேலது 1-5-2

99. திருப்பாணாழ்வார், அமலனாதிபிரான் ப.8

100. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 6-6-4

101. பொய்கையாழ்வார், முதல்திருவந்தாதி ப.2

102. பூதத்தாழ்வார், இரண்டாம், திருவந்தாதி ப.99

103. பேயாழ்வார், மூன்றாம் திருவந்தாதி ப. 18

104. திருமழிசையாழ்வார், திருச்சந்தவிருத்தம் ப. 32

105. நம்மாழ்வார், பெரியதிருவந்தாதி ப.62

106. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 5-1-4

107. ஆண்டாள், நாச்சியார் திருமொழி ப.17

108. மேலது 2-9

109. திருப்பாணாழ்வார், அமலனாதிபிரான் ப.2

110. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 3-10-5

111. நம்மாழ்வார், திருவாய்மொழி 6-2-10

112. திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 10-9-7

113. பூதத்தாழ்வார், இரண்டாம்திருமொழி ப.29

114. பேயாழ்வார், மூன்றாம் திருமொழி ப. 52

115. திருமழிசையாழ்வார், திருச்சந்தவிருத்தம் ப. 56

116. நம்மாழ்வார், பெரியதிருவந்தாதி ப.11

117. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி 8-9

118. பெரியாழ்வார், திருப்பல்லாண்டு ப.3

119. மு.கா.ஆ. பெரியாழ்வார் திருமொழி 3-9-2

120. ஆண்டாள், நாச்சியார் திருமொழி 5-3

121. தொண்டரடிப்பொடியாழ்வார், திருமாலை ப.11

122. திருப்பாணாழ்வார் அமலனாதிபிரான் பா.4

123. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 1-5-1

124. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி 1-7-5

125. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி ப.89

126. பூதத்தாழ்வார், இரண்டாம் திருவந்தாதி ப. 89

127. பேயாழ்வார், மூன்றாம் திருவந்தாதி ப. 34

128. திருமழிசையாழ்வார், திருச்சந்தவிருத்தம் ப.92

129. நம்மாழ்வார், திருவாய்மொழி 1-9-5

130. மதுரகவியாழ்வார், கண்ணி நுண்சிறுத்தாம்பு பா.1

131. குலசேகராழ்வார், பெருமாள்திருமொழி 7-9

132. பெரியாழ்வார், திருப்பல்லாண்டு ப.7

133. மு.கா.ஆ. பெரியாழ்வார்திருமொழி 5-3-2

134. ஆண்டாள் திருப்பாவை ப.25

135. தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை ப. 36

136. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி 7-3-4

137. மேலது 8-8-10

138. தெ. ஞானசுந்தரம், வைணவ உரைவளம் ப. 294

139. மேலது ப. 295

140. மேலது ப. 295

141. மேலது ப. 296

142. தொண்டரடிப்பொடியாழ்வார், திருமாலை ப.7

143. மேலது ப.8

144. திருமழிசையாழ்வார், நான்முகன்திருவந்தாதி ப.6

145. வை. சச்சிதானந்தன், ஒப்பிலக்கியம் (ஓர் அறிமுகம்) ப.216

முடிவுரை :

ஆழ்வார் பாசுரங்கள் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரை தோன்றிய பன்னிரு ஆழ்வார்களால் பாடப்பெற்றவை. சமணமும் பௌத்தமும் செல்வாக்குப் பெற்று அறநூற் கருத்துக்கள் வேரூண்றிவிட்டபின் சங்ககால கருத்துக்கள் முற்றிலும் திரும்பியும் வராமல் அழிந்தும் விடாமல் பக்திக் காலத்திற்கு சிறிது மடை மாற்றம் செய்யபெற்றன. அது போலவே உருக்காட்சி என்னும் உத்தியும் பக்திப்பாடல்களில் பெருவளம் பெற்றது. ஆழ்வார் பாசுரங்களில் உருக்காட்சிகள் அமைந்து அவர்களது மனஉணர்வை வெளிப்படுத்துகின்றன.

இலக்கியப் படைப்பின் இன்றியமையா உறுப்பாகவும் உணர்த்து முறை உத்தியாகவும் உருக்காட்சிக் கோட்பாடு விளங்குகிறது. இக்கோட்பாடு உலக இலக்கியங்கள் அனைத்திலும் காணப்படுகிறது. தமிழ் இலக்கியங்களில் சங்ககாலந் தொட்டே உருக்காட்சிகள் இடம் பெற்றிருப்பது மட்டுமன்றி அவை அனுபவிக்கப்பட்டும் வந்துள்ளன.

தொல்காப்பியர் கூறும் செய்யுளுறுப்புகளுள் புலன் என்னும் உறுப்பே உருக்காட்சி எனக் கருதலாம். கண்ட ஒரு பொருளைக் கொண்டு காணாத பொருளை உணர்த்தும் உவமையும், உவமையின் செறிந்த நிலையான உருவகமும் பிறிதுமோர் பொருள் கொளக்கிடக்கும் இயல்புடையனவாய் உள்ளுறை யுவமமும், இறைச்சியும் விளங்குகின்றன. கவிஞன் தான் கூறவரும் பொருளைப் புறத்தே புலப்படாத வகையில் வருணனை போல் அமைத்துப் பாடலைப் படிப்போர் தாமே அப்பொருளை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு அமைத்து தன் கருத்தை புலப்படுத்துகிறான். படைக்கும் சூழலில் படிப்பவனை ஒன்றும்படியும் செய்கிறான். இவ்வகை உத்தியே உருக்காட்சி, தொல்காப்பியர் கூறும் புலன் என்னும் செய்யுளுறுப்பு புலப்பாட்டு நெறியை உணர்த்துவதால், உருக்காட்சியை புலன் என்னும் உறுப்பில் அடக்கலாம்.

ஆழ்வார்கள் தங்கள் மனத்தை உள்முகமாகத் திருப்பி இறைவனைக் கண்டு அனுபவித்தனர். அவ்வாறு பெற்ற

இறையனுபவத்தை உற்றது உற்றவாறு பாசுரங்களாய் மொழிந்தனர்.

பாசுரத்தைக் கேட்டவுடன் கேட்பவர் மனத்திரையில் ஓவியமாக விளங்குவதற்கு, ஒலி, ஒளி, மணம், நுகர்வுப் பொருட்கள், ஊற்றுப்புல உணர்வுகளைக் காட்டும் சொற்கள் ஆகியவை முன் நிற்கின்றன.

இவை தவிர மனவுணர்வு உருக்காட்சிகளும் ஆழ்வார்களது அனுபவங்களை நமக்கு உணர்த்துகின்றன. இறைவனது பெருமையையும், உருவ எழிலையும் இறைவனின் தன்மையையும் அவன் குடிகொண்டிருக்கும் திவ்விய தேசங்களின் நகர்வளம், மலைவளம் ஆகியவற்றையும் இறைவனை உணர்ந்து அனுபவிக்கும் வழிமுறைகளையும் ஆழ்வார்கள் நமக்குக் காட்டுகின்றனர். மனிதர்கள் எதையும் முதலில் புலன்களின் வழியாகவே உணர்வர் என்பதனால் ஆழ்வார்கள். தங்கள் இறையனுபவத்தைப் புலன்களின் அடிப்படையில் படைத்துள்ளனர்.

கதிரவன், நிலவு, பிறை, மேகம், மலை, மழை, வித்து, முளை, கொழுந்து, மலர், பால், கன்னல், அமுது, மருந்து, நஞ்சு ஆகியவற்றைக் கொண்டு இறைவனின் நிறம், உருவம், அங்கங்கள், தன்மை, சிறப்பு ஆகியவை உணர்த்தப்பட்டுள்ளன. வான் அருவி மழை ஒலி யானை, குரங்கு, மலர்கள் போன்றவற்றால் இறைவன் உறையும் நகர்வளம், மலைவளம் சிறப்பு போன்றவையும் காலைப்பொழுது, பகற்பொழுது, இரவுப்பொழுது ஆகியவையும், பறவை, விலங்கு, மலர், உணவுப் பொருட்கள் போன்ற கருப்பொருட்களும் ஐம்புலனடிப்படையிலான உருக்காட்சிகளால் உணர்த்தப்பெற்றுள்ளன.

கண்ணனின் குறும்புகள், குழலிசைச் சிறப்பு, தோற்றம், தொல்லையின்பத்தின் இறுதிகண்ட அசோதையின் மனவுணர்வு, கண்ணனைப் பெற்ற தாயாக இருந்தும் அவன் பிள்ளைமைக் குறும்புகளை அனுபவியாத தேவகியின் மனவுணர்வு, ஆழ்வார்கள் இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும் கொண்டு காதல் மீதூரப் பெற்றநிலையில்

கொண்ட மனவுணர்வு ஆகிய உணர்வுகள் கூறப்பெற்றுள்ளன.

ஆழ்வார்கள் மனத்தை உள்முகமாகத் திருப்பி எவ்வாறு யோகப் பயிற்சியை அடைந்தனர் என்றும், அம்மனப்பயிற்சியினால் இறைவனை உணர்ந்த விதத்தையும் மனவுணர்வு உருக்காட்சிகளாகக் கூறி, இப்பாசுரங்களைக் கேட்பவர்களும் அம்மனத்தைப் பெற முயலும் விதத்தில் அமைத்துள்ளனர். ஒருமுகப்பட்ட மன உணர்வால் மட்டுமே இறைவனை உணரமுடியும் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்களில் அமைந்த மன உணர்வுக் காட்சிகள் புலப்படுத்துகின்றன.

ஆழ்வார்களின் உருக்காட்சிகள், நிலம், பொழுது என்ற முதற்பொருளும், உணவு, மலர், புள், பறை, விலங்கு, மரம் போன்ற கருப்பொருளும், இருத்தல், இரங்கல், ஊடல், கூடல், பிரிவு போன்ற உரிப்பொருளும் தோன்றுமாறு அமைந்துள்ளன. இப்பாசுரங்களைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் ஆழ்வார்கள் அடைந்த அனுபவங்களை அடைந்தாற் போன்ற உணர்வை ஏற்படுத்த வல்லனவாய் உள்ளன.

ஆழ்வார் பாசுரங்களில் ஐம்புல உருக்காட்சிகளைவிட மனவுணர்வு உருக்காட்சிகள் மிகுந்து காணப்படுகின்றன. புராண உருக்காட்சிகளும் மிகுந்து காணப்படுகின்றன. இவ்வுருக்காட்சிகள் திருமாலின் பத்து அவதாரங்களையும், அவதார காலங்களில் நிகழ்த்திய அதிவீர அற்புதங்களையும் உள்ளடக்கியதாக உள்ளன. ஆழ்வார் பாசுரங்களில் மனஉணர்வு உருக்காட்சிகளும், புராண உருக்காட்சிகளும் அதிகமாக இடம்பெற்றிருப்பதற்கு அவர்களது பக்தி நெறியும், பிரபத்திநெறியும் காரணமாக இருப்பினும் அதையும் தாண்டி அவர்களது சமுதாய உணர்வும் காரணம் என்று துணியலாம். ஆழ்வார்கள் புராண உருக்காட்சிகளை அதிகமாக கையாண்டிருப்பதற்கான காரணங்களாக, பௌத்தமும், சமணமும் மேலோங்கியிருந்த அவர்களது காலச்சூழல் அறக்கோட்பாட்டை வலியுறுத்தும் நோக்கம், மக்களின் மன ஈடுபாட்டை இறைவன்பால் வளர்ப்பது போன்றவை காரணமாக இருக்கவேண்டும் என்று கருதஇடம் ஏற்படுகிறது.

# நூற்பட்டியல்

## 1. முதனிலை ஆதாரங்கள்

### (அ) திவ்வியப்பிரபந்தப் பதிப்புகள்


அண்ணங்கராசாரியர் பி.ப., (ப.ஆ) நாலாயிரதிவ்வியப் பிரபந்தம், கிரந்தமாலா ஆபிஸ், சின்னக்காஞ்சிபுரம் 1960

கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள் பி. (ப.ஆ) நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் கோல்டன் எலக்ட்ரிக் பிரஸ், சென்னை 1922.

கிருஷ்ணமாசாரியார் சே (ப.ஆ) நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் சக்ஸஸ் அச்சுக்கூடம், சென்னை, ருத்ரோத்காரி, (1923-1924)

ஸ்ரீ நிவாசராகவாசாரியார் (ப.ஆ) நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் திருமகள் விலாச அச்சியந்திர சாலை, சென்னை, விபவ (1928-29)

கோபாலாசார்யஸ்வாமி, கரப்பங்காடு திருக்கச்சி நம்பிதாஸர் கா.வெ. (ப.ஆ நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் திருமகள் விலாச அச்சகம் சென்னை 1959

கோவிந்தராஜ ஐயங்கார் திருநாராயணபுரம் (ப.ஆ) நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை 1903

மாதவதாசன், மயிலை (ப.ஆ) நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் மணலி லக்ஷ்மண

முதலியார், ஸ்பெஸிபிக் எண்டோமெண்ட்ஸ், சென்னை 1962.

ராஜம் எஸ்., (வெ.ர்) — திவ்வியப்பிரபந்தம் முதலாயிரம், பெரியதிருமொழி, இயற்பா, திருவாய்மொழி தனித்தனி நான்கு பகுதிகள், மர்ரே அன்டு கம்பெனி சென்னை 1955, 1956

வேங்கடசாமி ரெட்டியார் கி. (ப.ஆ) — நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை 1973

**(ஆ) திவ்வியப்பிரபந்தம் உரைகள்**

பெரியவாச்சான் பிள்ளை (உ.ஆ) — **திருநெடுந்தாண்டகம் வியாக்யானம்** பி.ப. அண்ணங்கராச்சாரியார் பதிப்பு, காஞ்சிபுரம் 1970

**நாச்சியார் திருமொழி வியாக்கியானம்** எஸ். கிருஷ்ணசாமி, திருச்சி (1954 - 55)

மாதவதாசன், மயிலை — திருப்பாவை வியாக்கியானங்கள் திருவருளகம், சென்னை 1954

**வீரராகவாசார்யன், உத்தமூர் (உ.ஆ)** — திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி பிரபந்தரக்ஷை

என்னும் உரையுடன் விசிஷ்ட்டாத்வைத பிரசாரிணிசபா, 7, நாதமுனி தெரு, தி.நகர், சென்னை 17 1971

” — திருவாய்மொழி, பிரபந்தரக்ஷை என்னும் உரையுடன் விசிஷ்ட்டாத்வைத பிரசாரிணி சபா, 7, நாதமுனி தெரு, தி.நகர், சென்னை 17, 1976

வீரராகவாசார்யன் உத்தமூர் — திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரிய திருமடல், பிரபந்தரக்ஷை என்னும் உரையுடன் விசிஷ்ட்டாத்வைத பிரசாரிணி சபா, 7, நாதமுனி தெரு, தி.நகர், சென்னை - 17. 1975

### *11. துணை நூல்கள்*

அரங்கராஜன் கி.ரா., — நம்பிள்ளை உரைத்திறன், அமுதநிலையம் லிமிடெட், 46, இராயப்பேட்டை ஹைரோடு, சென்னை 600 014. 1986

அருணாசலம் மு — தமிழ் இலக்கிய வரலாறு 10-ஆம் நூற்றாண்டு காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம். 1969

அழகிய நம்பிதாசர் — குருபரம்பரை திருஞானமுத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி 1968.

அறவாணன் க.ப. — கவிதையின் உயிர் உள்ளம் உடல், தமிழ்க் கோட்டம், 11, இரண்டாம் தெரு, மோகன் நகர், புதுச்சேரி. 1976.

அன்னிதாம சு. — யாப்பு - பாட்டியல், இலக்கியக் கொள்கை - 2, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை - 20

அனந்தராமையர் இ.வை., (ப.ஆ — கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பதிப்பு - 2, 1984.

அனந்தாசாரியார், கொமாண்டூர் (ப.ஆ) — தேசிகப்பிரபந்தம் திருமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை. 1940

ஆசார்ய பி.ஸ்ரீ., — பகவானை வளர்த்த பக்தர், கலைமகள் காரியாலயம், சென்னை 1952.

இராகவையங்கார் மு., — ஆழ்வார்கள் காலநிலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம் 1981.

” — இலக்கிய சாசன

| | |
|---|---|
| | வழக்காறுகள், பாரி நிலையம் சென்னை, 1964. |
| இராதாகிருஷ்ணன், சர்வபள்ளி (ப.ஆ) | கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் இயல் வரலாறு, தொகுதி - 1, அண்ணாமலைப்பல்கலைக் கழகம், 1970 |
| இராமலிங்கத்தம்பிரான் | **தண்டியலங்காரம்,** சுப்பிரமணிய தேசிகர் உரை, கழக வெளியீடு, சென்னை 1966. |
| இளம்பூரணர் (உ.ஆ) | **தொல்காப்பியம், பொருளதிகாரம்,** திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை - 1. 1977 |
| ” | **தொல்காப்பியம் பொருளதிகாரம்** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை - 1. 1919 |
| இளவரசு சோம | நன்னூல் விருத்தியுரை, அண்ணாமலைப்பல்கலைக் கழகம், முதல்பதிப்பு - 1981. |
| எதிராஜராமானுஜதாசன் | குருபரம்பரை வைபவம், ஆழ்வார்கள் அமுத நிலயம், சென்னை - 2. 1982 |
| கம்பன் கழகம் (வெ.ர்) | **கம்பராமாயணம்** |

| | |
|---|---|
| | கழக வெளியீடு, சென்னை 1976. |
| கனகசபாபதி சி | சி.சு. செல்லப்பா தமிழ் இலக்கிய விமர்சனம், தமிழில் இலக்கிய விமர்சனம், சென்னை, எழுத்து பிரசுரம் 1974 |
| கேசிகன், புலியூர் (உ.ஆ) | நற்றினை, பாரிநிலையம், 184, பிராட்வே, சென்னை 1980. |
| குழந்தை புலவர் (தொ.ஆ) | நீதிக்களஞ்சியம் இளங்கோ புத்தக சாலை, புத்தக வியாபாரிகள், ஈரோடு, 1962. |
| கோபாலகிருஷ்ணமாசாரியார் வை.மு., | அஷ்டபிரபந்தம் இரண்டாம் தொகுதி, வை.மு.கோ. கம்பெனி, சென்னை. 1971. |
| கோவிந்தராச முதலியார் கா.ரா. | ஆழ்வார்கள் வரலாறு II திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், திருநெல்வேலி முதற்பதிப்பு 1949 |
| சச்சிதானந்தன். வை | ஒப்பிலக்கியம் (ஓர் அறிமுகம்), ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ், சென்னை 1985 |
| சாமிநாதையர். உ.வே., | குறுந்தொகை ஸ்ரீதியாகராசவிலாச |

| | |
|---|---|
| | வெளியீடு, நான்காம் பதிப்பு 1962. |
| சாயபு மரைக்காயர். மு., | இனிக்கும் இலக்கியம், வானதி பதிப்பகம், 13, தீனதயாளு நகர், சென்னை 17. |
| சித்பவானந்தர். சுவாமி. (ப.ஆ) | திருவாசகம், தபோவனப் பிரசுராலயம், திருப்பராய்த் துறை, 1968. |
| சித்பவானந்தர். சுவாமி (உ.ஆ) | ஸ்ரீ மத்பகவத் கீதை, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த் துறை, திருச்சி 1983 |
| சீனிவாசன் மா.பெ., | வைணவ இலக்கிய வகைகள், தேவகி பதிப்பகம், 10, திருவாய்மொழித்தெரு, புதூர்சாலை, செந்தமிழ் நகர், சிவகங்கை - 623560. 1994. |
| சுந்தரசண்முகனார் | நூல்தொகுப்புக்கலை பாரிநிலையம், சென்னை - 10 |
| சுந்தரமூர்த்தி. இ., | இலக்கியச்சுடர் அன்பு நூலகம், சென்னை - 5 |
| சுப்பிரமணியன். ச.வே., | தமிழ் இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப்பதிப்பகம், 33, திருமலை நகர் இணைப்பு பெருங்குடி, சென்னை. 1984 |
| ” | தமிழ் இலக்கியக் |

| | |
|---|---|
| | கொள்கைகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் தரமணி, சென்னை - 6100113. முதற்பதிப்பு 1983 |
| ” | கம்பன் இலக்கிய உத்திகள், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி - 1 1982. |
| ” | கம்பன் கற்பனை, தமிழ்ப்பதிப்பகம், 2. கால்வய்க்கரைச் சாலை, கஸ்தூரிபாய்நகர், அடையாறு, சென்னை - 600 020, 1978. |
| சுப்பிரமணிய முதலியார். சி.கோ., | திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணம் அருண்மொழி தேவர் என்னும் சேக்கிழார் அருளியது கோவைத்தமிழ்ச் சங்கம், கோயமுத்தூர். 1950 |
| சுப்பிரமணிய ஐயர். ஏ.வி., | தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, அமுத நிலையம், சென்னை 1971 |
| சுப்புரெட்டியார் ந. | கவிதையனுபவம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி - 6. 1976 |
| ” | அறிவுக்கு விருந்து |

| | |
|---|---|
| | செந்தில் குமரன் பதிப்பகம், திருப்பதி 1976 |
| ” | சிலநோக்கில் நாலாயிரம், பாரி நிலையம் 184, பிராட்வே, சென்னை - 600108. 1983 |
| ” | விட்டுசித்தன் விரித்ததமிழ் பாரி நிலையம், 184 பிராட்வே, சென்னை -600108 |
| ஜெயராமன். ந.வீ., | பாட்டியலும் இலக்கிய வகைகளும், இலக்கியப் பதிப்பகம், 12, அப்பாதுரையார் தெரு, தேனாம்பேட்டை, சென்னை - 18, 1981. |
| ஞானசம்பந்தன் அ.ச., | இலக்கியக் கலை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி 1964. |
| ஞானசுந்தரம் தெ., | வைணவ உரைவளம் தாயம்மை பதிப்பகம், 149, அண்ணாநகர் மேற்கு விரிவாக்கம், சென்னை - 600 101, 1989. |
| திருவரங்கத்தமுதனார் | இராமானுச நூற்றந்தாதி தீபிகையுரையுடன், மாடல் அச்சுக் கூடம், சென்னை 1929. |
| நடராசன். தி.சு., | திறனாய்வுக்கலை, நியூ |

| | |
|---|---|
| | செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 41, பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 98. 1996. |
| நாராயணையங்கார் திரு. (ப.ஆ) | மாறனலங்காரம், செந்தமிழ்ப் பிரசுரம், தமிழ்ச்சங்க முத்திரா சாலை, மதுரை. 1915 |
| பரமசிவம். சொ., | சேக்கிழாரின் இலக்கியத்திறன், பட்டுப்பதிப்பகம், 1269, அண்ணாநகர், சென்னை - 40. |
| பரிமேலழகர் (உ.ஆ) | திருக்குறள் பரிமேலழகர் உரை கழக வெளியீடு, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், 154, டி.டி.கே. சாலை, சென்னை - 18. 1998 |
| புருஷோத்தம நாயுடு பு.ரா., | ஆசார்ய ஹிருதய மூலமும் மணவாள மாமுனிகள் அருளிச் செய்த வியாக்யானத்தின் தமிழாக்கமும், சென்னை பல்கலைக்கழகம், 1965 |
| பிச்சமுத்து ந. | திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், சக்தி வெளியீடு, 156, |

வேங்கட ரங்கம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5

மார்கபந்து சர்மா எஸ்.ஆர்., — கபிலர் ஓவியம் தொல்காப்பியர் நூலகம், 202, ஜாஸ ஜான்கான் தெரு, சென்னை - 14. 1961.

” — சிலம்பில் கற்பனை, மணிவாசகர் நூலகம், 12.பி, மேலசன்னதி, சிதம்பரம், 1981.

ஸ்ரீநிவாச அய்யங்கார். ஸி.ஆர். — ஆழ்வார்கள் சரித்திரம், சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை, 1922.

லூர்து தே., — நாட்டார் வழக்காற்றியல், எஸ்மேரி (வெர்) திருநெல்வேலி 1975

வரதராஜன். ஜி. (உ.ஆ) — திருவாசகம் - விரிவுரை பழனியப்பா பிரதர்ஸ், சென்னை - 14. 1971.

வரதராசன். மு., — காலந்தோறும் தமிழ், தாயகம் வெளியீடு, சென்னை, 1985.

” — இலக்கிய மரபு, பாரி நிலையம், 59 பிராட்வே, சென்னை 1968

” — இலக்கியத்திறன், பாரி நிலையம் 59, பிராட்வே, சென்னை - 1 1965

”	இலக்கிய ஆராய்ச்சி, பாரிநிலையம், 59, பிராட்வே, சென்னை 1967.

வீராச்சாமி. த.வே., பெரியபுராணத்தில் உருக்காட்சி, அணிந்துரை தாயகம், பழனி, 1993.

வேதாத்ரி மகரிஷி யோகிராஜ் மனவளக்கலை தொகுப்பு -1 வேதாத்ரி பதிப்பகம், (உலக சமுதாய சேவா சங்கத்துடன் இணைக்கப்பட்டது.) ஈரோடு - 2, 14-ஆம் பதிப்பு, 1996.

வேலுப்பிள்ளை. ஆ. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழ் புத்தகாலயம், திருவல்லிக்கேணி, சென்னை 5. 1969.

வையாபுரிப் பிள்ளை. எஸ்., இலக்கியச் சிந்தனைகள், நூற்களஞ்சியம், தொகுதி - 1, வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம்.

## ENGLISH BOOKS

Abercrombie Principles of Literacy criticism, London victor Gollancz Ltd., 14, Henrietta street convent graden, Second Edition, May, 1935.

| | |
|---|---|
| Riddly M.R. (M.A) | Poetry and the ordinary reader, London G.Bill and sons Ltd., 1930. |
| Richards I.A. | Principles of Literacy Criticism London, Routledge kegan paul Ltd., Broadwau House, 68, 74 Carter Lane, E.C.4 Fourteenth Impression 1955. |
| Winchester C.T. | Some Principles of Literacy Criticism, Newyork, The Macmillan Company London, Macmillan & Co. Ltd., Fourth Printing 1950 |
| Eliot T.S. | A Theory of Poetry, Sourindra Mitra, Mittal Publication, Delhi 1985. |
| Caroline F.E. Spurgeopn., | Shakespeare's Imagery and what It Tells Us, Cambridge at the University Press, London, 1966. |
| Gurrey P., | The Appreciation of Poetry Oxford university Press, London : Geoffrey Cumberlege, 1935. |

# பின்னிணைப்பு

## காட்சிப்புல உருக்காட்சி

## பெரியாழ்வார் - திருமொழி

| | | |
|---|---|---|
| முற்றிலுந் | - | 1.2.19 |
| மாணிக்கங்கட்டி | - | 1.3.1 |
| உடையார் | - | 1.3.2 |
| மெய்திமிருநானப் | - | 1.3.9 |
| தன்முகத்து | - | 1.4.1 |
| சுற்றுமொளிவட்டம் | - | 1.4.3 |
| சக்கரக்கையன் | - | 1.4.4 |
| தாழியில் | - | 1.4.6 |
| உய்யவுலகு | - | 1.5.1 |
| மத்தளவுந் | - | 1.5.5 |
| காயாமலர் | - | 1.5.6 |
| செங்கமலக் | - | 1.5.10 |
| மாணிக்கக்கிண்கிணி | - | 1.6.1 |
| பன்மணிமுத்தின் | - | 1.6.3 |
| செக்கரிடை | - | 1.7.2 |
| மின்னுக்கொடி | - | 1.7.3 |
| முன்னலோர் | - | 1.7.5 |
| படர்பங்கய | - | 1.7.7 |
| பக்கங்கருஞ்சிறு | - | 1.7.8 |
| வெண்புழுதி | - | 1.7.9 |
| பொன்னியற்கிண்கிணி | - | 1.8.1 |
| செங்கமலப்பூவில் | - | 1.8.2 |
| கழல் மன்னர் சூழ | - | 1.8.5 |
| வட்டு நடுவே | - | 1.9.1 |
| கிண்கிணி கட்டி | - | 1.9.2 |

பெருமாள் திருமொழி

| | |
|---|---|
| இன்னுயர்க்கேழையர் | 7-7-4 |
| காண்மின் | 7-7-7 |
| கோளிழைக் தாமரையும் | 7-7-8 |
| கொள்கின்ற | 7-7-9 |
| அங்கண் மலர் | 7-8-2 |
| கண்கள் சிவந்து | 8-8-1 |
| கூட்டுண்டு நீங்கிய | 9-5-7 |
| பண்புடை வண்டொடு | 9-5-9 |
| ஆருயிர்பட்டது | 9-6-9 |
| தாளதாமரை | 10-1-1 |
| மணித்தடத்தடி | 10-1-9 |
| கடுவினை | 10-2-8 |
| மாய்ந்தறும் | 10-2-10 |
| வகையால் | 10-4-10 |
| நாபீர்நாடொறும் | 10-5-5 |
| வானேறவழிதந்த | 10-6-5 |
| மெய்நின்று கமழ் | 10-6-8 |
| நாரணன் தாமரை | 10-9-2 |
| முனியேநான் முகனே | 10-10-1 |

**கேள்விப்புல உருக்காட்சி**

**பொரியாழ்வார் திருமொழி**

| | |
|---|---|
| தொடர் சங்கிலிகை | 1-7-1 |
| படர்பங்கய | 1-7-7 |
| பொன்னியற் கிண்கிணி | 1-8-1 |
| ஓடவோடக் கிண்கிணிகள் | 1-8-10 |
| நாந்தகஞ்சங்கு | 4-1-2 |
| அலம்பாவெருட்டாக் | 4-2-1 |

**திருப்பாவை**

| | |
|---|---|
| ஆழிமழைக் கண்ணா | 4 |
| புள்ளும் சிலம்பின காண் | 6 |

திருவிருத்தம்

| | |
|---|---|
| இறையோவிரக்கினும் | 62 |

திருவாய்மொழி

| | |
|---|---|
| சதிரிளமடவார் | 2-10-2 |
| சூழ்விசும் பணிமுகில் | 10-9-1 |
| நாரணன் தமரை | 10-9-2 |
| எதிரெதிரிமையவர் | 10-9-4 |

முகர்வுப்புல உருக்காட்சி

பெரியழ்வார் திருமொழி

| | |
|---|---|
| பாலொடு நெய் | 1-5-9 |
| தெருவின் கண் | 2-7-4 |

திருப்பாவை

| | |
|---|---|
| தூமணிமாடத்து | 9 |
| உந்து மதகளிற்றன் | 18 |

நாச்சியார் திருமொழி

| | |
|---|---|
| வானிடை | 1-5 |
| மாதிவ தேர் முன்பு | 5-3 |
| கருப்பூரம் | 7-1 |

அமலனாதிபிரான்

| | |
|---|---|
| கையினார் | 7 |

பெரிய திருமொழி

| | |
|---|---|
| வாலிமாவலத்து | 1-2-1 |
| பேசுமின் | 1-8-9 |
| வசையில் நான்மறை | 5-3-3 |
| பண்டிவ் வைய மளப்பான் | 5-4-3 |
| கஞ்சனெஞ்சுங் | 5-4-7 |
| அம்பரமும் | 6-6-1 |
| வையமெல்லா | 8-8-7 |

பெரிய திருமொழி

| | |
|---|---|
| வாதைவந்தடர | 9-1-3 |

| | |
|---|---|
| தோடவிழ் | 9-2-2 |
| சிரமுனைந்துமைந்தும் | 9-6-4 |
| வணங்கலிலரக்கன் | 9-8-5 |
| எவ்வநோய் | 9-10-2 |
| ஏறுமேறியிலங்கு | 9-10-4 |
| கன்றுகொண்டு | 9-10-7 |
| மணங்கள் நாறும் | 10-3-4 |

**இரண்டாந் திருவந்தாதி**

| | |
|---|---|
| வரைச்சந்தனக்குழம்பும் | 76 |

**திருவாய்மொழி**

| | |
|---|---|
| மல்லிகை கமழ் | 9-9-1 |
| புகலிட மறிகிலம் | 9-9-2 |
| பணிமொழி | 10-3-5 |
| குரை கழல்கள் | 10-6-7 |
| வேள்வியுள் | 10-9-6 |

**நுகர்வுப் புல உருக்காட்சி**

**திருப்பல்லாண்டு**

| | |
|---|---|
| நெய்யிடை | 8 |

**பெரியாழ்வார் திருமொழி**

| | |
|---|---|
| என்சிறுக்குட்டன் | 1-4-2 |
| கன்னற்குடந்திறந்தா | 1-7-4 |
| கண்ணைக்குளிர | 2-3-11 |
| செந்நெலரிசி | 2-9-7 |
| கன்னலிபட்டுவத்தோடு | 2-9-9 |

**நாச்சியார் திருமொழி**

| | |
|---|---|
| எழிலுடைமனையீர் | 11-2 |
| ஆரேயுலகத்தாற்றுவார் | 13-4 |

**பெருமாள் திருமொழி**

| | |
|---|---|
| தேட்டருந்திறல் தேனினை | 2-1 |
| கொங்குமலி | 8-3 |

**திருவாய்மொழி**



**மனவுணர்வு உருக்காட்சி**

திருப்பல்லாண்டு



**நாச்சியார் திருமொழி**



**பெருமாள் திருமொழி**

**பெரிய திருமொழி**

**திருக்குறுந்தாண்டகம்**



**திருநெடுந்தாண்டகம்**



**இரண்டாந்திருவந்தாதி**